# இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும்

மு.அப்துல் சமது





உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும்

பேராசிரியர் மு. அப்துல் சமது
விரிவுரையாளர்
ஹாஜி கருத்த ராவுத்தர் கல்லூரி
உத்தமபாளையம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்,
தரமணி, சென்னை-600 113

ஏ.வி.எம். ஜாபருதீன் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர்-ஏ.வி.எம். ஜாபருதீன் நூர்ஜஹான்
அறக்கட்டளையினர்)

*வரிசை எண்* : **4** *நாள்* : **11.10.2004**

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Islāmiyath Tamilp Putinankaḷ Cittirikkum Aṟiyappaṭāta Vāḻvum Paṇpāṭum. |
| Author | : | Prof. M. Abdul Samad<br>Lecturer<br>Haji Karutha Ravuthar College<br>Uttamapalayam |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113.<br>Ph: 22542992 |
| General Editor | : | D. Boomi Naganathan<br>Research Assistant<br>Department of Manuscriptology<br>International Institute of Tamil Studies. |
| Publication No. | : | 520 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | viii + 128 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.40/- (Rupees Forty Only) |
| Printed by | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Mylapore, Madras-600 004<br>Ph. 24661807 |
| Subject | : | Research On Fiction |

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113.

## அணிந்துரை

இலக்கிய வகைகளுள் சமுதாயத்தோடு பெருந்தொடர்பு கொண்டு இலங்குவது நாவல் இலக்கியம் ஆகும். அனைத்து ஊடகங்களிலும் இதனது ஆளுமையைக் காணலாம். நாவல் இலக்கியத்திற்கெனத் தனிவரலாறு உண்டு. பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் மக்களிடையே ஏற்பட்ட அறிவியல் சிந்தனைகளே புதினம் (நாவல்) என்ற இலக்கிய மலர் மலர்ந்து மணம் வீசக் காரணமாயிற்று.

புதினம் உரையாடல் அமைந்த கதையாகும். ஒரு விரிவான கதை, அதை நடத்திச் செல்லக் கதைமாந்தர், அவர்களுக்கு ஏற்படும் அனுபவங்கள், ஏதேனும் ஒரு குறிக்கோள், நடை, அழகு ஆகியன கொண்டு திகழ்வது புதினம் எனலாம். புதின ஆசிரியர்கள் தம் குறிக்கோளை அல்லது கருவை விளக்க ஒரு கதையை உருவாக்கி, அதனுள் மாந்தர் படைப்புகளை அடக்கி, அவற்றோடு கதைப்பின்னல், பின்புலம் ஆகியவற்றை இயைபுற அமைத்துத் தம் நடையாற்றலால் சிறப்படையச் செய்கின்றனர்.

சமுதாயத்திற்கும் மனித வாழ்க்கைக்கும் உள்ள தொடர்பின் அடிப்படை கொண்டு சமூக நாவல்கள், வரலாற்று நாவல்கள், களிப்பூட்டும் கற்பனை உலக நாவல்கள் எனப் பல நாவல்கள் படைப்பாளிகளால் படைக்கப்படுகின்றன. இவ்விலக்கியவகை வரலாற்றுப் புதினங்கள், உரிமைப் போராட்டப் புதினங்கள், குடும்பச் சிக்கற் புதினங்கள், வட்டாரப் புதினங்கள், சாதியப் புதினங்கள், பெண்மைப் புதினங்கள், அரசியற் புதினங்கள், திரைப்படப் புதினங்கள், உளவியற் புதினங்கள், சமயப் புதினங்கள், மொழிபெயர்ப்புப் புதினங்கள் எனப் பலவகையாக விரிந்து கிடப்பதைக் காணலாம். இந் நூலுள் பேசப்படுகின்ற கதைகள் அத்தனையுமே இஸ்லாமியச் சமூகத்தைச் சார்ந்த மக்களின் மன அழுத்தங்களை வெளிப்படுத்தும் கதைகள் ஆகும்.

நிலவுடைமைச் சமுகம், சமூக அங்கீகாரம் பெற்ற உயர் தனக் குடிகள் போன்றவை யெல்லாம் சமயத்தின் மீது ஆதிக்கம் செலுத்தும் போது எதிர்கொள்ளும் சமூகச் சிக்கலையும் அதன் விளைவாகச் சமூகத்தில் ஏற்படும் பண்பாட்டுப் பரிமாற்றங்களையும், சடங்கியற் சிக்கல்களையும் மையமாகவைத்து **இஸ்லாமியத் தமிழ்ப்புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும்** என்ற பொருண்மையில் அமையப் பெற்ற இவ்

அறக்கட்டளை நூலைப் பேராசிரியர் அப்துல் சமது அவர்கள் நுணுகிய ஆய்வுப் போக்கில் உருவாக்கியுள்ளமை அறிந்து இன்புறத்தக்கது; பாராட்டுதற்குரியது.

இஸ்லாமியச் சமூக அடித்தட்டு மக்களின் உள்ளத்து உணர்வுகளையும், இன்றும் நடைபெற்றுக் கொண்டிருக்கும் பொருளாதார, சமூக ஆளுமைகளையும் எடுத்துக் காட்டி, வளர்ந்து வரும் இளைய தலைமுறை படும் துயரைச் சித்திரித்துக் காட்டுவதன் மூலம் ஒரு பக்கம் அவலக் காட்சியையும் மறுபக்கம் அவற்றைப் போக்க எழும் புரட்சிச் சிந்தனைகளையும் படம்பிடித்துக் காட்டுகிறார். ஆசிரியர் இஸ்லாமிய மக்களின் மாண்புறு மத உணர்வுகளையும், அப்பெருமக்களின் மன இயல்புகளையும் வரைபடம் இட்டுக் காட்டியிருப்பது இந்நூலுக்குச் சிறப்பு மட்டும் அன்று; சமூக நோக்குப் பற்றி ஆய்வு செய்வோர் இப்படித்தான் செய்ய வேண்டும் என்பதற்கோர் அரிய வழிகாட்டுதல் என்றும் கூறலாம். அரிய இஸ்லாமியப் பண்பாடுகளை உலகறியச் செய்ய இவ்வறக்கட்டளை நூல் பெரிதும் பயன்படும் என்றால் மிகையில்லை.

இவ்வறக்கட்டளைச் சொற்பொழிவுக்குப் பொறுப்பாளராக இருந்து இந்நூல் வெளிவருவதற்கு ஒத்துழைப்பு நல்கிய நிறுவனத்தின் இலக்கியம் மற்றும் சுவடிப்புல ஆராய்ச்சி உதவியாளர் திரு த. பூமிநாகநாதன் அவர்களின் பணி குறிப்பிடத்தக்கதாகும். இந்நூலுக்கு மெய்ப்புத் திருத்தம் செய்ய உதவி புரிந்த உலகத்தமிழாராய்ச்சி நிறுவன திட்டக் கல்வியர் முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கு நன்றி.

இந் நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வி மற்றும் வணிகவரித் துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் **திருமிகு பு.ஏ. இராமையா இ.ஆ.ப.,** அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் **திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த கணிப்பொறி உதவியாளர் திருமதி பி. கௌசல்யாவிற்கும், அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் பாராட்டுகள்.

இயக்குநர்

சென்னை
08-10-2004



## ஆசிரியரைப் பற்றி

1. *மு. அப்துல் சமது*, M.A., M.Phil.
2. பணி : தேர்வுநிலை விரிவுரையாளர், தமிழ்த்துறை, ஹாஜி கருத்த ராவுத்தர் ஹவுதியா கல்லூரி, உத்தமபாளையம்.
3. வெளியிட்ட நூல்கள் : 4

(i) இஸ்லாத்தில் மனித மதிப்பு

(ii) தமிழ் முஸ்லிம்களின் வீரச்சுவடுகள்

iii) தியாகத்தின் நிறம் பச்சை (இந்திய விடுதலைக்கு இஸ்லாமியர் பங்களிப்பு)

(iv) சக்கராப்பள்ளி தந்த செம்மல்

4. தொகுப்பு நூல்கள் : 2

(i) காணாமல் போன ஒட்டகம் (கட்டுரை)

(ii) அல்-ஹிக்மா அறிவுக் கருவூலம் (கட்டுரை)

5. ஆய்வுக்கட்டுரைகள்
சர்வதேச, தேசிய, மாநில, பல்கலைக் கழக அளவிலான கருத்தரங்குகளில் பங்கேற்று வாசித்த கட்டுரைகள் : 18
6. இஸ்லாமிய இதழ்களில் தொடர்ந்து எழுதிவரல்.
ஆனந்த விகடன், தாமரை, திணை இதழ்களில் சிறுகதைகள் வெளிவந்துள்ளன.
7. அகில இந்திய வானொலி - நாகர்கோவிலில் 8 சிறுகதைகள் ஒலிபரப்பாகியுள்ளன.
8. 'விண்' தொலைக்காட்சியில் ஞாயிறுதோறும் இரவு 9.30 மணிக்கு ஒளிபரப்பாகும் 'அலசல் அரங்கம்' நிகழ்ச்சியை நெறியாளராக இருந்து நடத்தி வரல்.
9. இலக்கிய, சமய சொற்பொழிவுகளுக்காவும், கருத்தரங்குகளுக்காகவும் மலேசியா, சிங்கப்பூர், இலங்கை, மஸ்கட் (சுல்டானேட் ஆஃப் ஓமன்) ஆகிய வெளிநாடுகளுக்குச் சென்று வந்தமை.
10. விருதுகள்
    1. சென்னை சீதக்காதி அறக்கட்டளையின் 'செய்கு சதக்கத்துல்லா அப்பா இலக்கிய விருது (2001);
    2. தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றமும், நியூ செஞ்சுரி புத்தக நிறுவனமும் இணைந்து வழங்கிய மாநில விருது (1998)
    3. சிறந்த நாட்டு நலப்பணித்திட்ட (NSS) அதிகாரிக்கான விருது (1992-93)

# என்னுரை

தமிழக வரலாற்றில் 7 முதல் 10ஆம் நூற்றாண்டுகள் வரை சமயப் போராட்டங்கள் மிகுந்திருந்த காலச்சூழலாகும். சைவமும் வைணவமும் தங்களுக்குள் நிகழ்த்திக்கொண்ட கருத்தியல் மோதல்களும், அரசுக் கட்டிலில் கோலோச்சிய சமணத்தைத் தமிழ் மண்ணிலிருந்து துடைத்தெறிந்த சமய - அரசியல் கூட்டு முயற்சிகளும் இக்காலகட்டத்தின் சமயப் போராட்டப் பதிவுகளாக உள்ளன. இக்காலச் சூழலில்தான் இஸ்லாம் தமிழகத்தில் வேர் பிடித்தது. ஆனால் இஸ்லாத்திற்கு எதிராகவோ, இஸ்லாமியருக்கு எதிராகவோ எவ்வித எதிர் நிகழ்வுகளையும் இக்கால வரலாற்றில் ஒரு புள்ளி அளவிற்குக்கூட காண இயலாது. இதற்கு என்ன காரணம்?

தங்கம் விற்கும் சோனகர்களாவும், குதிரைவிற்கும் இராவுத்தர்களாகவும், இறக்குமதி வர்த்தகர்களான மரக்காயர்களாவும் தமிழ் மண்ணில் காலடி வைத்த முஸ்லிம்கள், தங்கள் நேர்மையான வியாபாரத்தின் மூலமும், வேறுபாடற்ற பழக்க வழக்கப் பரிமாற்றங்கள் மூலமும் தமிழக மக்களிடம் ஒரு நம் பகத்தன்மையை ஏற்படுத்தியிருந்தனர். முஸ்லிம் வர்த்தகர்களுடன் தமிழகத்திற்கு வருகை தந்த இஸ்லாமிய மார்க்க அறிஞர்களுக்கு இந்த நம்பகச் சூழல் சமயப் பிரச்சாரத்திற்குச் சிறந்த களம் அமைத்துக் கொடுத்தது. எனவே, தமிழக மக்களிடம் முஸ்லிம்கள் வியாபாரத்தின் மூலம் ஏற்படுத்தியிருந்த நம்பகத்தன்மை-பழக்க வழக்கம் - கலத்தல் சூழல் என்பன, சமயப் போராட்டங்கள் மலிந்திருந்த காலச் சூழலிலும் இஸ்லாம் ஓர் அங்கீகாரத்துடன் வளரக் காரணங்களாக இருந்தன.

இவ்வாறு தமிழ் மண்ணில் நல்ல புரிதல்களுடன் வாழ்ந்த முஸ்லிம்கள், காலம் செல்லச் செல்ல, தங்கள் எண்ணிக்கைப் பெருகப் பெருக, தங்களுக்கென்று தனியாக அமைத்துக் கொண்ட குடியிருப்புகள்-வாழ்வியல் எல்லைகளால் பிற சமுதாயத்தவரிடமிருந்து தங்களைத் தனி அடையாளமாக்கிக் கொண்டனர். இதனால் காலம் காலமாகத் தம்மோடு வாழும் முஸ்லிம்களின் சமூக வாழ்வியல் பற்றிய சரியான புரிதல்கள் பிற தமிழ் மக்களுக்கு இன்றுவரை சரியாக ஏற்படவில்லை. தேசிய

அளவில் பாப்ரி மஸ்ஜித் இடிப்புக்குப் பின் ஏற்பட்ட நெருக்கடிகள் பிற சமய மக்களிடம் முஸ்லிம்களுக்கு இருந்த கலத்தல் சூழல்களையும் வெகுவாகக் குறைத்து விட்டன. இதனால் முஸ்லிம்களைப் பற்றிய அறிதல்கள் குறைந்து வருவதோடு, தவறான புரிதல்களும் ஏற்பட்டு வருகின்றன.

இத்தகைய விரிசல்களை அடைத்து, மனங்களுக்கு இடையில் எழுந்து நிற்கும் சுவர்களை உடைத்தெறிய வேண்டிய அவசியம் உடனடித் தேவை. வாழும் சமூகங்களுக்கு இடையிலான புரிதல்களும் கலத்தல் சூழல்களுமே வருங்காலத்தில் ஒற்றுமையான, அமைதியான வாழ்விற்கு வழிவகுக்கும். அத்தகைய சூழல் உருவாக்க முயற்சிகளில் ஒன்றுதான் இவ்வாய்வு.

பொருளாதார அந்தஸ்து பெற்ற குறிப்பிட்ட சதவிகிதத்தினரைப் பார்த்துவிட்டு ஒட்டுமொத்தத் தமிழ் முஸ்லிம் சமுதாயமும் சிறப்பாக வாழ்கிறார்கள் என்ற கருதுகோளும் தமிழ் சமுதாயத்தில் உண்டு. பிற சமுதாயங்களுக்குள் இருப்பது போன்ற பொதுப் பிரச்சனைகளும், சமுதாயம் சார்ந்த தனிச்சிக்கல்களும் மு:ஸ்லிம் சமுதாயத்திலும் உண்டு என்பதையும்;சமய-சமுதாயம் சார்ந்த அவர்களது வாழ்வியல் சிறப்புக்களையும், வாழும் சூழலுக்கு ஏற்ப அவர்கள் பிற சமுதாயத்தாரிடம் இருந்து உள்வாங்கிக் கொண்டதும், விடுதல்களுமான அம்சங்களையும் குறித்த சுருக்கமான ஆய்வை எண்பதுகளில் வெளியான இஸ்லாமிய சமூகப் பின்புல நாவல்களின் தரவுகளைக் கொண்டு இங்கு ஆராயப்பட்டுள்ளது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பாக நடைபெறும் 'ஏ.வி.எம். ஜாஃபர்தீன் அறக்கட்டளை சொற்பொழிவு'க்காக என்னை இம்முயற்சியில் ஈடுபடுத்திய 'கலைச்சொல்லாக்க அறிஞர்' மணவை முஸ்தபா அவர்களுக்கும்; இந்த வாய்ப்பை எனக்கு வழங்கிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கும் அதன் இயக்குநர் முனைவர் சா.கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், எனது மனதிற்குள் மழை பொழியும் நன்றிகள். இஸ்லாமியத் தமிழிலக்கியப் பரப்பில் விரிந்து கிடக்கும் வாழ்வியல் விழுமியங்களையும்-சிந்தனைகளையும் பதிப்பித்து வெளியிடும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டு வரும் அல்ஹாஜ், ஏ.வி.எம். ஜாஃபருதீன் அவர்கள், எமக்கு இவ்வாய்ப்பு வாசலைத் திறந்து வைத்தமைக்கு எனது நன்றிகளும் இறை வேண்டல்களும்.

அன்புடன்

மு. அப்துல்சமது

# உள்ளே

# முன்னுரை

ஒரு சமூகம் தன்னை அடையாளப் படுத்திக் கொள்வதற்கான வாழ்வியல் கூறுதான் பண்பாடு. இப் பண்பாடு சார்ந்த வாழ்வியல் விழுமியங்களையும், வாழ்வின் அகம்-புறம் சார்ந்த நடைமுறை நெறிகளையும் காரண காரியங்களுடன் உள்வாங்கி இருக்கும் நாடு, இனம், சமயம், மொழி, புவியியல், வட்டாரம், தொழில் அடிப்படையில் ஒரு மனிதனை அடையாளப் படுத்தும். பொதுவாகப் பண்பாட்டினைப் பொருள் சார்ந்த பண்பாடு (Material Culture), பொருள் சாராப் பண்பாடு (Non-Material Culture) என்று பகுத்துப் பேசுவர். ஒரு சமூகத்தின் பண்பாட்டில் அச்சமூகத்திற்கே உரிய தனித்தன்மைகளும், எல்லாச் சமூகத்திற்குமான பொதுத் தன்மைகளும் அடங்கி இருக்கும். வேறு வேறு சமூகப் பழக்க வழக்கங்கள் கலந்து புதிய பண்பாடும் உருவாகும்.

இப்பண்பாடு மரபுவழிப்பட்ட வழக்கங்களையும் நவீனத்துவங்களின் வருகையால் உருவான புதிய வழக்கங்களையும் உள்ளடக்கி இருக்கும். என்றாலும் இதுதான் பண்பாடு என்று வரையறுத்துக் கூற முடியாதபடி விரிந்த பொருளுடையதாகப் பண்பாடு அமையும். ஏனென்றால் அதில் நிலைபேறுடைய கூறுகளும் மாற்றத்திற்கு உள்ளாகும் கூறுகளும் இருக்கின்றன.

ஒரு சமூகத்தின் வாழ்வும் பண்பாடும் குறித்து ஆயும் போது, சமகாலத்தில் அச்சமூகம் தன்னை எப்படி வெளிப்படுத்திக் கொள்கிறது, எத்தகைய மரபு வழிப்பட்ட பண்பாட்டுக் கூறுகளிலிருந்து அது தன்னை வளர்த்துக் கொண்டுள்ளது, எத்தகைய புதிய கூறுகளை அது உள்வாங்கியுள்ளது, தான் வாழும் சக சமூகச் சூழலிலிருந்து அது பெற்றுக் கொண்டதும் கொடுத்துக் கொண்டதும் என்ன, அச்சமூகத்திற்கே உரிய தனித்தன்மைகள் என்ன, எத்தகைய கூறுகளை அது இழந்திருக்கிறது, பிற சமூகங்களால் அறியப்படாத வாழ்வையும் பண்பாட்டையும் அது எவ்வாறு தன்னுள் வைத்திருக்கிறது, அந்தச் சமூகத்தவரே அறியாத பண்பாட்டுக் கூறுகளில் எவற்றையெல்லாம் அது இழந்திருக்கிறது, அந்தச் சமூகத்தைச் சார்ந்து பிறபகுதிகளில் வாழும் மக்கள் கூட அறியாத எத்தகைய பண்பாட்டுக் கூறுகளை அது வட்டாரச் சார்பில் கொண்டுள்ளது என்பன போன்ற விரிந்த ஆய்வுக்கு அது இடம் தருகிறது.

தமிழ் முஸ்லிம் சமூகம் இத்தகைய எல்லா விதமான அணுகுமுறைகளிலும் ஆய்வு செய்யும் அளவிற்குத் தன்னைச் சில தனித்தன்மைகளால் நிலைநிறுத்தியும், கால மாற்றத்திற்கு ஏற்பத் தன்னைச் சில கூறுகளில் மாற்றியும் வந்துள்ளது. இது குறித்த ஆழமான ஆய்வு இன்று தேவை. இந்த ஆய்வைத் தமிழ் முஸ்லிம் சமூக ஆய்வு மூலமும் இலக்கிய ஆய்வு மூலமும் மேற்கொள்வதற்கு உரிய வாய்ப்புள்ளது. இங்குத் தமிழ் முஸ்லிம் சமுதாயத்தைக் களமாகவும் கருவாகவும் கொண்டு எழுதப்பட்ட புதினங்களின் தரவுகளைக் கொண்டு ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஆய்வுக்கு ஓர் எல்லை வரையறுக்க வேண்டும் என்ற அடிப்படையில் இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் அதிகமாக வர ஆரம்பித்த 1980களில் (1980-1989) வெளியான பத்தாண்டுப் புதினங்கள் மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

இஸ்லாமியத் தமிழ் புதினங்களின் வரலாற்றை இலங்கையில் தோன்றிய சித்தி லெப்பை மரக்காயரின் அசன்பேயின் சரித்திரத்தில் இருந்து ஆரம்பிக்கும் மரபு உள்ளதால், இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் என்றால் தமிழகத்தில் மட்டுமல்லாமல் இலங்கையிலும் தோன்றிய இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்களை உள்ளடக்கிப் பார்க்க வேண்டியுள்ளது. ஏனென்றால் வாழ்விலும் பண்பாட்டிலும் பல பொதுத் தன்மைகளைக் கொண்டனவாகவே தமிழக - இலங்கைத் தமிழ் முஸ்லிம்களின் வாழ்க்கை உள்ளது. மேலும் மொழியாலும் மதத்தாலும் ஒன்றாக உள்ள இருபகுதி மக்களின் தனித்தன்மைகளையும் பொதுத் தன்மைகளையும் ஒப்பிட்டு ஆய்வதற்கும் வாய்ப்புள்ளது. எனவே தமிழகம், இலங்கையில் வெளியான இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

அறியப்படாத தமிழ் முஸ்லிம்களின் வாழ்வும் பண்பாடும் குறித்த இவ்வாய்வில், தரவுகள் பட்டியலிடப்படாமல், தமிழ் முஸ்லிம்களின் சமூக-கல்வி-பொருளாதாரம் சார்ந்த வளர்ச்சிப் போக்கில் அதனுடைய வாழ்வும் பண்பாடும் குறித்து ஆராயப்பட்டுள்ளது. தமிழ் முஸ்லிம் சமுதாயத்தின் சமகால வளர்ச்சி சார்ந்த கட்டமைப்பில் அது விட்டுவிட்ட, புதிதாக ஏற்றுக் கொண்ட பண்பாட்டுக் கூறுகள் பற்றியும், நவீனத்துவங்களின் வருகையால் தன்னுள் புனரமைத்துக் கொண்ட கூறுகள் பற்றியும், சக சமூகத்தவருடனான கலப்புச் சூழலில் பெற்றுக் கொண்ட, அவற்றிலிருந்து இன்று விலக்கிக் கொண்ட அம்சங்கள் என்ன என்பது குறித்தும் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

# சமுதாய வளர்ச்சி சார்ந்து உருவான முரண்பாடுகள்

"ஒரு சமுதாய அமைப்பிலுள்ள முரண்பாடுகளும், அதனால் உருவாகிய வர்க்கங்களுக்கு இடையிலான போராட்டங்களும்தான் மனித சமுதாய வளர்ச்சிக்கும் வாழ்வியல் மேம்பாட்டுக்கும் நாகரிக உயர்வுக்கும் காரணமாய் அமைந்தன" என்பது காரல் **மார்க்ஸின்** கருத்து.[1] தமிழக, இலங்கை வாழ் தமிழ் முஸ்லிம் சமுதாயம் தன்னுள் வேர் பரப்பி நிற்கும் சமூக முரண்பாடுகளினால் தன்னை எவ்வாறு மேம்படுத்திக் கொண்டது என்பதை எண்பதுகளில் வெளியான இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்களின் சித்திரிப்புகளால் அறியலாம்.

வெளி உலகத்தால் அறியப்படாத பல சிக்கல்கள் இஸ்லாமியச் சமூக அமைப்பிற்குள் உண்டு. அச்சிக்கல்கள் வாழ்வியல் தளத்தில் பல நெருக்கடிகளையும் ஏற்படுத்தியுள்ளன. அச்சிக்கல்களுக்குத் தீர்வு தேடும் முனைப்புகள் பல முரண்பாடுகளை ஏற்படுத்திச் சமுதாய மாற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் வழிவகுத்துள்ளன. அம்முரண்பாடுகளைப் பின்வருமாறு ஆராயலாம்.

1. நிலவுடைமை - பொருளாதாரம் காரணமாக எழுந்த அதிகார முரண்பாடுகள்.
2. குடும்பம்-பாரம்பரியம் காரணமாக எழுந்த அந்தஸ்து முரண்பாடுகள்.

## 1. நிலவுடைமை – பொருளாதாரம் காரணமாக எழுந்த அதிகார முரண்பாடுகள்

இஸ்லாமியச் சமூக நாவல்கள் சித்திரிக்கும் சமுதாய அமைப்பில் நிலவுடைமை ஆதிக்கம், பொருளாதார ஆதிக்கம், அதிகாரத்துவ ஆதிக்கம் ஆகியன மேல் வர்க்கங்களாக இருந்தாலும் நிலம், வியாபாரம் சார்ந்த நிலவுடைமை, பொருளாதார ஆதிக்கங்களால் உருவான சமூக முரண்பாடுகளே அதிகம் காணப்படுகின்றன. குடும்ப - சமூக உறவுகளுக்கிடையிலான

பிரச்சினைகளுக்கும், சமூக வளர்ச்சிக்கும், மாற்றத்திற்கும் இட்டுச் செல்லும் இத்தகு முரண்பாடுகளைக் கீழ்க்காணும் நிலைகளில் அறியலாம்.

1. தமிழ் முஸ்லிம் சமூகத்தில் முதலாளித்துவ உருவாக்கம்
2. தொழில் அடிப்படையில் உருவான சமூக முரண்கள்
3. சமூக முரண்பாடுகளுக்கான காரணிகள்
4. மேலாதிக்கத்திற்கெதிரான எதிர்ப்பு குறைவுக்கான காரணங்கள்
5. மேலாதிக்கச் சரிவிற்கான காரணங்கள்
6. சமூக முரண்பாடுகளும் வாழ்வியல் மேம்பாடுகளும்

## தமிழ் முஸ்லிம் சமூகத்தில் முதலாளித்துவ உருவாக்கம்

நிலவுடைமை-பொருளாதாரம் காரணமாக எழுந்த அந்தஸ்து முரண்பாடுகளை ஆய்வு செய்ய வேண்டும் என்றால், முதலில் தமிழ் முஸ்லிம் சமூக அமைப்பில் முதலாளித்துவ உருவாக்கம், குறிப்பாக நில முதலாளித்துவ உருவாக்கம் எக்காலத்தில், எத்தகைய சூழலில் உருவானது என்பதை அறிய வேண்டும். தமிழகத்திலும் இலங்கையிலும் முஸ்லிம்களின் ஆரம்பக்கால அறிமுகமும் வருகையும் வர்த்தக சார்பில் தான் அமைந்தன. குதிரை வியாபாரிகளாகவும் தங்கம் விற்கும் சோனகர்களாகவும் வளைகுடாப் பிரதேசங்களில் இருந்து வந்த முஸ்லிம்கள் தமிழக - இலங்கைக் கடற்கரை சார்ந்த பகுதிகளில் செல்வாக்குப் பெற்றனர். இராவுத்தர், சோனகர், மரக்காயர் என இவர்கள் தமிழ் மண்ணில் புகழ் பெற்றனர். இலங்கையில் கடல்வாணிபத்தில் ஈடுபட்ட முஸ்லிம்களின் பாரம்பரியத்தைச் 'சோனகர்' என்று இன்றும் அழைப்பதைக் காணலாம். சோனகர் என்றால் தங்க வியாபாரி என்று பொருள். குதிரை வியாபாரிகளாக வந்த முஸ்லிம்கள் பின்னர்க் குதிரையைப் பராமரித்தல், பழக்கல், குதிரையேற்றப் பயிற்சி அளித்தல், குதிரைப்போர்ப் பயிற்சி அளித்தல் ஆகிய பணிகளில் தமிழக மன்னர்களால் நியமிக்கப்பட்டனர். தங்கள் ஆளுமையின் காரணமாகத் தமிழ் மன்னர்களின் படைகளில் குதிரை வீரர்களாகவும், குதிரைப்படைத் தளபதிகளாகவும் விளங்கினர். இவர்களே 'இராவுத்தர்' ஆவர். அரபு மொழியில் 'ராஇத்' என்றால் 'குதிரைவீரன்' என்று பொருள். இவ்வார்த்தை வடமொழியில் 'ராஹூத்' என்றும், தெலுங்கில் 'ரவுத்து' என்றும், தமிழில் 'இராவுத்தர்' என்றும் வழங்கப்பட்டது.[2]

கீழைக் கடற்கரைப் பகுதிகளில் கடல்சார்ந்த வர்த்தகர்களாகவும் முத்துக் குளிப்பவர்களாகவும் முத்துக்

குளித்துறைக்குச் சொந்தக்காரர்களாகவும் முத்து வியாபாரிகளாகவும் தமிழ் முஸ்லிம்கள் விளங்கினர். இதனால் கிழக்குக் கடற்கரைப் பகுதிகளில் வாழும் முஸ்லிம்களின் முன்னோர் 'முத்துவாப்பா' எனப் பெயர் பெற்றிருந்தனர்.[3]

தமிழ் முஸ்லிம்களின் முத்து வர்த்தகமும் கடல் வர்த்தகமும் போர்ச்சுக்கீசியரின் வருகைக்குப்பின் பாதிப்புக்குள்ளாயின. தங்கள் முத்துக் குளித்துறைகளையும் வர்த்தக உரிமைகளையும் தக்க வைத்துக் கொள்வதற்காகக் கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் தொடர் போராட்டங்களை முஸ்லிம்கள் சந்தித்தனர். கி.பி. 1524-இல் கீழைக்கடற்கரைப் பகுதிகளை முஸ்லிம்களிடமிருந்து போர்ச்சுக்கீசியர் கைப்பற்றினர். "கி.பி. 1538-இல் போர்ச்சுக்கீசிய தளபதி டிசோவ்சா (De Souza) நடத்திய பெரும் தாக்குதலில் ஒரே நாளில் (28-01-1538) 800 முஸ்லிம்கள் கொல்லப்பட்டனர்."[4]

இது போன்ற பல இழப்புகளால் முஸ்லிம்களின் கடல் வர்த்தகம் பாதிப்புக்குள்ளானது. எனவே, முஸ்லிம் வர்த்தகர்களில் ஒரு பகுதியினர் தமிழகத்தின் உட்பகுதிகளில் குடியேறி விவசாய நிலங்களை வாங்கி நில முதலாளிகளாயினர். வியாபாரம், விவசாயம் இரண்டிலும் கவனம் செலுத்தி முதலாளிகளான முஸ்லிம்களும் உண்டு. என்றாலும் தமிழகத்தில் நிலவுடைமை முதலாளிகளான முஸ்லிம்கள் குறைந்த சதவிகிதத்தினரே.

இலங்கைத் தமிழ் முஸ்லிம்களும் விவசாய நிலங்கள் சார்ந்த தனிச் சொத்துடைமையாளர்களாகக் கி.பி. 1500-க்குப் பின்னரே உருவாகினர். இவர்கள் ஆரம்பக் காலத்தில் கடற்கரை சார்ந்த வாணிபத்தையும் அவ்வாணிபம் தொடர்பான உபதொழில்களிலுமே ஈடுபட்டு வந்தனர். கி.பி. 1517-ஆம் ஆண்டளவில் அதிகார பலமடைந்த போர்ச்சுக்கீசியரின் அடக்குமுறைகளும் அதன்பின் டச்சுத் தளபதி ஒலாந்தரின் அடக்கு முறைகளும் இலங்கைக் கடற்கரை வாழ் முஸ்லிம்களின் சமய, சமுதாய அமைப்பைப் பெரிதும் பாதித்தன. குறிப்பாக முஸ்லிம்களின் வாணிபம் பெரிதும் நலிவடைந்தது. இதனால் கடற்கரைப் பகுதிகளிலிருந்து முஸ்லிம்கள் உள்நாட்டுப் பகுதிகளில் குடியேற ஆரம்பித்தனர். ஆளுவோரின் கெடுபிடிகளால் வாணிபத்தை நடத்த முடியாதவர்கள் நிலங்களை வாங்கி விவசாயத்தில் ஈடுபட்டனர். இதனால் 16-ஆம் நூற்றாண்டு முதல் இலங்கைத் தமிழ் முஸ்லிம் சமுதாய அமைப்பில் நில முதலாளிகள் உருவாகினர். இந்த உருவாக்கம் கிராமக் குடியிருப்புகள் சார்ந்த நில முதலாளித்துவ அமைப்பை உருவாக்கியது. இந்த நில

முதலாளிகள் 'போடியார்' என்று கிராமிய அமைப்பில் பெருமையுடன் அழைக்கப்பட்டனர்.[5]

தமிழகத்திலும், இலங்கையிலும் இவ்வாறு உருவான பொருளாதார அந்தஸ்து பெற்ற நில முதலாளிகள், வர்த்தகர்கள் சமுதாயத்தின் மேல்தட்டு வர்க்கத்தினராகக் கருதப்பட்டனர். அவர்களைச் சார்ந்து வாழ்ந்த முஸ்லிம் தொழிலாளர்கள், விவசாயக்கூலிகள், ஏழைகள் ஆகியோர் சமுதாயத்தின் கீழ்த்தட்டினராகக் கருதப்பட்டனர். ஆங்கிலேயரின் வருகைக்குப் பின்னரும் இந்திய - இலங்கைச் சுதந்திரத்திற்குப் பின்னரும் இஸ்லாமியச் சமுதாயத்தில் ஏற்பட்ட கல்வி வளர்ச்சி கீழ்த்தட்டைத் தலைநிமிர வைத்தது. கீழ்த்தட்டின் இவ்வளர்ச்சி மேல்தட்டிற்கு எதிரான சமூக முரண்பாடுகளைத் தோற்றுவித்தது.

## தொழில் அடிப்படையில் உருவான சமூக முரண்கள்

மனித சமுதாய வரலாற்றில் மனிதனைத் தரம் பிரிக்கக் காரணமாக இருந்த முக்கியக் காரணிகளில் ஒன்று தொழில் ஆகும். பாரம்பரியத் தொழில்களின் அடிப்படையில் மனிதனின் குலம் தீர்மானிக்கப்பட்ட மரபினை இந்தியச் சமூக வரலாற்றில் காணலாம். தமிழகத்திலும் இலங்கையிலும் கடற்கரை சார்ந்த பகுதிகளில்தான் முதலில் இஸ்லாம் பரவியது. முஸ்லிம்கள் இப்பகுதியில் கடல்சார்ந்த வர்த்தகத்தில் அதிகம் ஈடுபட்டதால் கடற்கரை சார்ந்த குடியிருப்புகள் அதிகரித்தன. கடல் வர்த்தகத்தில் ஈடுபட்ட முஸ்லிம்கள் பொருளாதாரத்தில் அந்தஸ்து பெற்ற முதலாளிகளாக மதிக்கப்பட்டனர். ஏழை முஸ்லிம்களில் ஒரு பகுதியினர் மீன்பிடித்தொழிலில் ஈடுபட்டனர். இவர்கள் செய்த தொழிலின் காரணமாக மற்ற முஸ்லிம்களை விடத் தாழ்வாகக் கருதப்பட்டதைச் சில நாவல்கள் சித்திரிக்கின்றன.

இது போன்றே முடிதிருத்தம் செய்தல், ஆண் குழந்தைகளுக்கு விருத்த சேதனம் (circumcision) செய்தல், குழந்தைகளுக்கு முதல் முடி இறக்கல், பூப்பு - திருமண - இறப்புச் சடங்குகளில் சில கிரியைகளைச் செய்தல் போன்றவற்றைக் குடும்ப வழியாகச் செய்து வருபவர்களை ஒசா- ஒசாத்தி என்று கன்னியாகுமரி, தூத்துக்குடி, நெல்லை போன்ற தென் மாவட்டங்களிலும் இலங்கையிலும் அழைக்கின்றனர். தேனி, திண்டுக்கல் மாவட்டங்களில் இவர்களை மாவி என்றும், தஞ்சை மாவட்டப் பகுதிகளில் இவர்களை உஸ்தா என்றும், பொதுவாகக் குடிமகன் - குடிமகள் என்றும் அழைக்கும் வழக்கம் உள்ளது.

சமுதாயத்தில் கடைநிலைத் தகுதியுடையவர்களாகவே இவர்கள் கருதப்படுகின்றனர். செய்யும் தொழிலின் காரணமாகச் சொந்தச் சமூகத்தவர்களையே தாழ்வாகக் கருதும் மனநிலை சமூக முரண்பாடுகளுக்குக் காரணமாக அமைந்துள்ளதை இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்கள் சித்திரித்துள்ளன.

தங்கள் வீட்டுக்கு மருமகனாக வந்தவரின் மைத்துனர் மீன்பிடித் தொழில் செய்பவர் என்பதால் அவரின் தகுதியை இழிவாக நினைத்தலும், நேரடியாக அதனைக் குத்திக் காட்டலும் (மூன்றாம் பிறை; பக்.17-18) இம்முரணைக் காட்டும். கீழ்த்தட்டு இளைஞன் படிப்பு, பதவி மூலம் மேல்தட்டில் மாப்பிள்ளையாக அங்கீகரிக்கப்பட்டாலும் அவனது குடும்பத் தொழிலை வைத்து முழுமையாக மரியாதை வழங்காமையும் இங்குக் கருதத்தக்கது.

சுறாப்பீலி இறக்கை வியாபாரம் செய்யும் மஹ்மூது, ஊர்த் தலைவரான முதலாளிக்கு மதிப்பளிக்காமல் நடந்து கொண்டதற்கு, 'சுறா இறக்கை வியாபாரி இவனுக்கு இவ்வளவு திமிரா?' (ஒரு கடலோர கிராமத்தின் கதை., ப.46) என்று சாதாரண மக்கள் பேசுவது, செய்யும் தொழிலின் காரணமாகச் சமுதாயத்தில் இவர்களுக்குள்ள மரியாதையை அளவீடு செய்ய உதவுகிறது.

வயிற்றுப் பிழைப்புக்காக எல்லோரிடமும் குழைந்து நின்று அவர்களது ஏச்சுகளைப் பொறுத்துக் கொள்ளும் குடிமகனான ஒசா பாத்திரத்தைத் தோப்பில் முகம்மது மீரானின் துறைமுகம் நாவல் சித்திரிக்கிறது. ஒசா மரபினர் எந்த அளவிற்கு நடத்தப்பட்டார்கள் என்பதை இப்பாத்திரப் படைப்பு வெளிச்சப்படுத்துகிறது. முதலாளி மிகச்சாதாரணமாக '. . போலெ' என்று ஒசாவைத் திட்ட, அவன் தலையைச் சொறிந்து கொண்டே குறுகி நிற்பது (ஒ.க.கி.க., பக்.104-105) மரபு வழியாக இவர்கள் சமுதாயத்தில் ஒதுக்கப்பட்ட மக்கள் என்பதை வெளிப்படுத்துகிறது.

மீன்பிடித்தல் போன்ற கடல் சார்ந்த தொழில்களில் ஈடுபடுவோரின் குடியிருப்புகள் ஊருக்கு ஒதுக்குப்புறத்தில் அமைந்திருந்த காட்சியைத் தோப்பில் முகம்மது மீரானின் ஒரு கடலோர கிராமத்தின் கதை, துறைமுகம் நாவல்கள் தருகின்றன. தேங்காய்ப்பட்டினம் என்ற கடற்கரைக் கிராமத்தில் இவர்கள் வாழ்ந்த பகுதியை மற்ற மக்களின் குடியிருப்புகளில் இருந்து பிரிக்க ஒரு குத்துக்கல்லு நாட்டப்பட்டிருந்த தகவல் கிடைக்கிறது. குத்துக்கல்லுக்கு மேற்கே உள்ளவர்கள் மேல் தட்டினராகவும், கிழக்கே உள்ளவர்கள் கீழ்த்தட்டினராகவும் கருதப்பட்டனர்.

ஊரின் முக்கியப் பெரிய மசூதியான மாலிக் இப்னு தீனார் பள்ளிவாசலில் தொழுகைக்கு அனுமதிக்கப்பட்டாலும், பள்ளிவாசல் மற்றும் ஊர் நிர்வாக விஷயங்களில் பேசும் உரிமை இவர்களுக்குக் கிடையாது. 'குத்துக்கல்லுக்கு கெளக்கே உள்ளவர்களுக்கு மாலிக் இப்னு தீனார் பள்ளியில் பேச உரிமையில்லை' (ஒ.க.கி.க., ப.22) என்ற மக்கள் குரலால் இதனை அறியலாம். மேலும் இவர்களுக்காகவே ஒரு தனிப்பள்ளிவாசல் இருந்தது. 'ஒற்றைப் பனைக்கும் குத்துக்கல்லுக்கும் கிழக்கே ஓலை வேய்ந்த மண் சுவர்களால் வளர்ந்த சிறு குடில்களில் வாழும் ஏழைகளுக்காக ஒதுக்கியது தான் குளத்துப்பள்ளி' (து.மு., ப.139). இந்தப் பள்ளியில் குத்துக்கல்லுக்கு மேற்கே ஓடு வேய்ந்த வீடுகளிலும் பங்களாக்களிலும் வாழும் குடும்பப் பெருமை வாய்ந்த பணக்காரர்கள் எவரும் கால் வைப்பதில்லை. குளத்துப் பள்ளிக்குத் தொழ வருவதை அவர்கள் கௌரவக் குறைவாக நினைத்தனர் (து.மு., ப.139).

இவ்வாறு சமூகத்தில் தாழ்ந்தவர்களாகக் கருதப்பட்டவர்களுள் கடல் சார்ந்த தொழில்களில் ஈடுபட்டவர்கள் மேல் தட்டிற்கு எதிராகப் பேச, செயல்பட ஆரம்பித்த மாற்றத்தையும் காணலாம். சுறா இறக்கை வியாபாரி மஹ்மூது முதலாளித்துவத்திற்கு எதிராகக் குரல் கொடுக்கிறார். ஊர்த் தலைவரான முதலாளியின் கெடு பிடிகளுக்கு உடன்பட மறுக்கிறார். 'எனக்கு வாப்பாக்க (தந்தை) காலத்துலே குத்துக்கல்லுக்கெ கிளக்கெ உள்ளவன் குத்துக்கல்லுக்கு மேக்கே வழி நடக்கமாட்டான். ஜமான் (காலம்) மாறிப் போச்சு. இன்னைக்கு ஜும்மா (வெள்ளிக் கிழமை நண்பகல் நடைபெறும் தொழுகை) பள்ளியிலெ அவனுக்குச் சத்தம் உயருது. அவனுங்க சத்தம் கேட்ட பள்ளியிலெ இனி நான் ஜும்மா தொழ மாட்டேன்'. (ஒ.க.கி.க., ப.224) என்று ஊர்த்தலைவர் அகமதுகண்ணு முதலாளி சீறுவதிலிருந்து ஒதுக்கப்பட்ட மக்கள் தங்கள் சுயமதிப்புக்காகப் பேச ஆரம்பித்தது வெளிப்படுகிறது.

ஆனால், குடிமகன் வேலை செய்யும் ஒசாமார் தங்கள் சமூக மதிப்புக்காக எத்தகு குரலும் எழுப்பவில்லை என்பதை நாவல்களின் வாசிப்பில் உணரலாம்.

ஜுனைதா ஷெரிபின் மூன்றாம் பிறை நாவல் முப்பது ஆண்டுகளுக்கு முந்தைய கதை நிகழ்வையும், தோப்பில் முகமது மீரானின் நாவல்கள் ஐம்பது முதல் நூறு ஆண்டுகளுக்கு முந்தைய கதை நிகழ்வுகளையும் காலப் பின்னணியையும் கொண்டுள்ளன.

இந்நாவல்கள் சித்திரிக்கும் இந்தச் சமூக ஏற்றத்தாழ்வு சமகாலத்தில் மாற்றம் பெற்றுள்ளது அல்லது குறைந்துள்ளது என்பது நடைமுறை உண்மை. மீன்பிடித் தொழிலில் ஈடுபட்ட தமிழக - இலங்கைவாழ் முஸ்லிம்களில் பெரும் பகுதியினர் இன்று அத்தொழிலை விட்டு விட்டனர். கல்வி, வேலை வாய்ப்பு, வளைகுடா நாடுகளில் வேலை, வியாபாரம் போன்ற வேறு வாய்ப்புகள் மூலம் சமூகத்தில் நடுத்தர வர்க்கமாக உயர்ந்துள்ளனர்.

குடிமகன் வேலையைப் பாரம்பரியமாகச் செய்பவர்களும் இன்று அத்தொழிலை விட்டு வேறு தொழில்கள் மூலம் தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தி வருகின்றனர். இதற்கு, மக்கள் மத்தியில் ஏற்பட்டுள்ள நவீனத்துவம் காரணமாக இவர்களை முடிவெட்டல் முதல் இதரகாரியங்களுக்கு அழைக்காததும், முஸ்லிம்களிடம் இருந்த பல சடங்கு சம்பிரதாயங்கள் குறைந்து வருவதும் காரணம் எனலாம். விருத்த சேதனத்தைக் கூட மருத்துவமனைகளில் சென்று செய்து கொள்ளும் வழக்கம் அதிகரித்து வருகிறது. என்றாலும் கிராமியச் சூழல்களில் இந்தப் பாரம்பரியத்தினரே இத்தகு வேலைகளை இன்றும் செய்து வருகின்றனர். இவர்களுக்குச் சமூகம் வழங்கும் மதிப்பு சரிநிகர் சமானம் என்று சொல்லுவதற்கில்லை. அதுபோன்று நாவல்களில் சித்திரிக்கப்படாத பாய்முடைதல், பீடிசுற்றல், தோல் தொழிற்சாலைகளில் வேலை செய்தல் போன்ற பணிகளில் காலம் காலமாக ஈடுபட்டு வரும் முஸ்லிம்களின் வாழ்க்கைத் தரமும் சமூக மதிப்பும் முன்னேற்றம் இல்லாமல் இருப்பதுதான் இன்றைய நிலை.

என்றாலும் இங்கு விவரித்த நாவல்கள் சித்திரிப்பது போன்ற வாழ்க்கைத் தரத்திலிருந்து மீன்பிடிப்போரும் குடிமகன்களும் இன்று உயர்ந்து ஓரளவு சமூக மதிப்பைப் பெற்றுள்ளனர் என்பது உண்மை. இதற்கு நாவல்கள் காட்டுவது போன்று கீழ்த்தட்டினராக நடத்தப்பட்டவர்கள் மேல்த்தட்டினரோடு பல நிலைகளில் முரண்பட்டதே காரணம் எனலாம்.

### சமூக முரண்பாடுகளுக்கான காரணிகள்

சமுதாயத்தில் இருப்பவனுக்கும் இல்லாதவனுக்கும் இடையே உருவாகும் உரசல்களே சமூக முரண்பாட்டிற்கான முக்கியக் காரணியாக அமையும். சமுதாயத்தில் மேல்தட்டின் ஆதிக்கப் போக்கும், கீழ்த்தட்டின் வளர்ச்சியும் சமூக முரண்பாடுகளை வளர்ப்பனவாக அமையும். இஸ்லாமியச் சமுதாய

நாவல்களில் காணலாகும் சமூக முரண்பாடுகளுக்கும் இவ்விரண்டுமே காரணிகளாக அமைகின்றன. அவற்றை இரு நிலைகளில் ஆராயலாம்.

1. முதலாளித்துவ மனப்பாங்கிற்கும் கல்வியறிவு வளர்ச்சியினால் ஏற்பட்ட மனப்பாங்கிற்கும் இடையிலான போராட்டம்.

2. முதலாளித்துவப் பெருமைகளைத் தக்க வைத்துக் கொள்பவர்களின் ஆதிக்கப் போக்குகள்.

முதலாளித்துவ மனப்பாங்கிற்கும் கல்வியறிவு வளர்ச்சியினால் முகிழ்த்த மனப்பாங்கிற்கும் இடையிலான போராட்டம் நாவல்களில் சமூக முரண்பாடுகளுக்கான முதன்மைக் காரணியாக அமைந்துள்ளது. இதனைக் கீழ்வரும் நிலைகளில் காணலாம்.

1. கல்வி வளர்ச்சி சமூகத்தில் புறக்கணிக்கப்பட்ட மக்களின் வாழ்வியல் மேம்பாட்டிற்கான வழிமுறை என்பதைப் படித்தவர்கள் வலியுறுத்தும் போது ஏற்பட்ட சிக்கல்கள்.

2. கீழ்த்தட்டு முஸ்லிம்கள் கல்வி, பதவி வாயிலாகப் பெற்ற பொருளாதார - சமூக அந்தஸ்தை, நிலங்கள் அல்லது வியாபார முதலாளிகளின் வர்க்கம் முழுமையாக அங்கீகரிக்க மறுத்தல்.

3. கல்வி, பதவி ஆகிய தகுதிகள் காரணமாகத் திருமண உறவுகள் மூலம் கீழ்த்தட்டை அங்கீகரிக்க வேண்டிய நிர்பந்தங்கள் மேல்தட்டிற்கு ஏற்பட்டாலும், அவர்களின் பழைய வாழ்க்கை நிலை அல்லது குடும்பத்தின் தற்போதைய சூழலை முன்னிறுத்திக் கீழாகப் பேசுதல் - நடத்துதல்.

அறியாமையின் காரணமாகக் காலங் காலமாகச் சமூகத்தில் பின்தங்கிய மக்களையும், முதலாளிகளின் ஆதிக்கப் போக்குகளுக்கு அடங்கிப் போகும் மக்களையும் மீட்டெடுக்கக் கல்வி வளர்ச்சி ஒன்றே வழி என்பதைப் புன்னியாமீனின் அடிவானத்து ஒளிர்வுகள்; ஜுனைதா ஷெரீபின் சரித்திரம் தொடர்கிறது, மூன்றாம் பிறை; தோப்பில் முகம்மது மீரானின் ஒரு கடலோர கிராமத்தின் கதை, துறைமுகம்; அ.ஸ. அப்துல்ஸமதுவின் பனிமலர் போன்ற நாவல்கள் முன்வைக்கின்றன. இச்சிந்தனையும் அதற்கு எதிரான விளைவுகளும் இந்நாவல்களில் போராட்டமாக வளர்த்தெடுத்துக் காட்டப்படவில்லை. சில உரசல்களோடு கதையைப் படைப்பாளிகள் நகர்த்தி விடுகின்றனர். தோப்பிலின் துறைமுகம் நாவலிலும், புன்னியாமீனின் அடிவானத்து ஒளிர்வுகள்

நாவலிலுமே இப்பிரச்சினை பேராட்டமாக வளர்த்தெடுக்கப் பட்டுள்ளது. படித்த இளைஞன் காசிம் இந்த இலட்சியத்திற்காகப் போராடும் போது எதிர்கொள்ளும் சிக்கல்கள் முதலாளித்துவத்திற்கு எதிரான முரண்பாட்டின் விளைவுகளாக அமைவதைத் துறைமுகத்திலும், மத்தியதர இளைஞர்கள் இயக்கமாகப் போராடிச் சாதிப்பதை அடிவானத்து ஒளிர்வுகளிலும் காணலாம்.

கல்வி, பதவி மூலம் கீழ்த்தட்டினர் பெற்ற வளர்ச்சியை முழுமையாக அங்கீகரிக்க மறுக்கும் மேல்தட்டு மனப்பான்மை பல நாவல்களில் வெளிப்பட்டுள்ளது.

தன்னிடம் வெள்ளாமை செய்த அலியார் அதிலிருந்து விலகியவுடன் இஸ்மாயில் போடியார், '. . இப்ப காலம் கெட்டுப் போய், அம்மி மிதக்குது அரசில தாழுதடா. அலியாண்ட பொடியன் ஒருவன் உத்தியோகமாயிற்றான். பொடிச்சொருத்தி. . . படிக்காள். மற்றப் புள்ளயெல்லாம் வெள்ளாமையை மறந்து படிப்புல நிக்குதுகள். நாம இனியும் வெள்ளாமைக்காரனாக இருப்பது மரியாத இல்ல எண்ட நினைப்பாலதான் அவன் என்ன உட்டு வெலகுறான் . . ." (பனிமலர், பக்.14-15) என்று பேசுவது கீழ்த்தட்டின் வளர்ச்சியை மனத்தளவில் கூட அங்கீகரிக்க மறுக்கும் மேல்தட்டு மனநிலையைப் புலப்படுத்துகிறது.

தன்வயல் வெளியில் பூச்சி விழுந்து நோயால் பயிர் பாதிக்கப்பட்டவுடன் தன்னிடம் முன்பு வேலை செய்தவரின் மகனான விவசாயத்துறை அதிகாரி ரஹீமைக் காரில் அழைத்துச் சென்று, காட்டி ஆலோசனை பெறும் இஸ்மாயில் போடியார், 'உங்கள் குடும்பமே எங்கிட்ட தொழில் செய்து வளர்ந்ததுதான். . .' என்று மட்டந்தட்டிப் பேசுவதும், தனது வெள்ளாமைக்காரனுடைய மகனைக் காரில் அழைத்து வந்து பெரிய மனிதனாக்கி அவனிடம் யோசனை கேட்க வேண்டியதாயிற்றே என்று மனங்குமுறுவதும் (ப.ம., ப.40) கீழ்த்தட்டின் வளர்ச்சியை முழுமையாக அங்கீகரிக்காத மேல்தட்டின் மன வெளிப்பாட்டைக் காட்டுகிறது.

கல்வி, பதவி மூலம் வளர்ந்து வரும் கீழ்த்தட்டினரைத் திருமண உறவுகள் மூலம் மேல் தட்டினர் ஏற்றுக் கொண்டாலும் அவர்களை முழுமையாக அங்கீகரிக்காமையும் முரண்களுக்குக் காரணமாகிறது. குடும்பத்தின் ஏழ்மைச் சூழல் காரணமாக வசதியான இடத்தில் மணமுடித்த தாஹிர், மேல்தட்டுப்

பெருமை-ஆணவப் போக்குகளால் பல்வேறு நிலைகளில் தாழ்வு படுத்தப்படுகிறான். 'என்னங்க செய்யலாம், தங்கச்சிமாரோட பொறந்த ஏழையா பொறந்துட்டேன். அனுபவிச்சுத்தானே ஆகணும்' என்று தன்னிலைக்காக வருந்துகிறான். இறுதியில் மனைவியோடும், மனைவி குடும்பத்தோடும் முரண்பட்டுப் போகிறான் (மூன்றாம் பிறை).

இப்படி, சுயதகுதிகள் காரணமாக மேல்தட்டில் திருமண உறவு மூலம் இணைந்தவர்கள் கூட முழுமையான அங்கீகாரம் பெறாமல் தாழ்வுபடுத்தப்படும் போது, மேல் தட்டோடு முரண்பட்டு மோதல்களைச் சந்திக்கின்றனர். இதே நிலையில் காதல் தொடர்பான வரவேற்புகளும் எதிர்ப்புகளும் பிரச்சினைகளுக்கு உள்ளாகின்றன. இத்தகு முரண்பாடுகள் எண்பதுகளில் வெளியான இலங்கை இஸ்லாமியச் சமூக நாவல்களில் ஒரு பொதுத் தன்மையாகவும் அமைந்துள்ளன.

முதலாளிகள் தங்கள் பாரம்பரியப் பெருமைகளைத் தக்க வைத்துக் கொள்வதற்காக ஆதிக்கப் போக்கில் நடந்து கொள்வது சமூக முரண்பாடுகளுக்கான முக்கியக் காரணியாக உள்ளது. தங்களுக்கு எதிரான சொல்லோ, செயலோ சமூக அமைப்பில் எழக்கூடாது. அவ்வாறு எழுந்தால் தங்கள் அதிகாரங்களைப் பயன்படுத்தி எதிர்ப்பவர்களை அடக்குதல் அல்லது அழித்தல் என்பது முதலாளிகளின் பொது விதியாக உள்ளது.

ஒரு கடலோர கிராமத்தின் கதையில் வரும் அகமது கண்ணு முதலாளி, ஒரு பேஷ் இமாம் பதவி ஏற்கிறாரில் வரும் ஊனா பீனா முதலாளி, பனிமலரில் வரும் இஸ்மாயில் போடியார், கனவுப்பூக்களில் வரும் முஸம்மில் மரக்காயர், மூன்றாம் பிறையில் வரும் மூசின் முதலாளி என இந்த முதலாளித்துவக் குணாதிசயத்தால் முரண்பட்டு நிற்போர் பட்டியல் நீளுகிறது.

தன்னை எதிர்த்தவர்களின் சொத்துகளை மிரட்டி எழுதி வாங்கி அவர்களை இல்லாதவர்களாகச் செயலிழக்க வைத்தல் (ஒ.க.கி.க., பக்.23-24), தனது விருப்பத்திற்கு மாறாக நடப்பவற்றை அழித்தொழித்தல் (ச.தொ., பக்.173-17; ஒ.க.கி.க., பக்.206-207), ஜமாஅத் தலைமைப் பொறுப்பைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்தி எதிர்ப்பவர்கள் மீது ஜமாஅத் (ஊர் நிர்வாக சபை) நடவடிக்கைகளைத் திணித்தல் (ஒ.பே.ப.ஏ., அத்.2; அத்.16; ஒ.க.கி.க., ப.129) எனத் தொடரும் அதிகாரப் போக்குகள் எதிர்விளைவுகளை ஏற்படுத்திச் சமூக முரண்பாடுகளைக் கூர்மைப் படுத்தியுள்ளன.

## மேலாதிக்கத்திற்கெதிரான எதிர்ப்பு குறைவுக்கான காரணங்கள்

இஸ்லாமியச் சமூக நாவல்கள் சித்திரிக்கும் சமூக முரண்பாடுகளில் மேலாதிக்கத்திற்கு எதிரான எதிர்ப்புகள் குறைவாகவே உள்ளன. அடிமட்டத்தில் இருந்து எழும் சில குரல்களும் தனிமனிதக் குரல்களாகவே எழுந்து நிற்கின்றன. அவற்றுள் பெரும்பான்மை போராட்டமாக உருவாகாமல் தணிந்து விடுகின்றன. ஒரு கடலோர கிராமத்தின் கதை மஃஹ்மூது, துறைமுகம் காசிம், ஒரு பேஷ் இமாம் பதவி ஏற்கிறார் பீர் முகம்மது ஹஜ்ஜத் ஆகியோர் பற்ற வைத்த மேலாதிக்க எதிர்ப்பில் மேலாதிக்க வீழ்ச்சிக்கான சூழல் உருவாவதைக் காட்டினாலும், பெரும்பாலும் மேலாதிக்க எதிர்ப்புகள் ஒட்டு மொத்தக் குரலாகவோ, போராட்டமாகவோ மாறவில்லை. அடிவானத்து ஒளிர்வுகள் நாவலில் மட்டும் மத்தியதர இளைஞர்கள் ஒன்றுபட்டு இயக்கமாக இருந்து மேலாதிக்கத்தை எதிர்ப்பதும், அதில் வெற்றிச்சூழல் உருவாவதும் சித்திரிக்கப்பட்டுள்ளது. பெருபான்மை நாவல்களில் தனிமனித எதிர்ப்புப் போக்குகள் இயக்கமாக-போராட்டமாக உருவாகாமல் போவதற்கு இரண்டு காரணங்கள் தென்படுகின்றன.

1. முதலாளிகள் ஜமாஅத் அமைப்பில் (ஊர் நிர்வாகம்) தலைவர்களாக - நிர்வாகிகளாக இருப்பதால், ஜமாஅத் கூட்டமைப்பு முதலாளிகளின் ஆதிக்கத்திற்கு உட்பட்டதாகி விடுகிறது. இந்நிலையில் முதலாளிகளை எதிர்ப்பது என்பது ஜமாஅத்தை, சமயத்தை எதிர்ப்பதாக நம்பிக்கை ஊட்டப்பட்டுள்ளது. எனவே ஜமாஅத், சமயத்திற்குக் கட்டுப்படல் என்ற தளத்தில் எதிர்ப்புணர்வுகள் மழுங்கிப் போகின்றன.

2. தனிமனித எதிர்ப்புக் குரல்கள் ஒட்டு மொத்தமாகச் சேர்ந்து ஒலிக்காமைக்கு மற்றொரு காரணம் - கல்வி-பதவி மூலம் பொருளாதார - சமூக அந்தஸ்து பெற்ற கீழ்த்தட்டைச் சார்ந்த இளைஞர்களை, முதலாளிகள் தங்கள் மா ப்பிள்ளைகளாக உள்வாங்கிக் கொண்டது. இது கீழ்த்தட்டிற்குக் கிடைத்து வரும் அங்கீகாரமாக வளர்வதால், எதிர்ப்புக்குரல் என்பது எழுந்து தணிவதாகவே உள்ளது.

ஜமாஅத் அமைப்புகள் பெரும்பாலும் பெருந்தனக்காரர்கள் தலைமையின் கீழ்ச் செயல்பட்டு வருவதால் முதலாளிகளுக்கான மதிப்பு உயர்வாகக் கருதப்படுகிறது. எனவே, ஜமாஅத் தலைவரான

முதலாளியை எதிர்ப்பது என்பது சமய ரீதியாகப் பார்க்கப்பட்டது. முதலாளி விதித்த ஊர்த்தண்டனையை மதிக்காமல் காசிம் பேசியதால், முதலாளிக்கு நேர்ந்த அவமானத்தை மக்கள் தங்களுக்கு நேர்ந்த அவமானமாகக் கொண்டனர் (த.மு., ப.205). 'முதலாளியை மதிக்காதவன் உண்மை முஸ்லிமல்ல' (ஒ.க.கி.க., ப.134) என்று பொதுமக்கள் விதி எழுதினர். 'அல்லாஹ்! முதலாளிட்டயா கணக்குக் கேக்குது? முதலாளிட்ட கணக்குக் கேக்குது பாவமில்லையா?' (ஒ.க.கி.க., ப.197) என்று பதறினர். ஜமாஅத் தலைவரான பரீதுபிள்ளை முதலாளிக்கு எதிராக எழுதப்பட்ட வாசகத்தை மக்கள் படித்தபோது 'படிக்காதீங்கோ! நாளே ஆகிரத்திலே (மறுமையில்) திருக்கல்யாணம்[6] பார்க்க வேண்டிய கண்ணு!' (து.மு., ப.136) என முதலாளிக்கு எதிராகச் சிந்திப்பது, பேசுவது, எழுதுவது எல்லாம் பாவம் என்று சமய நம்பிக்கை ஊட்டப்பட்ட மனநிலையை மக்கள் கொண்டிருந்தது வெளிப்படுகிறது.

ஜமாஅத் அமைப்பில் முடிவுகள் எடுக்கும் தகுதியும் முதலாளிகளுக்கே இருந்தது. ஜும்மா தொழுகைக்குப் பின் ஒரு பிரச்சினை தொடர்பாகப் பேசி முடிவு எடுக்கும்போது, 'குடும்பக்காரரெல்லாம் நில்லுங்கோ மத்தவங்க போங்கோ' (து.மு.ப.87) என்று அறிவிப்பு விடப்படுகிறது. இங்குக் குடும்ப அந்தஸ்து உடையோர் யார் என்பதை, 'பொருள் வசதி படைத்தவர்களும் நிலங்களுக்குத் தீர்வை செலுத்துவோருமான வெள்ளை நிறத் தோற்றமுள்ள முதலாளிகள் வலிய பள்ளியின் ஹாலில் எஞ்சினர். மற்றவர்கள் பள்ளிக்கு வெளியே சென்றனர்' (து.மு., ப.87) என்ற சித்திரிப்பால் அறியலாம்.

ஜமாஅத் அமைப்பு என்பதே அதிகார வர்க்கங்களின் பிரதிநிதி அமைப்பாகவே பெரும்பாலும் உள்ளது. ஜமாஅத்துக்கு வருமானத்தைப் பெருக்கத் தலைக்கு மூன்று மரக்கால் நெல் தர வேண்டும் என்ற புதுவரியை ஜமாஅத் அமைப்பு நிர்ணயம் செய்கிறது. நில முதலாளிகள் முதல் கூலிகள், ஏழைகள் வரை அனைவருக்கும் ஒரே நிர்ணயமாக அது அமைகிறது. வயிற்றுப் பாட்டிற்கே வழியில்லாதவர்கள் எப்படி நெல்தர முடியும் என்ற கேள்வி எழுந்த போது, அப்படி வரி தர முடியாதவர்கள் '. . ஊட்டுக்கு காவின் (திருமணம்) எழுதப் போகமாட்டோம், மையத்து அடக்கப் போகமாட்டோம், பாத்திஹா, ஹத்தம் ஓத இமாமை (மார்க்க அறிஞர்) போகவிடமாட்டோம்[7], இப்படி மார்க்க காரியங்களெல்லாம் எங்கிட கையில் இருக்க, எங்கள எதுக்க முடியுமா?' (கனவுப்பூக்கள், ப.41) என்று மூசின் முதலாளி பேசுகிறார்.

இந்த அச்சுறுத்தலையும் மீறி முதலாளிகளை எதிர்ப்பவர்கள் மீது ஜமாஅத் கட்டுப்பாடுகள், தண்டனைகள் விதிக்கப்படுகின்றன. ஜமாஅத் தலைவர் அகமது கண்ணு முதலாளியை எதிர்த்ததற்காக, மஸ்மூதின் மகள் திருமணத்தில் ஜமா அத் கலக்காது (ஒ.க.கி.க., ப.47) என்றும்; ஆங்கிலப் பள்ளிக்கூடத்திற்குத் தன் எதிர்ப்பையும் மீறி இடம் கொடுத்ததற்காக, மஹ்மூதைப் பள்ளித்தூணில் கட்டி வச்சு அடிக்க முதலாளி உத்தரவிடுவதையும் (ஒ.க.கி.க., ப.116) காணலாம். துறைமுகம் நாவலில் காசிமுக்கு மொட்டை அடித்து, கரும்புள்ளி, செம்புள்ளி குத்தத் தண்டனை விதிப்பதும், காசிமின் குடும்பத்தை ஊர் விலக்கி வைப்பதும் இந்த அடிப்படையில் நடக்கிறது.

அமைப்பியல் ரீதியான இந்த அச்சுறுத்தல்தான் மேல்தட்டிற்கெதிரான தனிமனிதக் குரல்கள் போராட்டமாகவோ இயக்கமாகவோ மாறாமல் அடங்கிப் போவதற்குரிய காரணங்களாக அமைகின்றன. என்றாலும், சமூகத்தில் ஜமாஅத் அமைப்பைக் கையில் வைத்திருக்கும் அதிகார வர்க்கத்திற்கு எதிரான குரல்களும் செயல்களும் தனிமனிதர்களால் நிகழ்த்தப்படுவதும், அதற்கு ஓரளவு மக்கள் ஆதரவு பெருகிவருவதும் காட்டப்படுகிறது.

ஒரு பேஷ்இமாம் பதவி ஏற்கிறார் நாவலில் ஜமாஅத் தலைவருக்கு எதிராகச் செயலில் இறங்கும் மார்க்க அறிஞருக்கு மக்கள் ஆதரவு பெருகுவதும், ஜமாஅத் தலைமையை மார்க்க அறிஞர்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்ற உறுதியான குரலும் எழுகிறது.

'பள்ளிவாசல் பணத்தைக் கொள்ளையிடும் முஹல்லத் (ஊர்) தலைவரே! இராஜினாமா செய்! மக்களை ஏமாற்றி முடிகளைஞ்சு நீ இஸ்லாத்தைக் காப்பாற்ற வேண்டாம். . .' (து.மு., ப.136) என்று குரல் எழுப்பும் இளைஞன் காசிமும், 'மேனே. . .பாவப்பட்ட நாங்கொ எப்போளும் நிக்கக் கூட உண்டு' (து.மு.,பக்.227) என்று காசிமிற்கு ஆதரவுக் குரல் கொடுக்கும் முதியவர் மீராசாவும் சிறுபான்மையினராக நாவல்கள் சித்திரிப்பில் இடம் பெற்றுள்ளனர்.

இவ்வாறு ஜமாஅத் அமைப்பு அதிகார வர்க்கத்தின் பிரிதிநிதிகளால் நிரப்பப்பட்டுள்ளதால் அவர்களை எதிர்ப்பது ஜமாஅத்தை எதிர்ப்பதாகிறது, இஸ்லாமியச் சமயத்தை எதிர்ப்பதாகிறது. இத்தகு நம்பிக்கை ஊட்டப்பட்ட சூழலே மேலாதிக்கத்திற்கு எதிரான குரல்கள் - உணர்வுகள் - எதிர்ப்புகள்

எல்லாம் அடங்கிப் போவதற்குரிய காரணமாகிறது. என்றாலும், எதற்கும் கட்டுப்படாத சில குரல்கள், பாதிப்புகளைத் தாங்கிப் போராடும் சில மனிதர்களின் செயல்பாடுகள் ஆகியவை அடித்தட்டின் உணர்வுக்கும் மதிப்புக்கும் வளர்ச்சிக்கும் வித்திடுவதை நாவல்கள் நேர்த்தியாகச் சித்திரித்துள்ளன.

கல்வி-பதவி மூலம் பொருளாதார - சமூக அந்தஸ்தைப் பெற்ற ஏழைகள், முதலாளிகளால் வீட்டு மாப்பிள்ளைகளாக அங்கீகரிக்கப்பட்டது, மேல்தட்டிற்கு எதிரான எதிர்ப்புணர்வுகள் அடங்கிப் போவதற்குரிய மற்றொரு காரணமாகிறது.

முஸ்லிம் சமுதாயத்தில் பெண்ணுக்கு வீடு கொடுக்கும் வழக்கம் இலங்கையிலும் தமிழகத்தின் சில பகுதிகளிலும் உள்ளது. இந்த வழக்கம் மனைவி வீட்டோடு கணவன் வாழும் நடைமுறையை உருவாக்கி உள்ளது. இதில் தனிக்குடித்தனம் என்றால் அதிகப் பிரச்சினைகளுக்கு வாய்ப்பில்லை. ஆனால், மனைவியின் குடும்பத்தோடு வாழும்போது கீழ்த்தட்டிலிருந்து வந்த ஆடவனுக்குப் பெரும்பாலும் தன்மானப் பிரச்சினைகள் உருவாகின்றன. இவ்வாறு எழும் பிரச்சினைகள் பெரிய அளவில் வெடிக்காமல் குடும்பக் கௌரவம், பிள்ளைகள் நலன் ஆகியவற்றை முன்னிட்டு அடங்கிப் போய் விடுகின்றன.

குடும்பத்தில் எழுந்த பிரச்சினைகளுக்குத் தங்கள் மேல்தட்டு மனப்பான்மைதான் காரணம் என்பதை உணர்தலும், உரசல்கள் ஓய்ந்து போவதற்குக் காரணமாகிறது. இதனைப் பனிமலர், மூன்றாம்பிறை, சரித்திரம் தொடர்கிறது நாவல்களின் நிகழ்வுகளால் அறியலாம்.

## மேலாதிக்கச் சரிவிற்கான காரணங்கள்

உராய்வு இல்லாமல் இயக்கம் இல்லை என்பது பௌதிகம் கூறும் உண்மை. அதைப்போல மனித வாழ்வின் இயக்கம் பல முரண்பாடுகளையும் (Contradiction) போராட்டங்களையும் உடையதாக விளங்குகிறது.[8] சமுதாய அமைப்பில் ஒரு வர்க்கம் மற்றொரு வர்க்கத்தின் மீது ஆதிக்கம் செலுத்தும் போது, அதற்கு எதிரான சிந்தனைகளும் செயல்பாடுகளும் உருவாவது இயற்கையானது. இஸ்லாமியச் சமூக நாவல்களில் சித்திரிக்கப்படும் இத்தகு எதிர்விளைவுகள் மேலாதிக்கத்தின் சரிவிற்கு எவ்வாறு காரணமாகியுள்ளன என்பதை இங்கு ஆராயலாம். தமிழ் முஸ்லிம் சமூக அமைப்பில் ஆதிக்க சக்திகளுக்கு எதிரான போக்குகள் இரண்டு நிலைகளில் உருவாகியுள்ளன.

1. கீழ்த்தட்டு வர்க்கத்தின் எதிர்ப்பு.
2. மேல்தட்டில் படித்தவர்கள் உள்ளுக்குள் இருந்து கொண்டே எதிர்த்தல்.

கல்வியும் பதவியும் தந்த அங்கீகாரத்தின் காரணமாக ஒருவன் முதலாளி வீட்டு மருமகனாகச் சென்றாலும், 'அந்தஸ்து குறைந்த இடத்தில் மாப்பிள்ளை எடுத்து விட்டார் மூசின் முதலாளி' (மூ.மு., ப.66) என்று கூலித் தொழிலாளர்கள் விமர்சிப்பதும்; 'என்ர உப்பத்திண்டு வளர்ந்தவன் குடும்பத்தில் நான் மாப்பிள்ளை எடுக்கிற தெண்டா ஊர் என்னைப் பளிச்சிப் போடும்'. (ப.ம., பக்.49-50) என்று இஸ்மாயில் போடியார் பேசுவதும் இங்குக் கவனத்திற்குரியன.

இங்கு 'அந்தஸ்து குறைந்த இடம்' என்று பேசுபவர்கள் யார்? தன் தகுதிக்குக் குறைந்த இடத்தில் மாப்பிள்ளை எடுத்தால் 'ஊர் என்னைப் பளிச்சிப்போடும்' என்று முதலாளி குறிப்பிடும் 'ஊர்' யார்? இரண்டு கேள்விகளுக்கும் பதில், பொருளாதாரத்தில் பின் தங்கிய அடித்தட்டு மக்கள் என்பதுதான். அடித்தட்டு மக்களே, கல்வி - பதவி மூலம் அந்தஸ்து பெற்ற தங்கள் வர்க்கத்துப் பிரதிநிதியை அங்கீகரிக்கவில்லை என்றால், மேல்தட்டிற்கு எதிரான குரலை அவர்களிடம் இருந்து எப்படி எதிர்பார்க்க முடியும்?

என்றாலும், ஆங்காங்கே சில தனிமனிதக் குரல்கள் மேலாதிக்கத்திற்கு எதிராக ஒலிப்பதைக் கேட்கலாம். அசல் இஸ்லாமிய வாழ்க்கை வாழும் கல்வி அறிவற்ற ஏழை உதுமான், சுரண்டல்வாத சமுதாயத்தின் மோசடிகளுக்கு எதிராகக் குரல் கொடுக்கிறார். அரசியல் செல்வாக்குள்ள மேல்வர்க்கம் கீழ்த்தட்டின் அவலத்தைத் தங்களுக்குச் சாதகமாக்க முயலும் போது நான் உங்க அடிமை இல்லை. என் வாக்கைக் காசுக்கு விற்கக்கூடிய பேடி இல்லை. என் உரிமையை நான் விரும்புற ஆளுக்கே பிரயோகிப்பேன்' (காட்டில் எரிந்த நிலா, பக்.51-52) என்று மேல்வர்க்கத்தின் செல்வாக்குக்கு அடிபணிய மறுக்கிறார்.

'. . மன்றவன்ர பூமியில் அருகு கொத்தி ஏழைகளிற்ற நூறும் இருநூறும் கொடுத்து ஏமாத்தி நீங்க போடியான விதம் எங்களுக்குத் தெரியாதோ? வட்டக்க கதிர் பொறக்கவாற கண் பொண்சாதிக்கெல்லாம் புள்ள குடுத்துத் திரியிற உங்குட யோக்கியங்களை ஊர் அறியும்' (ப.ம., ப.136) என்று நில முதலாளித்துவ அடாவடித்தனங்களுக்கு எதிராகப் படித்த, பதவி வகிக்கும் கீழ்த்தட்டுப் பிரதிநிதியான ரஹீம் குரல் எழுப்புகிறான்.

மேல்தட்டுக்கு நிகராக அடித்தட்டு மக்களை வளர்த்தெடுக்கக் கல்வி ஒன்றுதான் வழி என்பதைப் பிரச்சாரப்படுத்திப் பல எதிர்ப்புகளையும் மீறி அடித்தட்டு மக்களின் கல்வி வளர்ச்சிக்காகப் பாடுபடும் மஹ்மூதை ஒரு கடலோர கிராமத்தின் கதையிலும், காசிமைத் துறைமுகத்திலும் காணலாம்.

இத்தகைய அடித்தட்டின் எதிர்ப்பும் எழுச்சியும் மேல்தட்டின் சரிவிற்கு முக்கியக் காரணியாவதை நாவல்கள் யதார்த்தமாக வெளிப்படுத்தியுள்ளன.

இஸ்லாமியச் சமூக அமைப்பில் நில முதலாளிகள், வியாபாரிகள் உள்ளிட்ட மேலாதிக்கத்தின் சரிவிற்கு மேல் தட்டிலுள்ள படித்தவர்களின் அணுகுமுறைகளும் முக்கியக் காரணிகளாக அமைந்துள்ளன.

இந்த அநியாயம் இங்க மட்டுமல்ல, பெரிய அளவில் உலகம் எங்கும் நடக்குது. இதைத்தான் முதலாளித்துவ ஆணவம், போடித்தத்துவக் கர்வம் என்றெல்லாம் சொல்லுவாங்க. பணம் வந்து சேர்ந்தால் அவர்களை ஒரு அகங்காரமும் வந்து சேர்கிறது. இதை நாங்கள் ஒழித்தே தீருவோம்!'. (பனிமலர்) என்று மேல்தட்டைச் சார்ந்த படித்த இளைஞன் ஜெமீல் பேசுவது சமூக மாற்றத்திற்கான அறிகுறியை வெளிப்படுத்துகிறது.

'வாப்பா....உலகம் மாறி வருகுது, ஒங்குட பழைய காலத்து முதலாளித்துவ பெருமையெல்லாம் எப்போவோ அழிஞ்சு போச்சி' (ப.ம., ப.50) என்றும்; '...அவங்க உழைப்புலதான் நாம் சோறு திண்டம், நீங்க போடியார் ஆனீங்க, மக்காவுக்கு போய் ஹாஜியாராக வந்தீங்க' (ப.ம., ப.50) என்று நேரடியாக இஸ்மாயில் போடியாரிடம் அவரது மகன் ஜெமீல் கூறுவது, மேல்தட்டு இளைஞர்களின் சமத்துவ சமுதாயம் காணும் வேட்கையை வெளிப்படுத்துகிறது.

முதலாளித்துவப் பெருமைக்கு அதன் பிரதிநிதிகளே உடன்படாமையும், தாங்கள் நினைத்ததை நடத்தலையும் காணலாம். தன் கணவன் விட்டுச் சென்ற பொதுச் சேவையில் விதவை கதிஜா ஈடுபடுவதற்கு நில முதலாளியான அவளது தந்தை எதிர்ப்புத் தெரிவிக்கிறார். '....பொதுச் சேவை, புடலங்காய் சேவை என்று இறங்கிவிட்டாய் நீ! இப்படி எல்லை மீறி நடக்கிறதை நாங்கள் வெட்கமில்லாமல் சும்மா பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமா?' என்று அதட்டிய போது, 'நான் புருஷனை இழந்தாலும் அவருடைய விருப்பு வெறுப்புகளை இழக்கவில்லை. அதை

உங்களுக்காக இழக்கவுமாட்டேன்.....இது ஒன்றும் எல்லை மீறிய காரியமல்ல!' (ச.தொ., ப.34) என்று எதிர்த்து நின்று, ஏழைப் பெண்களின் நல்வாழ்விற்காகப் பாடுபடும் கதிஜாவைக் காணலாம்.

தான் சார்ந்த பெரிய இடத்து மனிதர்களின் வறட்டுக் கௌரவங்களுக்கு ஒத்துப் போகாத டாக்டர் கஸ்ஸாலியின் நடவடிக்கைகளும்; மேல் தட்டைச் சார்ந்த அலிசப்ரி உழைப்பின் சிறப்பைப் பேசுவதும், ஏழைகளின் உணர்வுகளுக்கு மதிப்பளிப்பதும், அவர்களுக்கு அரசு உதவிகளைப் பெற்றுத்தருவதும் (ச.தொ.) ஆகியன மேல்தட்டிற்குள்ளேயே அதன் காலங்காலமான அதிகாரப் போக்குகளுக்கு எதிரான பிரதிநிதிகள் உருவாகி வருவதை உணர்த்துகின்றன. இவர்கள் சமூக முரண்பாடுகளை நேரடியாக எதிர்த்து நிற்றலும், கீழ்த்தட்டைக் கைதூக்கி விட முனைவதும் புதிய சமுதாய மாற்றத்திற்கான தடயங்களாக நாவல்களில் பதிவாகியுள்ளன.

## சமூக முரண்பாடுகளும் வாழ்வியல் மேம்பாடுகளும்

சமூக முரண்பாடுகளுக்கு எதிரான சித்திரிப்புகள் மட்டுமல்லாமல் அம் முரண்பாடுகளைக் களைவதற்கான செயல்பாடுகள் சமுதாய அமைப்பில் ஏற்படுத்தும் வாழ்வியல் மேம்பாடுகளையும் நாவல்களின் அமைவுகளில் காணலாம்.

சமூக முரண்பாடுகள் தகர்க்கப்பட வேண்டுமானால் கீழ்த்தட்டு மக்கள் சமூக அந்தஸ்தைப் பொருளாதார ரீதியாக முதலில் பெற வேண்டும். அதற்கு அவர்களுக்குள்ள எளிமையான வாயில் கல்வி ஒன்றுதான். எனவே மேல்-மத்தியதர, படித்த-பதவியிலுள்ளவர்கள் ஏழைகள் கல்வி கற்பதற்கான வாசல்களைத் திறந்துவிட வேண்டும். டாக்டர் கஸ்ஸாலி தன் நண்பர் அலிசப்ரியுடன் நடத்தும் ஏழைகளுக்கான 'கல்வி சேவைக்குழு' (ச.தோ.) இப்பணியைச் செய்கிறது. ஒரு கடலோர கிராமத்தின் கதையில் எதிர்ப்புகளை மீறி ஆங்கிலப்பள்ளி துவக்க மஹ்மூது செய்யும் தியாகங்களும், அப்பள்ளிக்கு ஆசிரியராக வரும் மஹ்பூப்கானின் தியாகங்களும், துறைமுகம் நாவலில் கல்வி ஒன்றுதான் சமுதாய விடிவுக்கு வழி என்று போராடும் காசிமின் இழப்புகளும் இந்தச் சிந்தனையைப் பிரச்சாரப்படுத்துகின்றன.

சமூகத் தொண்டிற்காகப் படித்தவர்கள்-பதவி வகிப்பவர்கள் ஒன்று சேர வேண்டும் என்று வலியுறுத்தப்படுவதோடு, கீழ்த்தட்டிலுள்ள மக்கள் தங்கள் தொழில்களில் நவீனத்துவத்தைப் புகுத்துதல் மூலம் பொருளாதார

அந்தஸ்துப் பெறலாம் என்ற முற்போக்குச் சிந்தனையும் முன் வைக்கப்படுகிறது. அதோடு சிறுபான்மைச் சமுதாயமான முஸ்லிம் சமுதாயத்தின் வளர்ச்சிக்கான திட்டங்களும் கதை நிகழ்வுகளில் முன்னிறுத்தப்பட்டுள்ளன. அவையாவன:

1. முஸ்லிம்கள் நவீனக் கல்வியை - ஆங்கிலக் கல்வியைப் பெற வேண்டும் (க.பூ., ப.64: ஒ.க.கி.க., ப.84; அத்.29; து.மு., ப.92) ஏழைகளுக்கான இலவசப் பயிற்சி வகுப்புகள் நடத்தல், வறுமை காரணமாக ஆரம்பக் கல்வியை விட்டவர்கள் மீண்டும் கல்வியைத் தொடர வழி வகுத்தல் (ச.தொ., பக்.67-68).

2. கீழ்த்தட்டு மக்களின் பொருளாதார மேம்பாட்டிற்காகச் சமூக அமைப்புகளை உருவாக்கிச் சிறுதொழில் மூலம் வேலை வாய்ப்புகளை உருவாக்கல், (அ.ஒ., பக்.67-68; ச.தொ., ப.122) பொருளாதாரத்தில் நலிந்தவர்களின் தொழில்களில் நவீனத்துவங்களைப் புகுத்தல், மீன்பிடி தொழிலில் நவீனத்துவம் அறிமுகப்படுத்தப்பட்டுப் படகு மூலம் மீன் பிடித்தலை அறிமுகப்படுத்தல், கூட்டுறவுத் தொழிலாளர்களுக்குக் கூட்டுறவுச் சங்கம் அமைத்து அதன் மூலம் எல்லோருக்கும் எல்லாம் என்ற நிலையை உருவாக்கல், தொழிலாளர்களுக்கு இடையே ஏற்படும் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணல் (ச.தொ.) விவசாயத்தில் நவீன முறைகள் அறிமுகப்படுத்தப்படல் (ப.ம., ப.39). தொழில் நிறுவனங்களில் தொழிலாளர்களுக்கு இலாபத்தில் பங்கு அளிப்பதன் மூலம் அவர்களையும் பொருளாதாரத்தில் தன்னிறைவு உடையவர்களாக ஆக்கல் (க.பூ., ப.129)

3. தொழிலாளர்கள்-கீழ்த்தட்டினரின் ஒற்றுமை என்பது அவர்களின் மேம்பாட்டிற்கு அஸ்திவாரம் என்பதை உணர்த்துதல் (ச.தொ).

4. சமுதாயத்தில் நலிவுற்ற மக்களின் சமூக அந்தஸ்திற்காக, முன்னேற்றத்திற்காகப் படித்தவர்கள் இயக்கமாகச் செயல்படல். அதன் மூலம் புதிய மாற்றங்களை நிகழ்த்திக் காட்டல். அதற்கு மக்கள் ஆதரவு பெருகல் (அ.ஒ.). நசுக்கப்பட்டு, ஒதுக்கப்பட்டு, சுரண்டப்பட்டுத் துன்பங்களில் எதிர்நீச்சல் போட்ட, விழிப்புப் பெற்ற ஒரு சாராரிடமிருந்தே உண்மையான இயக்கங்கள் தோன்ற வேண்டும். அங்குத்தான் 'நான்' என்ற உணர்வுக்கு இடமிருக்காது (அ.ஒ., ப.117) என்ற தீர்க்கமான சிந்தனை வெளிப்படல். நாடு முழுவதும் உள்ள முஸ்லிம் சமூக

இயக்கங்களை ஒருங்கிணைத்துச் செயல்பட முயற்சி மேற்கொள்ளல். 'அத்தனை இயக்கங்களும் ஒன்றுபட்டு முஸ்லிம்களின் தேவையை உணர்ந்து செயல்பட்டால், நாளுக்கு நாள் பணக்காரர்களை உருவாக்காவிடினும் பிச்சைக்காரர்கள் உருவாவதையாவது தவிர்க்கலாம்...' (அ.ஒ.,ப.63) என்று எதிர்காலச் சமூக வளர்ச்சிக்கான சிந்தனை முன் வைக்கப்படல்.

5. அரசியல் ரீதியாகச் சிறுபான்மை முஸ்லிம்கள் பலம் பெற வேண்டும். அப்போதுதான் தேசிய அமைப்பில் உரிமைகளைப் பெற முடியும் என்பது வலியுறுத்தப்படல். அதற்காய் அரசியல் இயக்கம் ஆரம்பித்துச் செயல்படலைக் கட்டமைத்துக் காட்டல் (அ.ஒ., பக்.49-50; ப.110). அடிமட்டத்தில் வாழும் முஸ்லிம்களின் பிரச்சினைகளைத் தேசியத் தலைவர்கள் கண்டு கொள்வதில்லை. எனவே ஒடுக்கப்பட்ட மக்களின் பிரதிநிதி பாராளுமன்றம் செல்ல வேண்டும் (அ.ஒ., ப.126) என்பது வலியுறுத்தப்படல்.

6. இஸ்லாமியச் சமுதாயத்தின் பிரச்சினைகளை - நலிந்த மக்களின் தேவைகளைத் தேசிய அளவில் எடுத்துரைக்க நாளிதழ்கள் போன்ற வெகுஜன ஊடகத்தின் தேவை வலியுறுத்தப் படுவதோடு, நாளிதழ் ஆரம்பித்து அம்முயற்சிக்கு முன்மாதிரி காட்டல் (அ.ஒ., ப.81; அ.உ., ப.29). அது போன்று இஸ்லாமிய இலக்கியப் படைப்பாளிகளும் இந்தத் தடத்திலேயே தங்கள் கவனத்தைச் செலுத்த வேண்டும் என்பதை 'இன்று எங்கட சமூகத்துக்குத் தேவை காதலும் மர்மமும் அல்ல...' (அ.ஒ., ப.91) என்று வலியுறுத்தல்.

இவ்வாறு சமூக முரண்பாடுகள் ஏற்படுத்திய வாழ்வியல் சிக்கல்களைக் களைந்து சமுதாயத்தை முன்னெடுத்துச் செல்வதற்கான வழிமுறைகளையும் அதனால் ஏற்பட்ட சமூக மேம்பாடுகளையும் படைப்பாளிகள் அக்கறையுடன் வெளிப்படுத்தியுள்ளனர்.

### குடும்பம் - பாரம்பரியம் காரணமாக எழுந்த அந்தஸ்து முரண்பாடுகள்

குடிப்பெருமை, கோத்திரம், பாரம்பரியம், வகையறா போன்ற சொல்லாடல்கள் எல்லாம் பிறப்பு மற்றும் குடும்பப் பெருமைகளை முன்னிறுத்திச் சமூகப் படித்தரத்தில் போலியான வேறுபாடுகளை உருவாக்குவோரின் செயல்பாடு எனலாம். அந்தஸ்துக் காரணமாக எழும் இம்மனப்பான்மையும் அதன் விளைவுகளும் சமூக முரண்பாடுகளுக்குக் காரணமாய்

அமைந்துள்ளன. தமிழ் முஸ்லிம் சமூக அமைப்பிலும் குடும்பப்பாரம்பரியம் காரணமாக எழுந்துள்ள அந்தஸ்து முரண்பாடுகள் இருப்பதை நாவல்கள் சித்திரித்துள்ளன. அதனைப் பின்வருமாறு ஆராயலாம்.

1. குடிப் பெருமையின் வெளிப்பாடுகள்
2. குடும்ப அந்தஸ்தின் காரணமாகப் பிறரை மதிக்காமை
3. குடிப்பெருமை காரணமாகச் சமூக முரண்பாடு ஏற்படும் முக்கியச் சூழல்
4. குடிப்பெருமையாளர்களின் சரிவும் காரணமும்

இஸ்லாமியச் சமுதாய அமைப்பில் சமத்துவம் என்பது பள்ளிவாசலில் தொழுகையோடு முற்றுப் பெற்று விட்டது (அ.ஒ., ப.155) என்று படைப்பாளி விமர்சிப்பதை இங்குக் கருத்தில் கொள்ள வேண்டும். சமுதாய வாழ்வில் குடும்ப - வெளி உறவுகளிலும் தொடர்புகளிலும் அந்தஸ்துக் காரணமாக இழையோடும் சில மேலாதிக்கத் தனங்கள் ஏற்றத்தாழ்வுக்கும், மனித உறவுகளுக்கும் இடையிலான விரிசல்களுக்கு வழி வகுத்துள்ளன. ‘இரத்தபாசம், உறவுமுறை, அன்பு ஆதரவு எல்லாம் ஒவ்வொருவருடைய அந்தஸ்துக்கேற்ப ஊதப்படும் மகுடிகள்...’ (க.பூ., ப.19) என்று இந்த முரணின் வெளிப்பாட்டை ஒரு படைப்பாளி குறிப்பிட்டுள்ளார். குடும்பம் - பாரம்பரிய அந்தஸ்துக் காரணமாக உருவான குடிமரபுகள் தமிழ் முஸ்லிம் சமுதாய அமைப்பிலும் உண்டு. இலங்கைச் சமூக வரலாற்று ஆய்வாளர் முகம்மது சமீம் இக்குடிமரபுக் குறித்துப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

“கிழக்குக் கடற்கரையோரப் பகுதி குடிமரபு முஸ்லிம் சமுதாயத்தின் சமூக அமைப்பாக இருந்தது. ஒவ்வொரு குடும்பமும் ஏதோ ஒரு குடியைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள். பதினெட்டுக் குடிகள் இருந்ததாகச் சில ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். இக்குடிகள் தமது தொழிலை வைத்தோ அல்லது பொருளை வைத்தோ தம் குடிகளுக்குப் பெயரிட்டார்கள். ஓடாவிக்குடி, மாம்புலியார் குடி, அல்லிக்குடி என்று குடிகள் வழங்கப்பட்டன. இக்குடிகளில் அதிக நிலம் வைத்திருப்பவர்கள்தான் மத்திசங்களாகக் (ஊர்ச்சபைத் தலைவர்கள்) கடமையாற்றினார்கள். இவர்கள் போடியார் எனவும் அழைக்கப்பட்டனர். முஸ்லிம் சமுதாயத்தில் சாதிப்பிரிவினை இல்லையென்றாலும் ஏழை - பணக்காரன் என்ற வேறுபாடு இருக்கத்தான் செய்தது. இப்பணக்காரர்

குடும்பங்கள்தான் முஸ்லிம் சமுதாயத்தைத் தமது கட்டுப்பாட்டின் கீழ் வைத்திருந்தன. சமுதாயத்தின் பொருளாதார வளர்ச்சியும் கல்வி வளர்ச்சியும் இச்சமுதாய முறையை மாற்றியமைத்தது".[9]

இலங்கைத் தமிழ் முஸ்லிம் சமூகத்தில் வழக்கில் இருந்த இத்தகு குடிகளை ஜே.எம். ஷம்சுதீன் மவ்லானா இரு வகையாகப் பின்வருமாறு பகுத்துத் தருகிறார்:

தமிழ் பேசும் இதரச் சமூகத் தமிழ் மக்களுக்கும், முஸ்லிம் மக்களுக்கும் இடையேயுள்ள பொதுவான குடிகள்.

*1. பொன்னாச்சி குடி 2. மூத்தநாச்சி குடி 3. இளையநாச்சிகுடி 4. வரிசை நாச்சி குடி 5. உலகிப் போடி குடி 6. படையாண்ட குடி 7. பெத்தாண்ட குடி. 8. பனிக்கனா குடி. 9. வடக்கனா குடி. 10. கச்சியான்குடி 11. கோப்பி குடி 12. செட்டிகுடி 13. கலிங்கனார் குடி 14. உசவீடு குடி 15. ராசம்புள்ள குடி 16. சின்னக் கதிரவன் குடி.*

முஸ்லிம்களிடையே வழக்கிலிருக்கும் தமிழ்மொழிப் பெயர் கொண்ட குடிகள்.

*1. வெள்ளரசன்குடி 2. ஆலங்குடி 3. ஓடாவிக் குடி 4. மணனைப் போடிக் குடி 5. தச்சனூர்குடி 6. சங்கவி குடி 7. சாயக்காரன் குடி 8. மாமனார்பிள்ளைக் குடி 9. சங்கரப்பத்தன்குடி 10. சேனைக் குடி 11. களனிக்குடி.*[10]

தாங்கள் குறிப்பிட்ட வகையறாவைச் சார்ந்தவர்கள் என்பதால் மற்றவர்களை விட உயர்ந்தவர்கள் என்ற இயல்பாக ஊறிப்போன மனநிலையில் குடிப்பெருமைப் பேசிப் பிறரை இரண்டாம் தரமாகக் கருதுபவர்களும் உண்டு. '...ராசம்புள்ள குடியாள் மாளிகையில் பொறந்து பல்லக்கில் போறவள்... உசத்தியான குடியில் உள்ளவளப் பெண்ணா எடுத்தா அப்படித்தான் உயர்வா வச்சிருக்கனும்' என்றும்; 'நாங்க ராசம்புள்ளகுடி மாமி பணியாட்டுக்குடி. இந்த இரண்டு குடிக்கும் ஒத்துவாறதுதான் ரொம்ப கஷ்டம்' (ப.ம., ப.167) என்றும் பேசப்படும் குடிப்பெருமைகள் மேல்தட்டில் கர்வமனப்பான்மையையும் குடிவழியாகத் தாங்கள் உயர்ந்தவர்கள் என்ற மனநிலையையும் இறுக்கமாக இருந்ததையும் வெளிப்படுத்துகின்றன.

குடும்பப் பாரம்பரியப் பெருமைத் தனங்களால் பிறரை மிகச் சாதரணமாக எடை போடுதலும் மதிக்காமையும் உள்ளது. 'எங்க குடும்பத்தில் இன்னும் ஒருவரும் கோச்சில (தொடர் வண்டி)

போனதில்லை, நாலுபேரு போகிற கோச்சில போகக் கூப்பிடுறாரு, நாங்க எங்கேயாவது போறதுனா தனிக்கார் பிடிச்சுதான் போவோம்' (மூ.மு.,ப.100) என்று ஒரு குடும்பத்தலைவி பேசுவது, குடிப்பெருமை வெளிப்பாட்டின் மொத்த வாசகமாக அமைந்துள்ளது. 'நாலுபேரு போகிற கோச்சில போகக் கூப்பிடுறாரு' என்ற வார்த்தைகள், பிறரைத் தாழ்வாக மதிக்கும் அந்தஸ்து மனப்பான்மையை வெளிப்படுத்துகிறது.

பொருளாதார அந்தஸ்தில் பாரம்பரியப் பெருமை பெற்றவர்கள் என்பதால் தாங்கள் படித்துத்தான் ஆக வேண்டும் என்பதில்லை. குறிப்பாகத் தங்கள் பெண் பிள்ளைகள் படிக்க வேண்டியதில்லை. ஆனால் ஏழைப் பெண்கள் படித்து 'நாளைக்கு ஓர் உத்தியோகத்தை எடுத்தால்தானே அதுகளுக்கு மாப்பிள்ளையாவது எடுக்கலாம்...' (ப.ம., ப.140) என்று கீழ்த்தட்டுப் பெண்கள் கற்பதைத் துச்சமாகப் பேசுவதையும் காணலாம். கல்வி கூட வாழப் போக்கில்லாதவர்களுக்குத்தான், சகல வசதியும் படைத்த தங்களுக்குத் தேவையில்லை என்று நினைப்பது அவர்களது குடும்ப அந்தஸ்து ஏற்படுத்திய மனோபாவத்தின் வெளிப்பாடு எனலாம்.

குடும்பம், கோத்திரம் பார்ப்பது எல்லாம் பெரும்பாலும் திருமண நிச்சயங்களின் போதுதான் அதிகம் தலைதூக்குகின்றன. '...பாத்திரமறிந்து பிச்சை இடு...கோத்திரமறிந்து பெண்ணைக் கொடு என்பார்கள்... இவனுக்கு நான் பெண் கொடுப்பதா? இது நடக்கவே நடக்காது' (க.பூ., ப.15) என்று திருமணப் பேச்சின் போது கோத்திரம் பார்க்கும் பிடிவாதப் போக்குகளைக் காணலாம். பூர்வீகத்தை அஸ்திரமாக முன்னிறுத்தி அழைப்பிதழ் அச்சிட்ட பிறகு, திருமணத்தையே நிறுத்தி விடும் அஸ்மா பாத்திரப்படைப்பு, இந்த அந்தஸ்து அதிகாரத்தின் பிரதிநிதியாக ஜே.எம். சாலியின் 'பணவிலங்கு' நாவலில் ஆதிக்கம் செலுத்துகிறாள். அரை நூற்றாண்டுக்கு முந்தைய சமூகத்தில் குடும்ப அந்தஸ்து மட்டுமே மேல்தட்டில் திருமணத் தகுதியாகக் கொள்ளப்பட்டது. 'மருமோனுக்குப் பைத்தியமானா என்ன? நல்ல குடும்பம், வேணாட்டு மகாராஜாவுக்குத் தலையிலே கிரீடம் வெச்சுக் கொடுத்த குடும்பம், சொத்துண்டு, அரபிக் குதிரை உண்டு, பல்லக்குண்டு' (ஒ.க.கி.க., ப.204) என்று அந்தஸ்தை முன்னிறுத்திப் பெண்ணின் விருப்பம், உணர்வு அனைத்தையும் சாகடிப்பதை நாவலால் உணரலாம்.

அந்தஸ்துப் பார்த்தவர்களும், குடிப்பெருமை ஏற்படுத்திய பிடிவாதங்களோடு வாழ்ந்தவர்களும் தங்கள் பெருமை இழந்து, சரிந்து போனார்கள் என்பதை ஒரு கடலோர கிராமத்தின் கதை அகமது கண்ணு முதலாளி, மூன்றாம் பிறை நிகாறா - மூசின் முதலாளி, பனிமலர் முஸம்மில் மரக்காயர், ஒரு பேஷ் இமாம் பதவி ஏற்கிறார் ஊனா பீனா முதலாளி போன்ற பலரின் வீழ்ச்சியின் மூலம் படைப்பாளிகள் உணர்த்தியுள்ளனர்.

'திருவிதாங்கூர் மகாராஜா அரண்மனைக் குதிரை அனுப்பிக் கொடுத்தது எந்த குடும்பத்து கல்யாணத்துக்குன்னு தெரியுமா?' (ஒ.க.கி.க., ப.23) என்று குடிப்பெருமை பேசிய அகமது கண்ணு முதலாளி, தனது பாரம்பரியப் பிடிவாதங்களால் சரிந்த தனது குடும்பப் பரிதாபம் தாங்காது பைத்தியமாகிவிடுகிறார். முஸம்மில் மரக்காயர்' மூசின் முதலாளி, ஊனாபினா முதலாளி போன்றோர் நோய்வாய்ப்பட்டு இறுதியில் மனமாற்றம் பெருகின்றனர்.

இவ்வாறு குடும்பப் பாரம்பரிய அந்தஸ்துகளால் உறவிலும் சமுதாயத்திலும் பல முரண்பாடுகளை உருவாக்கியவர்களுக்கு எதிரான குரல் அவர்களது குடும்பத்தில் இருந்தே எழுவது வரவேற்புக்குரியது. பனிமலர், ஒரு பேஷ் இமாம் பதவி ஏற்கிறார், சரித்திரம் தொடர்கிறது நாவல்களில் இந்த ஆரோக்கியத் தன்மையைக் காணலாம். குடிப்பெருமை பேசியவர்களே தங்கள் அந்தஸ்திற்குக் குறைந்தவர்களை அவர்களது கல்வி, பதவியின் காரணமாக அங்கிகரிப்பதைக் கனவுப் பூக்கள், மூன்றாம் பிறை, பனிமலர், நாவல்களில் காணலாம். இது ஓர் அர்த்தத்தில் குடும்பப் பாரம்பரியக் குடிப் பெருமைகள் சரிந்து, சமுதாயத்தில் சமநிலை நோக்கு உருவாவதை வெளிப்படுத்துவது எனலாம்.

குடும்பப் பாரம்பரிய அந்தஸ்துக் காரணமாக எழுந்த சமூக முரண்பாடுகளைச் சித்திரிக்கும் நாவல்களின் கதை நிகழ்வுக் காலம் பெரும்பாலும் இருபது ஆண்டுகளுக்கு முந்தியதாக அமைந்துள்ளது. தோப்பில் நாவல்கள் அரை நூற்றாண்டிற்கு முந்தைய காலச் சூழலைச் சித்திரிக்கின்றன. எனவே, குடும்ப -பாரம்பரியக் குடிப் பெருமைகளால் நிகழ்ந்த முரண்பாடுகள் முந்தைய காலத்தவை என்று வரையறுத்துவிட முடியாது. இன்றும் நிலவுடைமை, வர்த்தகவுடைமை சார்ந்த பகுதிகளில் அதன் வேர்கள் கிடப்பதை மறுக்க முடியாது.

# பெண்சார்ந்த நிலைப்பாடுகளும் வளர்ச்சிப் போக்குகளும்

எதிர்ப்பின்றி நடந்து கொள்ளும் (Passivism) என்பது பெண்ணின் தனித்தன்மையாகும். ஆணை, செயலுக்கு உள்ளாக்கி அவனது ஆளுமையை நிரூபிப்பது பெண்ணின் இத்தனித் தன்மைதான். ஆனால் இத்தனித்தன்மையே பெண்ணின் உடலளவிலான பலவீனம் என்பது ஆணின் பலத்தை உயர்த்திக் காட்டும் அளவீடாக, அவனைச் செயல்படத் தூண்டுவதாக அமைந்துள்ளது. தான் ஒரு பொருளைத் தூக்க முடியாத போது, ஆணைத் தூக்க வைத்து அவனது ஆற்றலை நிரூப்பிப்பவள் பெண்ணாவாள். ஆனால் பெண்ணின் இப்பண்பை அவளது பலவீனமாக எடுத்துக் கொள்ளும் ஆண் தனது மேலாதிக்கத்தனத்தைச் சகல நிலைகளிலும் பெண்ணின் மீது திணிக்கிறான். இதனால்தான் ஆணை முதன்மைப் படுத்தியதாக உலகச் சமூக வரலாறு அமைந்துள்ளது. இந்த வரலாற்றின் பக்கங்களில் ஒரு பெண் எப்படி எல்லாம் இருக்க வேண்டும் என்று விதிகளை வகுத்தவர்கள் பெண்களல்ல, ஆண்கள். இதுவே ஆணாதிக்கச் சமூகத்தில் பெண் அடிமைப்பட்டுப் போனதற்கு முக்கியக் காரணமாகும்.

'ஆணை மகிழ்விக்கக் கூடியவள்' என்ற ஒரே அளவீட்டில் உலகம் பெண்ணை மதிப்பீடு செய்து நடத்திய காலத்தில், "பெண்ணிடம் தான் ஆண் அமைதி பெற முடியும்" (அல்குர்ஆன், 7:189) என்று ஆணின் வாழ்விற்கு அடிநாதமானவள் பெண் என்பதை இஸ்லாம் உறுதி செய்தது.

பெண்ணுக்கு ஆன்மா உண்டு, ஆணும் பெண்ணும் ஒரே ஆன்மாவிலிருந்து படைக்கப்பட்டவர்கள், ஆண்களைப்போல் பெண்களுக்கும் உரிமைகளும் அதிகாரங்களும் உண்டு, கல்வி உரிமையுண்டு, கருத்துரிமை உண்டு, சொத்துரிமை உண்டு, சமூகச் செயல்பாடுகளில் பங்கெடுக்க உரிமையுண்டு, திருமண விவகாரத்தில் சுயமாக முடிவெடுக்க உரிமையுண்டு என்று இஸ்லாம் பிரகடனப்படுத்தியது, பெண்ணுக்கான சமூக நீதியை நிலை நிறுத்தியது.

ஆனால் இஸ்லாமியச் சமுதாயத்தின் நடைமுறை வாழ்வில் பெண் என்பவள் ஆணின் ஆதிக்கத்திலும், குடும்ப, சமூக அமைப்புகளின் ஆதிக்கத்திலும் பாதிக்கப்பட்ட ஜீவனாகவே உள்ளாள். இதனால் ஆண்-பெண் இடையிலான பாலியல் முரண்பாடுகள் வளர்ந்துள்ளன. ஆண்மட்டுமல்லாமல் குடும்ப அமைப்பிற்குள் பெண்ணே பெண்ணின் மீது ஆதிக்கம் செலுத்துபவளாகவும் இருக்கிறாள். பெண்ணுக்கு எதிரான இத்தகைய ஆதிக்கப் போக்குகளோடு பெண்ணின் கல்வி வளர்ச்சியும் பெண்ணுரிமைக்கான ஆண்களின் நடவடிக்கைகளும், ஏற்படுத்தியுள்ள உரசல்கள் ஆண் - பெண் சமத்துவம் நோக்கிய வளர்ச்சிக்கு இட்டுச் செல்கின்றன.

ஆதிக்கப் போக்குக்ளால் உருவாகும் பாலியல் முரண்பாடுகளுக்குப் பெண்ணுக்கு எதிரான கருத்தியல் ஆதிக்கம் (Structural Domination), அமைப்பியல் ஆதிக்கம் (Ideological Domination) இரண்டும் முக்கியக் காரணிகளாக உள்ளன. இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்கள் வெளிப்படுத்தும் பெண் சார்ந்த நிலைப்பாடுகளையும் வளர்ச்சிப் போக்குகளையும் ஆய்வு செய்வதன் மூலம் இஸ்லாமியச் சமுதாயத்திலுள்ள பாலியல் முரண்பாடுகளால் பெண் இழந்ததையும், அவள் எழுவதற்குக் காரணமான அம்சங்களையும் வெளிப்படுத்தலாம். இதனைப் பின்வருமாறு ஆராயலாம்.

1. பெண்ணுக்கு எதிரான கருத்தியல் ஆதிக்கம்
2. பெண்ணுக்கு எதிரான அமைப்பியல் ஆதிக்கம்
3. ஆதிக்கப் போக்குகளுக்கு எதிரான வளர்ச்சிகள்

### பெண்ணுக்கு எதிரான கருத்தியல் ஆதிக்கம்

பெண்ணைவிட ஆண் சமூகத்தில் உயர்ந்தவன், பலசாலி, சம்பாதிப்பவன், சாதிப்பவன் என்கிற கருத்தாக்கங்கள் பெண்ணைக் கருத்தியல் ரீதியாகச் சமூகத்தில் இரண்டாம் தரமானவள் என்ற முடிவுக்குக் கொண்டு சென்றுள்ளன. இதனால்தான் ஆண்பிள்ளை பேர் சொல்லும்பிள்ளை; சாண் பிள்ளை ஆனாலும் ஆண்பிள்ளையாக இருக்க வேண்டும் என்கிற வழக்குகள் எல்லாம் ஆணை முதன்மைப் படுத்திய ஆதிக்க மனப்பான்மையினால் வெளிப்பட்டுள்ளன. காலம் காலமாகப் பெண்ணை ஆணுக்குக் கீழானவள் என்று தீர்மானம் செய்யும் கருத்தியல் ஆதிக்கப் போக்குகள் இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்களில் வெளிப்படுவதைப் பின்வருமாறு ஆராயலாம்.

1. ஆண் குழந்தைக்கான வரவேற்பு பெண்ணைப் பாதித்தல்
2. ஆண் சாதிப்புக்குரியவன், பெண் குடும்பம் நடத்த வேண்டியவள்
3. ஆணுக்கு நிகரான கல்வி, பெண்ணுக்குத் தேவையில்லை

கர்ப்பத்தில் இருக்கும் தலைப்பிள்ளையை ஆண் குழந்தையாக வரவேற்கத்தான் அனைவரும் தயாராக இருக்கின்றனர். ஒரு தனிமனிதனின் பொருளாதார நிலையும் இன்றைய சமூகத்தில் பெண் குழந்தை பிறப்பதைத் தீர்மானம் செய்யும் காரணியாக உள்ளது. வசதியுள்ளோர், படித்தோர் ஆண்-பெண் குழந்தைகளுக்கிடையே பெரும்பாலும் பாகுபாடு பார்ப்பதில்லை. பிறந்தது அனைத்தும் பெண் குழந்தைகளாக இருந்தாலும் அவர்களைக் கண்ணியமாக வளர்க்கும் பெற்றோர்களும் இருக்கிறார்கள். ஆனால் வசதியற்ற குடும்பங்களில் பிறக்கும் பெண் குழந்தைகளைப் பெரும்பாலும் சுமைகளாகவே கருதுகின்றனர். இன்றும் இம்மனநிலை உள்ளது என்றால் முந்தைய காலங்களில் பெண்ணின் நிலை எப்படி இருந்திருக்கும் என்பது சொல்லாமலே விளங்கும். பிறந்து தொலைத்து விட்டது இருந்து விட்டுப் போகட்டும் என்று விட்டு வைக்கப்பட்டவர்களே இன்றுள்ள பெரும்பான்மையான பெண்கள் என்று கருதும் அளவிற்குப் பெண் குழந்தைகளுக்கான வரவேற்பு முந்தைய காலங்களில் இருந்தது. இவ்வாறு பிறப்பிலேயே ஆண் அளவிற்குப் பெண் வரவேற்கப்படாமையே பெண் மீது விழுந்துள்ள முதல் கருத்தியல் ஆதிக்கம் எனலாம்.

'புள்ள பெறுற பாக்கியம் பொம்பளைக்கு இருக்கிற வரைக்கும் பெண் புனிதமானவள்தானும்மா...' (ஷர்மிளாவின் இதயராகம்; ப.19) என்று தங்களுக்கானப் புனிதத்துவ தகுதியைப் பேசுகிறாள் ஒரு பெண். ஆனால் தங்களைப் புனிதத்துவப் படுத்தும் பிள்ளை பாக்கியம் ஆண் குழந்தை பிறக்கும் போதே கிட்டுகிறது என்பதை அனுபவத்தில்தான் உணர்கின்றனர். இதனை '...தனக்கு இரண்டுமே பெண் குழந்தையாகப் போனதில் அவளுக்குத் தாழ்வு மனப்பான்மை' (பசுமைப் பூக்கள்., ப.40) என்ற ஒரு பெண்ணின் உள்ளப்பதிவு மூலம் அறியலாம்.

என்றாலும் பெண் குழந்தையே வேண்டாம் என்ற கருத்து எந்த நாவல்களிலும் பேசப்படவில்லை. பெண்கள் வாழ்வில் சந்திக்கும் சிக்கல்களைப் படைப்பாளிகள் வளர்த்தெடுக்கும் போது இத்தகு பிரச்சினைகளுக்கு ஆளாகாமல் இருக்கப் பெண்

பிறக்காமலேயே இருந்திருக்காலம் என்ற சிந்தனை காட்டில் எரிந்த நிலா, ஒரு கடலோர கிராமத்தின் கதை போன்ற நாவல்களில் வெளிப்பட்டுள்ளது. பிரச்சினைக்குரிய காரணத்தை ஆராயாமல் பாதிப்புக்குள்ளானவள் பெண் என்பதால் அவள் இல்லை என்றால் பிரச்சினை உருவாகாது என்கிற தப்பிக்கும் மனப்பான்மையின் வெளிப்பாடாகத்தான் இதனைக் கொள்ள வேண்டும். எனவே பெண்கள் சந்திக்கும் பிரச்சினைகளே பெண் குழந்தைக்கான வரவேற்பைக் கருத்தியல் ரீதியாக மறுப்பதற்குரிய காரணமாகக் கொள்ளலாம்.

ஆண் சாதிப்புக்குரியவன், பெண் குடும்பம் நடத்த வேண்டியவள் என்ற கருத்தியல் ஓர் ஆதிக்க மனப்பான்மையாகச் சமுதாயத்தில் உள்ளது. பெண் தனது கல்வி மற்றும் இதரத் தகுதிகள் மூலம் சாதிக்கப் பிறந்தவள் என்று யோசிப்பது கூட ஒரு காலத்தில் தவறாகக் கருதப்பட்டது. இன்றும் கூட ஒரு சிறுமி ஓடியாடி விளையாடினால், 'விழுந்து கைகால முறிச்சிடாதேம்மா, நாளைக்கு உன்ன எவன் கட்டுவான்' என்று ஐந்து வயதுக்கு முன்னரே அவள் திருமணத்துக்குத் தயாரிக்கப்படுபவளாகவே நினைக்கப்படுகிறாள். பெண்ணின் சகல வளர்ப்பிலும் அவள் திருமணம் நோக்கித் தள்ளப்படுபவளாகவே இருக்கிறாள். குடும்ப வாழ்க்கைக்கு உரியவள் பெண் என்பதை முதன்மைப்படுத்தி, அவளைக் குடும்ப வட்டத்தை மீறி, சிந்திக்க விடாமல் செய்வதே பெண்ணுக்கு எதிரான முக்கியக் கருத்தியல் ஆதிக்கமாக உள்ளது.

'பத்து வயசு சென்டா பறயண்ட கைலயாலும் பிடிச்சுக்குடு, ஏனென்டா பருவமான பெண்ணை வச்சிக்கிறது அவ்வளவு பாவம்' (ப.ம., பக்.62-63) என்ற வார்த்தைகள் பெண் குடும்ப வாழ்க்கைக்கான ஓர் உயிருள்ள இயந்திரம் என்ற மனநிலை சமுதாயத்தில் சிதையாமல் இருப்பதைக் காட்டுகிறது.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு பெண் பருவம் அடைந்த உடனேயே அவளது திருமணப் பேச்சு ஆரம்பமாகிவிடும். செல்வாக்கு மிக்கக் குடும்பங்களில் பருவமடைந்த பெண்ணை உடனடியாகத் திருமணம் செய்து கொடுக்காமல் வீட்டில் வைத்திருப்பதை அவமானமாகக் கருதினர். வடக்கு வீட்டு குடும்பத்துல புத்தி அறிஞ்சா (பருவமடைந்தா) உடனே கல்யாணம். 'புத்தி அறிஞ்சிட்டு ஆறுமாசம் எந்தப் பொண்ணும் இந்த குடும்பத்தில் இருந்ததில்லை' (ஒ.க.கி.க., ப.34) என்று பெருமை பேசும் வார்த்தைகளுக்குள் திணிக்கப்பட்ட வாழ்க்கையின் அவலம் இருப்பதை உணரலாம்.

முந்தைய காலத்தில்தான் இப்படி இருந்தது என்றில்லை. இருபது ஆண்டுகளுக்கு முந்தைய சமுதாயத்தில் கூடப் பெண்ணுக்கான கல்வியின் தேவை முன் வைக்கப்பட்டபோது, 'பெண் படித்து என்ன ஆவப் போகிறது? எவனையாவது கட்டிக்கிட்டுக் கஷ்டப்படப் போவதுதானே உண்மை' (சாணைக்கூறை, ப.177) என்ற காலங் காலமான நம்பிக்கை மாறாமல் இருந்தது வெளிப்படுகிறது.

அப்படியே படித்துப் பெண் வேலைக்குப் போனாலும், பெண்ணை வேலைக்கு அனுப்பியது தவறோ என்ற சிந்தனையும் பெற்றோரிடம் இருந்தது. 'மர்லியாவுக்கு நாளைக்கு கல்யாணமாகிக் குழந்தை குட்டி, கணவன், கடமை என்று வரும் போது இவள் இந்த அதிபர் பதவியை (தலைமை ஆசிரியை பதவி) எப்படிச் சமாளிக்கப் போகிறாள்?' என்று கவலைப்பட்ட தந்தை, 'பெண் பிள்ளையை உத்தியோகத்துக்கு விட்டது தவறோ என்று எண்ணினார்' (ப.ம., ப.12). ஒரு தந்தையின் இம்மனப்பாடு பெண் குடும்ப வாழ்வுக்கு மட்டுமே லாயக்கானவள் என்ற கருத்தியல் ஆதிக்கத்தின் வன்மையை வெளிப்படுத்துகிறது.

ஆணுக்கு நிகரான கல்வி, பெண்ணுக்குத் தேவையில்லை என்பது சமூகத்தில் பெண்ணுக்கு எதிராக வளர்ந்து நிற்கும் மற்றொரு கருத்தியல் ஆதிக்கம் ஆகும்.

பெண்ணுக்கு இஸ்லாம் மார்க்கம் சார்ந்த கல்வி மட்டும் போதும் உலகக்கல்வி தேவையில்லை என்ற கருத்தை முந்தைய இஸ்லாமியச் சமுதாயத்தினர் கொண்டிருந்தனர். பெண் பூப்படைவதற்கு முன்னாலேயே குர்ஆன் ஓதி முடித்திருக்க வேண்டும். குழந்தையைத் தாலாட்டுவதற்காகப் பதர்ப்படை, முஹ்யித்தீன் மாலை, நபிசத்மாலை போன்ற இசைப்பாடல் இலக்கியங்களை மனனம் செய்திருக்க வேண்டும். இவையே பெண்ணிடம் எதிர்பார்க்கப்பட்ட கல்வியாக முந்தைய சமூகத்தில் இருந்தது (ஒ.க.கி.க., ப.32) காலம் மாறினாலும் ஒரு பெண்ணுக்குத் தேவையான கல்வி, 'குர்ஆன் முப்பது ஜுஸுவும் (தொகுதிகளும்) ஓதியிருக்க வேண்டும். மௌளலூது, தலைப்பாத்தியா தெரிந்திருக்க வேண்டும்.[11] தொழுகை முறைகளைப் படித்திருக்க வேண்டும். இதைவிட்டு ஆங்கிலம்... விஞ்ஞானமெல்லாம் ஒரு பெண்ணுக்குத் தேவையில்லை' (ப.ம., பக்.139-140) என்ற உறுதியில் சமுதாயம் இருந்தது.

பெண்ணைக் கல்வி கற்கச் சமுதாயம் அனுமதித்தாலும், பெரும்பான்மையான பெண்கள் பூப்படைவது வரையே கல்வி கற்க

அனுமதிக்கப்பட்டனர் (பம., பக்99) அப்படியே படிக்க வைத்தாலும் உள்ளூர்ப் பள்ளிக்கூடத்தில் இருந்த வகுப்பு நிலை வரைதான் படிக்க வைத்தனர். வெளியூர்களுக்கு அனுப்பிப் படிக்க வைப்பதைத் தவிர்த்தனர். 'குமரிப்பிள்ளைகளை வெளியூர்களுக்குப் படிக்க அனுப்பினால் கெட்டு விடுவார்கள்' (அ.ஒ., ப.58) என்று பயந்தனர்.

படித்த பெண்கள் சுயமாகச் சிந்தித்து ஏதாவது பேசினால் - முடிவு எடுத்தால் படிப்பு கொடுத்த திமிர் என்று விமர்சனம் செய்தனர் (ஷா.இ.ரா., ப.49).

ஆணைப் போலப் பெண் கல்வி கற்க வேண்டியதில்லை என்ற கருத்தியல் ஆதிக்கம் சமுதாயத்தில் இருப்பதைப் படைப்பாளிகள் சுட்டிக்காட்டினாலும், இந்தக் கருத்தியல் மாற்றப்படவேண்டும் என்ற சமுதாய முயற்சிகளையும், படித்த பெண்கள் சாதிப்பதையும் அன்பு உள்ளங்கள், அடிவானத்து ஒளிர்வுகள், பனிமலர், அவளுக்கென்று ஓர் இதயம் போன்ற நாவல்களில் வெளிப்படுத்தியுள்ளனர்.

### பெண்களுக்கு எதிரான அமைப்பியல் ஆதிக்கம்

குடும்ப, சமுதாய அமைப்புகளில் பெண் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற எழுதப்படாத பல சட்டங்கள் பெண்ணைக் சுயமாகச் செயல்படுவதிலிருந்தும் முடக்கிப் போடுகின்றன. ஆண்கள் மட்டுமல்லாமல் குடும்பத்தில் ஆதிக்கம் செலுத்தும் பெண்களும் கூடத் தங்களை நம்பி வாழ்பவர்கள் என்பதற்காகப் பெண்ணின் மீது ஆதிக்கம் செலுத்துகின்றனர். இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்கள் சித்திரிக்கும் பெண்ணுக்கு எதிரான அமைப்பியல் ஆதிக்கத்தைக் கீழ்க்கண்ட இருதளங்களில் ஆராயலாம்.

1. குடும்ப அமைப்பில் பெண் பாதிக்கப்படல்
2. சமுதாய அமைப்பில் பெண் பாதிக்கப்படல்

### குடும்ப அமைப்பில் பெண் பாதிக்கப்படல்

சமுதாய வாழ்வின் அடிப்படை அலகாக, மனித நாகரிகத்தின் ஆரம்பப் பாடசாலையாகக் குடும்பம் திகழ்கிறது. வரையறுக்கப்பட்ட அழகிய சட்டங்களையும் சுதந்திரமான வழி முறைகளையும் குடும்பத்தின் ஆரோக்கியமான வளர்ச்சிக்காக இஸ்லாம் தந்துள்ளது. குடும்ப வாழ்வில் ஆண் - பெண்ணிற்கான பொறுப்புகளையும் உரிமைகளையும் வகுத்தளித்து மகத்தான வாழ்வியலுக்கு வழிகாட்டியுள்ளது.[12] ஆணைப் பெண்ணின் நிருவாகியாக்கி, அவனுக்கு ஒருபடி உரிமையை இஸ்லாம்

அதிகமாக வழங்கியுள்ளது (அல்குர்ஆன்., 4:34-35). அவ்வுரிமை பெண்ணின் பாதுகாப்பாளன் என்ற பொறுப்பை அவனுக்கு அளிப்பதுதானே தவிரப் பெண்ணை அடிமைப்படுத்த வழங்கப்பட்ட உரிமை அல்ல. ஆனால், குடும்ப அமைப்பிற்குள் ஆணாதிக்கத்தாலும், குடும்பத்தின் பிற அங்கத்தினராலும் மட்டுமல்லாமல் குடும்பத்தில் நடக்கும் நிகழ்வுகளாலும் பெண் பாதிப்புக்குள்ளாகிறாள். இவ்வாறு குடும்ப அமைப்பில் பெண்ணைப் பாதிக்கும் காரணிகளைப் பின்வருமாறு ஆராயலாம்.

1. பெண் சம்பந்தப்படாமலேயே பாதிக்கப்படல்
2. வரதட்சிணையால் பாதிப்புக்குள்ளாதல்
3. குடும்பப் பொறுப்பினால் கல்வி தடைப்படல்
4. சுயமாக இயங்க - முடிவெடுக்க முடியாமை
5. ஆணின் அதிகாரத்திற்கு அடங்கிப் போதல்
6. பெண்ணே பிற பெண்ணுக்கு எதிரியாதல்
7. பெண்ணின் உரிமைகள் கூட நடைமுறையில் அவளுக்கு எதிராதல்.
8. பெண்ணின் உணர்வுகளுக்கு மதிப்பின்மை

ஒரு பெண் எந்தவிதத் தவறும் செய்யாமல் அவளால் எவ்வித நிர்பந்தமும் பிறருக்கு ஏற்படாமல் அவள் பாதிப்புக்குள்ளாகும் பல வாய்ப்புகள் குடும்ப அமைப்பில் நிகழ்கின்றன. ஒரு குடும்பத்தின் பூர்வீகம் சமுதாயத்தில் விமர்சனத்திற்குள்ளானால், அக் குடும்பத்திலுள்ள பெண்ணின் திருமண ஏற்பாட்டின் போது அவ்விமர்சனம் அவளது எதிர்காலத்தைச் சிக்கலுக்குள்ளாக்குகிறது (பணவிலங்கு, அத். 3,4). அவள் பிறப்பதற்கு முன்னால் முந்தைய தலைமுறையில் அக்குடும்பத்தில் யாரோ ஒருவர் செய்த தவறாக இருந்தாலும் அதனைப் பெண்ணின் திருமணப் பேச்சின்போது அலசல் என்பது அவளது எதிர்காலத்தையே கேள்விக்குறியாக்குகிறது.

குடும்பத்தில் ஒருவர் செய்த குற்றமும் அக்குடும்பத்திலுள்ள பெண்ணின் வாழ்வைப் பாதிக்கிறது. குற்றம் செய்து ஜெயிலுக்குப் போன அண்ணனால் குடும்பத்திற்கு ஏற்பட்ட பழி, பெண்ணின் திருமணத்தின் போது அவளது ஆசைகளை நிராசையாக்கி விடுகிறது. விருப்பமில்லாத ஒரு வாழ்க்கைக்குள் அவள் தள்ளப்படுகிறாள் (ஷா.இ.ரா., ப.16).

பெண் சம்பாதிப்பவளாக இருந்தால், அவள் ஈட்டும் பொருளாதாரத்தின் மூலம் கிடைக்கும் சுகங்களைத் தொடர்ந்து

அனுபவிப்பதற்காகவே அவளது திருமணத்தை நீட்டிக்கும் பெற்றோர் உள்ளனர். சம்பாதிக்கும் பெண்ணை உரிய காலத்தில் திருமணம் செய்து கொடுத்தால் அவள் மூலம் வரும் வருமானம் நின்று போய்விடும் என்பதற்காக மகளின் திருமணம் பற்றியே பேச்செடுக்காத தந்தையை, அவளுக்கும் ஓர் இதயம் நாவலில் காணலாம். இதனால் தன் ஆசையை மென்றுவிழுங்கி வாழும் அவல நிலைக்குப் பெண் தள்ளப்படுகிறாள் (பக். 104-105;110). இவ்வாறு குடும்ப அமைப்பில் நிகழும் சில ஆதிக்கப் போக்குகளால் எவ்விதத் தொடர்பும் இல்லாமல் பெண் பாதிக்கப்படுவதைக் காணலாம்.

குடும்ப அமைப்பிற்குள் பெண்ணைப் பாதிக்கும் முக்கியப் பிரச்சினை வரதட்சிணை ஆகும். இஸ்லாமியச் சமூகத்தைச் சேர்ந்த பெண்கள் விசேஷமாக ஏழைப்பெண்கள் சீதனக் கொடுமையால் அல்லலுறுவதைப் பற்றி எழுத்தாளர்கள் நிறைய எழுத வேண்டும் என்ற எண்ணத்தைக் கொண்டிருந்ததால் ஜுனைதா ஷெரீப் தனது படைப்பு நோக்கைத் தந்துள்ளார்.[13] இவரின், காட்டில் எரிந்த நிலா, சாணைக் கூறை, அவளுக்கும் ஓர் இதயம், மூன்றாம் பிறை நாவல்களிலும்; ஜே.எம். சாலியின் பணவிலங்கு நாவலிலும்; ஹிமானா சையத்தின் புயலில் ஒரு பூ, பசுமைப்பூக்கள் நாவல்களிலும்; கருணாமணாளனின் வெள்ளை ரோஜா, மாமியார் நாவல்களிலும் வரதட்சனைப் பிரச்சனையே கதைச் சிக்கல்களுக்குக் காரணமாக அமைந்துள்ளது.

வரதட்சிணைப் பிரச்சினையினால் நின்று போகும் திருமணத்தால் பெண் பாதிக்கப் படுகிறாள் (ப.வி., அத்.2). வரதட்சிணைப் பாக்கிக்காக அடிக்கடி தாய் வீட்டுக்கு அனுப்பப்படும் நிர்பந்தத்திற்குப் பெண் தள்ளப்படுகிறாள் ( பு.ஒ.பூ., பக்.28-29). மார்க்க ஒழுக்கம், அழகு இருந்தும், 'அழகு பெரிய அழகு! சில பெட்டை நாய்களுந்தான் அழகாயிருக்கு அதுக்காக அதுகளை யாரும் முடிப்பாங்களா?' (கா.எ.நி., ப.97) என்பது போன்ற பேச்சுகளால் பெண் மன அளவில் பாதிக்கப்படுகிறாள். பெண் படித்திருந்தாலும் அவள் படிப்புக்கேற்ற பட்டதாரி மாப்பிள்ளையாகத் தேடும் போது, அவளது படிப்பு பின்னுக்குத் தள்ளப்பட்டுப் பணமே பிரதானப் படுத்தப்படுகிறது.

ஓர் ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழும் வாழ்க்கையின் ஆரம்பமே அவர்களின் திருமணம்தான். புனித திருக்குர்ஆன் பரிபூரணமான ஒரு வாழ்க்கைத் திட்டமாக, மனித வாழ்க்கைக்கான காப்பாகத் திகழ்கிறது. இதில் திருமணங்கள் எவ்வாறு நிகழ வேண்டும் என்பது துல்லியமாகக் காட்டப்பட்டுள்ளது.

வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்விலும் திருக்குர்ஆனின் போதனைகளைப் பின்பற்ற வேண்டிய முஸ்லிம்களில் பெரும்பான்மையோர், வாழ்க்கையைத் தொடங்கும் போதே அதன் போதனைகளுக்கு ஏற்பச் செயல்படாமல் விடுகிறார்களே என்பது தான் இன்றைய கவலையாக உள்ளது. இந்தக் கவலையைப் படைப்பாளிகள் தங்கள் நாவல்களில் அதிகமாக வெளிப்படுத்தியுள்ளனர்.

'மஹர்' திருமணத்தை முன்னிட்டுப் பெண்ணுக்குச் சேர வேண்டிய உரிமையாகும். திருமண ஒப்பந்தத்தின் போது மணமகன் மணமகளுக்குத் திருமணக் கொடையான மஹரைப் பணமாகவோ பொருளாகவோ கொடுக்க வேண்டும் என்பது இஸ்லாமியச் சட்டம். "பெண்களுக்கு அவர்களுடைய மஹரை மகிழ்வோடு கொடுத்து விடுங்கள்" (4:4) என்று திருக்குர்ஆன் கட்டளையிடுகிறது.

நடைமுறையில் இம்மஹரைச் செயல்படுத்துவதில் பல முரண்பாடுகள் உள்ளன. 'மஹர் கொடுக்காமல் பெண்ணைத் தொடலாமா? நம்ம இஸ்லாமிய சட்டம் விடுமா?' (கா.எ.நி., பக்.64-65) என்ற அளவிற்கு இச்சட்டம் பற்றிய அறிவு இஸ்லாமியர்களிடத்தில் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் மஹரை எப்படி நிறைவேற்றுகிறார்கள் என்பதில்தான் சிக்கல்கள் உள்ளன.

மணமகன் தனது உழைப்பிலிருந்து - சொந்தப் பணத்திலிருந்து தன் சக்திக்கேற்றவாறு மஹரைக் கொடுக்க வேண்டும். ஆனால் பெரும்பாலும் பெண் வீட்டிலிருந்து வரதட்சிணையாக வாங்கும் பணத்திலிருந்தே ஒரு சிறு தொகையை மஹராகக் கொடுத்து விடுகின்றனர். வரதட்சிணை வாங்குவது இஸ்லாம் அனுமதிக்காத வழக்கமாகும். மார்க்கத்திற்கு முரணான ஒரு வழக்கத்தை மேற்கொள்வது மட்டுமல்லாமல் அதிலிருந்தே மார்க்கச் சட்டமான மஹரை நிறைவேற்றும் அவலமும் தொடர்கிறது. 'இவங்க தந்த ரொக்கப் பணத்திலிருந்து ஆயிரத்தொரு ரூபா எடுத்துத் தாலி கட்டின உடனேயே பெண் கையில கொடுத்தாச்சு' (கா.எ.நி., பக்.64-65) என்பது மிகச் சரியாக மஹரை நிறைவேற்றி விட்டோம் என்ற மக்கள் நம்பிக்கையைக் காட்டுகிறது. இதுவே பெரு வழக்காகவும் உள்ளது. அதனால்தான் 'இவங்க பணத்தையே திருப்பி இவர்களுக்கு மஹராக கொடுத்தீங்களாக்கும்?' என்ற கேள்விக்கு, 'நம்ம ஊர் வழக்கமே அதுதானே' (கா.எ.நி., பக்.64-65) என்று பதில் வருகிறது.

"பெரும்பான்மையான திருமணங்களில் பெண்ணின் தகப்பனிடம் கைநீட்டிப் பெறும் கைக்கூலிப் பணத்தில்

இருந்துதானே அந்தப் பெண்ணுக்கு மஹர் கொடுக்கிறார்கள். தன் மானமற்ற இந்தச் செயல் எப்போது நிறுத்தப்படுகிறதோ, அப்போதுதான் இக்கதையில் வரும் கதாநாயகி போன்று காட்டில் எரித்த நிலாவாக வாழ்ந்து கொண்டிருக்கும் பல்லாயிரம் ஏழைக் குமர்களுக்கு விடிவு கிடைக்கும்" என்று தன் படைப்பு நோக்கத்ததை ஜுனைதா ஷெரீப் என்ற படைப்பாளி வெளிப்படுத்தியுள்ளார்[14].

பல திருமணங்களில் திருமண ஒப்பந்தத்தின் போது மஹர் பணத்தை அறிவிப்பர். ஆனால் அதற்கு மதிப்பளித்துக் கொடுப்பதில்லை. கடனாகவும் கூறிவிடுவர். 'இப்ப மஹர் பணத்தை எந்த மாப்புள்ள குடுக்கான்? நிக்காவின் புத்தகத்தில் (திருமணப் பதிவேடு) மஹர் ரூபா ஆயிரத்தி ஒண்டு - கொடுபடவில்லை' என்று எழுதிப்போட்டு காரியத்தை முடிக்காங்க' (ப.ம., ப.190). இவ்வாறு நடைமுறையில் இச்சட்டத்தைச் செயல்படுத்துவதில் உள்ள நெகிழ்வுத்தன்மையைப் பல நாவல்கள் சுட்டுகின்றன.

மஹர் பணத்தை மணமகன் மணமகளைத் தொடுவதற்கு முன், அவள் கரங்களில் கொடுத்தாக வேண்டும். அப்பணத்தில் உரிமை கொண்டாடக் கணவன், பெற்றோர் முதல் யாருக்கும் உரிமை கிடையாது. ஒரு வேளை மஹரைக் கடனாக அறிவித்திருந்தால், எப்படியாவது அதனைக் கொடுத்துவிட வேண்டும். கொடுக்க முடியாத சிக்கலில் கணவன் இருந்தால் மனைவி அதனை மன்னிக்கலாம். ஆனால் மஹரை அறிவித்து விட்டுக் கடைசிவரை கொடுக்காமலேயே ஒருவன் வாழ்க்கை நடத்தி முடித்து விட்டான் என்றால், அவன் வாழ்ந்தது வாழ்க்கையாகாது, அது முறையற்ற விபச்சாரத்தை ஒக்கும் என்று மார்க்கம் எச்சரிக்கிறது.

மஹரைச் செயல்படுத்த வேண்டிய பொறுப்பு ஊர் நிருவாக அமைப்புக்கு உண்டு. திருமணத்தின் போது மணமகன், மணமகளிடத்திலும் திருமண ஒப்பந்தம் செய்து வைக்கும் வக்கீல் (பெண்ணின் தந்தை), இரு சாட்சிகளிடமும் கையெழுத்து வாங்கல், மஹர் எவ்வளவு என்பதைப் பதிவேட்டில் குறித்தல் ஆகிய முறைகளை மிகச்சரியாக நிறைவேற்றும் நிர்வாக சபையினர், மஹர் தொகை மணமகள் கையில் கொடுக்கப்பட்டதா என்பதை உறுதி செய்யத் தவறிவிடுகின்றனர்.

சில ஊர்களில் நிர்வாக சபையே குறிபிட்ட தொகையை மஹராக நிர்ணயித்துள்ளது. இந்த நிர்ணயம் பணக்காரர், ஏழைகள் என ஊரார் அனைவருக்கும் ஒரு நிர்ணயமாக உள்ளது. ஒவ்வொருவரும் அவரவர் தகுதிக்கேற்ப மஹர் கொடுக்க மார்க்கம்

பணித்திருக்கும் போது, ஏழைகள் ஊர்ச்சபை நிர்ணயித்த தொகையைக் கொடுக்க முடியாமல் சிரமப்படுவர். இத்தகு சிரமத்தையும் (அத்.12) பணவிலங்கு நாவலில் ஜே.எம். சாலி சித்திரித்துள்ளார்.

பெண் வீட்டாரிடம் இருந்து மணமகன் வாங்கும் வரதட்சிணையில் குறிப்பிட்ட சதவிகிதத்தை ஊர்ச்சபைக்கு வழங்க வேண்டும் என்ற விதிகளையும் பல ஊர்களில் வைத்துள்ளனர். இவ்வழக்கம் இஸ்லாம் மார்க்கம் அனுமதிக்காத வரதட்சிணைக்கு நேரடியாக ஜமாஅத் அமைப்புகள் துணை போவதைக் காட்டுகின்றன. இவற்றையெல்லாம் களைந்து மஹர் சட்டத்தை மிகச் சரியாகச் செயல்படுத்த வேண்டியவர்கள் மார்க்க அறிஞர்கள் ஆவர். ஆனால் அவர்களே இத்தகு முரணான காரியங்கள் எல்லாம் நடக்கும் திருமணத்தை முன்னின்று நடத்தி வருகின்றனர்.

'ஜும்மா தொழுகையில் ஆண்கள் தங்களுடைய உழைப்பிலிருந்து பெண்களுக்கு மஹர் கொடுத்துத் திருமணம் செய்ய வேண்டுமென்ற அல்லாஹ்வின் கட்டளையை ஒரு மௌலவி (மார்க்க அறிஞர்) கூறுகிறார். இப்போது மூன்று குமர்களை இன்னும் வைத்துக் கொண்டிருக்கும் ஓர் ஏழை, தன்னிடம் உள்ள அத்தனைச் சொத்துக்களையும் ஒரேயோர் மகளுக்கு மட்டும் கொடுக்காமல் விட தனக்கு உதவி செய்யுமாறு கெஞ்சும் வேளையில், பேசியது போல் கொடுக்க வேண்டுமென வேறொரு மௌலவி தீர்ப்புக் கூறுகிறார்.. இந்த ஏழைக்குப் பரிந்து ஒரு வார்த்தை பேசக் கூடாதா? இசுலாமியச் சட்டம் இதுதான் என மாப்பிள்ளை மஹர் கொடுத்துப் பெண்ணைத் திருமணம் செய்ய வேண்டும் என்பதைச் சபையில அடித்துக் கூற இயலாதா? ஆமாம் இவரால் முடியாதுதான், ஏனெனில் இவரே கைக்கூலி வாங்கித்தான் திருமணம் செய்தார்' (கா.எ.நி., ப.66) என்று கதை நிகழ்வு மூலம் மஹரை நிலைநிறுத்த வேண்டிய மார்க்க அறிஞர்களே வரதட்சிணைக்குத் துணை போவதை ஜுனைதா ஷெரீப் விமர்சித்துள்ளார்.

இவ்வாறு மார்க்க அறிஞர்களை விமர்சிப்பதோடு நின்று விடாமல், மஹர்சட்டத்தை மிகச் சரியாகப் பேணிய மார்க்க அறிஞரையும் முன்மாதிரியாகக் காட்டுகின்றனர். 'தனது உழைப்பில் குருவி சேர்ப்பது போல் மிச்சம் பிடித்துச் சிறிய வீடொன்றைக் கட்டி, தனது தகப்பன் வழியில் தூரத்துச் சொந்தக்காரியான ஏழையொருத்தியை மஹர் கொடுத்துத் திருமணம் செய்து, தான் கட்டிய வீட்டில் வைத்துச் சிக்கனமாகக் குடும்பம் நடத்திக்

கொண்டிருக்கிறார்' (கா.எ.நி., பக்.101) என்று ஓர் இளம் மௌலவி முன்மாதிரியாகக் காட்டப்படுகிறார்.

மஹர் எவ்வளவு என்று திருமண மேடையில் ஒரு மார்க்க அறிஞர் கேட்கிறார். மணமகன் கோடீஸ்வரன் வீட்டுப்பிள்ளை. மஹர் எவ்வளவு என்று பொதுச்சபையில் கேட்டது மணமகன் குடும்பத்தினை அவமானப்படுத்தி விட்டதாகப் பிரச்சினை எழுகிறது. ஆனால் மஹரை அறிவித்துக் கொடுத்த பின்னர்தான் திருமண ஒப்பந்தம் நடைபெறும் என்று மௌலவி உறுதியாகக் கூறுகிறார். இதற்கு மக்கள் மத்தியில் வரவேற்பு இருப்பதை, 'கோடி வாங்கிட்டு லட்சம் கொடுத்தாலும் அதுக்குப் பேரு மஹரா? எங்க ஊருக்கு இப்படியொரு பேஷ்இமாம் (மார்க்க அறிஞர்) இல்லியேன்னு நான் துக்கப்படுகிறேன். நிக்காஹ் மஜ்லிஸில் (திருமணச்சபை) உண்மையைத் தெரிஞ்சுட்டுத்தான் நிக்காஹ் ஓதவேண்ணு ஒவ்வொரு பேஷ் இமாமும் துணிச்சலோட சொன்னா, முக்காலே மூணுவீசம் மாப்பிளைமாரு மூக்கறுபட்டுத்தான் போவனுவோ-கொடுக்கிறது ஒண்ணு, எழுதுறது ஒண்ணு, சபையறியச் சொல்லுறது ஒண்ணுண்ணா நாம ஏமாத்துறது அல்லாவையும், ரசூலையும்தான்' என்று ஒரு பேஷ் இமாம் பதவி ஏற்கிறார் நாவலில் ஆளுர் ஜலால் தனது பாத்திரத்தின் வாயிலாகப் பேசுவதிலிருந்து அறியலாம். 'கைக்கூலி வாங்கும் பழக்கத்தைச் சமூகத்தின் சகல தரப்பாரும் ஒட்டு மொத்தமா எதிர்க்கத்தான் நம்ம மார்க்கமே சொல்லுது' (ப.111) என்று வரதட்சிணைக்கெதிராகவும் மஹர் சட்டத்தை அமல்படுத்துவதில் உறுதியாகவும் உள்ள மார்க்க அறிஞர் மூன்றாம் பிறை நாவலில் காட்டப்படுகிறார்.

இச்சித்திரங்கள் சமுதாயத்தில் மார்க்கக் கூட்டங்களைச் சொல்லும் அறிஞர்கள் சரியாக இருந்தால் மஹர் சட்டம் போன்றன முறையாக மக்களால் பின்பற்றப்படும் என்ற நாவலாசிரியரின் ஆதங்கத்தை வெளிப்படுத்துவதாக அமைகின்றன.

சமுதாயத்தில் தலைவிரித்தாடும் வரதட்சிணைப் பிரச்சினை ஏழை முதிர்கன்னிகளை அதிகரிக்கச் செய்து வருகிறது. மஹர் கொடுத்துப் பெண்ணை மணமுடிக்க இஸ்லாம் கூறும்போது வரதட்சிணை முன்னிறுத்தப்படுகிறது என்றால், அதனைக் கண்டும் காணாமல் சமுதாயம் இருந்ததென்றால் இம் மஹர் சட்டம் எதற்கு என்ற கோபத்தில், திருமணமாகாத காரணத்தால் மனநிலை பாதிக்கப்பட்ட நாயகி ஒருத்தி மஹர் சட்டத்தையே எரித்து விடுகிறாள்.

'...அவள் கடதாசி துண்டொன்றைக் கையில் பிடித்து எரித்துக் கொண்டிருந்தாள்... சட்டத்தை எரிச்சிப்பிட்டேன். இனி சட்டம் இல்லை. கைக்கூலி வாங்கிறவங்க அல்லா தண்டிப்பான்னு இனி பயப்படத் தேவையில்லை' (கா.எ.நி., ப.130) என்று மஹர் பற்றி எழுதப்பட்டிருந்த பத்திரிகையை எரிப்பதாக ஆசிரியர் சித்திரித்துள்ளார்.

படைப்பாளிக்குச் சமூகத்தின் மீதுள்ள கோபம் இதனால் புலப்படுகிறது. மஹர் சட்டத்தைவிட்டுக் கொடுக்க படைப்பாளி தயாரில்லை. அதனால்தான் பத்திரிகையில் மஹர் பற்றி எழுதியதை எரிப்பதாகக் காட்டுகிறார். மேலும் எரிப்பவள் மனநிலை சரியில்லாத பெண் என்பதையும் காட்டுகிறார். ஓர் அர்த்தத்தில் இச்சித்திரிப்பு சமூக விமர்சனத்தில் இருந்து படைப்பாளி தப்பிப்பதற்காக ஏற்படுத்தியுள்ள சித்திரம் என்று எடுத்துக் கொண்டாலும் வரதட்சிணையின் கொடுமை எந்த அளவு பெண்கள் வாழ்வைச் சிதைத்து வருகிறது என்பதன் வெளிப்பாடாகவே இதனைக் கொள்ளலாம்.

இச்சித்திரிப்பை விமர்சனம் செய்து படைப்பாளி ஜுனைதா ஷெரீபிற்குக் கண்டனங்கள் ஏதும் வந்தனவா என்று நேரில் வினவிய போது, "இல்லை... இலங்கை வாசகர்கள் தமிழக வாசகர்களைப் போல் உணர்ச்சி அடிப்படையில் எழுத்தை அணுகுவதில்லை. அறிவார்ந்த நிலையிலேயே அணுகுகின்றனர். எனவே என் எழுத்தின் ஆதங்கம் புரிந்து விமர்சனம் செய்யவில்லை. மஹர் சட்டத்தை விமர்சிப்பது என் நோக்கமல்ல. அது அல்லாவின் சட்டம் பெண்ணுரிமைக்கான காப்புச் சட்டம். ஆனால் அச்சட்டத்தைச் சமுதாயம் உதாசீனப்படுத்தி வருகிறதே, இந்தச் சட்டத்தையே எடுத்து விட்டால் மேலும் மகிழ்ச்சியடையக்கூடிய அளவிற்குச் சமுதாயம் உள்ளதே என்பதை வெளிப்படுத்தத்தான் நான் அவ்வாறு எழுதினேன்" என்று பதிலளித்தார்[15].

இவ்வாறு இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்களில் பெண்ணுக்கான வாழ்வாதார உரிமையாக இஸ்லாம் வழங்கி உள்ள மஹர் சட்டம் சமுதாயத்தில் இன்று பெற்றுள்ள மதிப்பு படைப்பாளிகளால் சரியான கண்ணோட்டத்தில் விமர்சனப்படுத்தப்பட்டுள்ளது. பெண்ணின் வாழ்க்கையைப் பாதிப்புக்குள்ளாக்கும் வரதட்சிணைப் பிரச்சினைக்குத் தீர்வாக ஆண் பெண்ணுக்குத் திருமணக் கொடையாக வழங்க இஸ்லாம் சட்டமாக்கியுள்ள 'மஹர்' படைப்பாளிகளால் வலியுறுத்தப்பட்டுள்ளது. 'மஹர் கொடுத்து மண முடிக்கக்

கட்டளையிட்ட புனித இஸ்லாத்தில் விலை கொடுத்து மாப்பிளைகளை வாங்க வேண்டிய இழிநிலை ஏற்பட்டு விட்டதே!' (க.பூ;பக்.11-12) என்ற கவலையை முன்வைக்கும் படைப்பாளிகள், மஹர் சட்டத்தை முறைப்படுத்துவதே வரதட்சிணைப் பிரச்சினையிலிருந்து பெண்ணை மீட்டெடுக்க ஒரே வழி என்பதை நாவல்களில் வெளிப்படுத்தியுள்ளனர்.

இஸ்லாமியச் சமுதாயத்தில் பெண் கல்விக்கான வாய்ப்புகள் சமீப காலத்தில்தான் அதிகமாக உருவாகி வருகின்றன. இச்சூழலில் குடும்ப அமைப்பில் பெண்களின் மீது திணிக்கப்படும் பொறுப்புகள் அவர்களது கல்விக்குத் தடையாக அமைந்து விடுகின்றன. குடும்பத்தைப் பராமரித்தல், தம்பி தங்கைகளைத் தாயுடன் சேர்த்து வளர்த்தல் போன்ற காரணங்களுக்காகப் பெண்ணின் கல்விக்குத் தடை ஏற்படுகிறது (கா.எ.நி., ப.42) பல குழந்தைகளோடு நடுத்தர ஏழைக் குடும்பங்களில் பிறந்த மூத்த பெண்களுக்கு இந்தப் பரிதாபம் ஏற்படுவது பொது விதியாக உள்ளது.

குடும்ப அமைப்புக்குள் முதலில் பெற்றோரின் ஆதிக்கத்திலும், திருமணத்திற்குப் பின் கணவன் மற்றும் அவனது குடும்பத்தாரின் ஆதிக்கத்தின் கீழும் பெண் வருவதால் அவளால் சுயமாக இயங்க, முடிவெடுக்க முடியாத நிலை ஏற்படுகிறது. பல நாவல்களில் வரும் பெண் பாத்திரங்கள் இந்தச் சிக்கல்களுக்கு ஆளாகின்றன. கணவனை இழந்த, படித்த அறிவுள்ள பெண் கூட, தனது கணவன் விட்டுச் சென்ற பணிகளைத் தான் விரும்பியபடித் தொடர முடியாத நிலைக்கு ஆளாகிறாள். 'புருஷனை இழந்த நீ வீட்டுக் காரியங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறதை விட்டு, உனக்கு ஏன் இந்த வேலை?' (ச.தொ., ப.38) என்று தந்தையாலும் எச்சரிக்கப்படுகிறாள். தன் விருப்பப்படி அவள் இயங்கும் போது விதவை இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற ஆதிக்கக் கருத்தியலால் முடக்கப்படுகிறாள்.

ஒரு பெண்ணுக்கு அவளது கணவனே எல்லாமுமானவன். அவன் ஒரு தவறு செய்தாலும் அதனைச் சகித்துக் கொண்டு வாழ்வதுதான் ஒரு மனைவியின் கடமை என்ற ஆதிக்கச் சிந்தனை குடும்ப அமைப்பில் வலுவாகக் கட்டமைக்கப்பட்டுள்ளது. 'ஆண் சேற்றைக் கண்டால் மிதிப்பான். நீரைக் கண்டால் கழுவுவான். நல்ல பதிவிரதையான மனைவி அவனைக் குறை கூறாது வரவேற்பாள்' (ஷா.இ.ரா., ப.82). கணவனின் கூடா ஒழுக்கத்தைக் கூடச் சகித்துக் கொண்டு வாழ்பவள்தான் உண்மை மனைவி என்று நம்பிக்கை

ஊட்டப்பட்டுள்ளது. 'கணவன் செய்யும் தவறுகள் கொடுமைகளைப் பொருட்படுத்தாமல், நாணலைப் போல வளைந்து கொடுத்து வாழ வேண்டிய புனிதப் படைப்பே பெண்' (ஷா.இ.ரா., ப.82) எனத் தன் அபிலாஷைகளை விட்டுக் கொடுத்து வாழ்வதுதான் பெண்ணின் புனிதமாகக் கருதப்படுகிறது.

தவறுகளின் மொத்த உருவமான தன் கணவன் ஜெயிலில் இருந்து விடுதலையாகி வந்தவுடன் அவனால் பல துன்பங்களுக்கு ஆளான அவள், அவற்றை எல்லாம் மறந்து விட்டு அவனது கால்களில் விழுந்து வரவேற்கிறாள் (ஷா.இ.ரா., ப.154). இது குடும்ப அமைப்பில் பெண் மிக இயல்பாக அடிமைத் தனத்திற்கு ஆளாகிக் கிடக்கிறாள் என்பதன் வெளிப்பாடாக உள்ளது.

குடும்ப அமைப்பில் பெண் அனுபவிக்கும் பல இன்னல்களுக்குப் பிற பெண்களும் காரணமாகவும் அமைந்து விடுகின்றனர். திருமணப் பேச்சு வார்த்தைகளில் வரதட்சிணையைத் தீர்மானிப்பவர்களாகப் பையனின் தாயார், சகோதரிகளே உள்ளனர். மாமியாரும் மருமகளும் முரண்பட்டு நிற்பதே அவர்களுக்குள்ள தனித்துவமாக உள்ளது. 'மாமியார் மாமியார்தான். அவள் ஒரு போதும் தாயாக மாட்டாள்' (புஒபூ., பக்.44-45) என்று நாவலாசிரியர் ஹிமானா சையத் உறுதி செய்து விடுகிறார்.

திருமணப் பேச்சுகளில் மட்டும் தாயின் சொல்லைத் தட்டாது விசுவாசத்துடன் மகன்கள் நடந்து கொள்வதும், திருமணத்திற்குப் பின் தாயின் பேச்சைக் கேட்டு மனைவியிடமோ அல்லது மனைவியின் பேச்சைக் கேட்டுத் தாயிடமோ முரண்பட்டு நடந்து கொள்வதும் பெண்மீது பெண் ஆதிக்கம் செலுத்துவதற்குத் துணை போவதாக அமைந்துள்ளது.

குறிப்பிட்ட பகுதிகளில் பெண்ணுக்கு வழங்கப்பட்டுள்ள உரிமைகள் கூட அவளுக்கு எதிராக அமைந்து விடுகின்றன. பெண்ணுக்குப் பிறந்தகத்தில் இருந்து வீடு கொடுக்கும் வழக்கம் தமிழகத்தில் காயல்பட்டினம் பகுதியிலும், தஞ்சாவூர், நாகபட்டினம் மாவட்டங்களின் சில பகுதிகளிலும், காரைக்கால், கோட்டைக்குப்பம் போன்ற பாண்டிச்சேரி பகுதிகளிலும் வழக்கில் உள்ளது. இலங்கையில் வடக்கு, கிழக்கு மாகாண முஸ்லிம்களிடம் இவ்வழக்கம் பரவலாக உள்ளது.

பெண்ணுக்கு வீடு கொடுக்கும் வழக்கம் ஓர் அர்த்தத்தில் பெண்ணின் சொத்துரிமையை நிறைவேற்றும் வாய்ப்பாக அமைகிறது. வசதி படைத்த குடும்பங்களில் இவ்வழக்கத்தால்

எவ்விதப் பிரச்சினையும் இல்லை. ஆனால், வசதியற்ற ஏழைக் குடும்பங்களில் பெண்ணுக்கு வீடு கொடுக்கும் வழக்கம் பெண்ணுக்கு எதிரான சிக்கல்களை உருவாக்குகிறது. பெண்ணுக்கு வீடு கொடுக்க வேண்டும் என்ற மாப்பிள்ளை வீட்டாரின் நிர்பந்தத்தால், பெண்ணின் உரிமை சார்ந்த இவ்வழக்கம் வரதட்சிணைக்கு முக்கியக் காரணமாக அமைந்து விடுகிறது. இலங்கைத் தமிழ் முஸ்லிம்களின் வாழ்வைச் சித்திரிக்கும் காட்டில் எரிந்த நிலா, அவளுக்கும் ஓர் இதயம், மூன்றாம் பிறை நாவல்களில் இப்பிரச்சினை பேசப்பட்டுள்ளது. 'இருப்பது ஒரு வீடு... அதனை மூத்த மகளுக்குக் கொடுத்து விட்டால் மற்ற குமர்களோடு நாங்கள் எங்கே போவோம்?' (மூ.மு., ப.29) என்ற கேள்வி இப்பிரச்சினையின் ஆழத்தை உணர்த்துகிறது.

தமிழகத்தில் இவ்வழக்கம் உள்ள பகுதிகளிலும், ஏழைக் குடும்பங்கள் இப்பிரச்சினையைச் சந்திக்கின்றன. ஆனால் இப்பிரச்சினை தமிழகச் சூழல் நாவல்களில் சித்திரிக்கப்படவில்லை.

பெண்ணின் உணர்வுகளுக்கான மதிப்பு என்பது குடும்ப அமைப்பில் பெரும்பாலும் மறுதலிப்புக்குள்ளாகிறது. குடும்பத்தில் முடிவு எடுப்பவர்கள் மூத்தவர்களாக இருப்பதால் இளம் பெண்களின் ஆசைகள், வெளிப்படுத்தும் வாய்ப்பில்லாமலேயே அடங்கிப் போகின்றன. இதனால் விருப்பமில்லாத வாழ்க்கைக்குத் தள்ளப்பட்டு மன உளைச்சலுக்கு ஆளாகின்றனர் (ஒ.க.கி.க., அத்.8).

'நாம ஊமைப் பிராணி, நமக்கென்ன சுதந்திரமிருக்கு? ஒரு குஷ்டரோகியின் கையிலிருக்கும் தாலிக்குக் கழுத்தைக் கொடுக்கச் சொன்னா நீட்டிக் கொடுத்து.... ஜென்மங்களைப் பாழ்படுத்த விதிக்கப்பட்ட அனுசரணையுள்ள மிருகம்' (ஒ.க.கி.க., ப.88) என்ற பெண்ணின் சோகம், உணர்வுகள் காயப்பட்ட பெண் உள்ளத்தின் வெளிப்பாட்டைக் காட்டுகிறது.

திருமணம் தொடர்பாக இஸ்லாம் பெண்ணுக்கு வழங்கியுள்ள உரிமைகளுள் ஒன்று திருமணத்திற்குப் பெண் மனப்பூர்வமாகச் சம்மதித்தல் ஆகும். ஆனால் இந்நியதிக்கு நடைமுறையில் அதிக முக்கியத்துவம் கொடுப்பதில்லை. பெண்ணுக்கு நாம் நல்லதுதானே செய்கிறோம், நாம் கிழித்த கோட்டை மகள் மீறவா போகிறாள் என்ற எண்ணத்தில் பெண்ணிடம் திருமண சம்மதத்தைக் கேட்கப் பெற்றோர் தவறி விடுகின்றனர். திருமணத்திற்கு ஆணின் சம்மதம் பெறுவதில் நூறுசதவிகிதம் அக்கறை செலுத்தும் குடும்பத்தார், பெண்ணின் சம்மதத்திற்கு அதிக அளவு முக்கியத்துவம் தருவதில்லை.

பெண்ணின் உணர்வுகளுக்கு மதிப்பளிக்காமல், அவளது சம்மதம் பெறாமல் திருமண நிச்சயங்களைப் பெற்றோர் செய்வதைப் படைப்பாளிகள் விமர்சனப் படுத்தியுள்ளனர். 'புள்ளட சம்மதம் அறிஞ்சிதான் இந்தக் கல்யாணம் பேசினீங்களா மாமா?' என்ற கேள்விக்கு, 'அதுக்கு என்ன தெரியும்? நாம செய்யறதக் காலா காலத்தில் செய்திடனுமில்ல..' (க.பூ.,ப.25) என்ற தகப்பனாரின் பதில் பெரும்பான்மையான பெற்றோரின் சார்பான பதிலாகும்.

'திருமணத்திற்கு முன்னர் மணப்பெண்ணின் சம்மதத்தைக் கேளுங்கள் எனும் நபி (ஸல்) அவர்களின் மொழியையும் அவர் அறியாதவரல்ல, ஆனாலும் எங்க விருப்பத்துக்கு மாறா என்ன சொல்லிடப் போறா' (ஷா.இ.ரா., ப.6) என்று பெண்ணின் சம்மதம் பெறாமல் தந்தை எடுத்த முடிவால் மகளின் எதிர்பார்ப்புகள் விருப்பங்கள் அனைத்தும் மறுக்கப்படுகின்றன. பெற்றோரின் நிர்பந்தத்திற்கு உடன்பட்டதால் அவளால் தன் அபிலாசைகளைச் சாகடித்துக் கொண்டு கணவனோடு வாழ முடியாத மனநிலைப் போராட்டத்திற்குத் தள்ளப்படுகிறாள். திருமணத்திற்குப் பெண்ணின் உளமார்ந்த சம்மதம் பெறுவதை இஸ்லாம் சட்டமாக்கி உள்ளது. ஆனால் நடைமுறையில் அச்சட்டத்திற்கு மதிப்பளிக்காததால் ஏற்பட்ட விளைவை ஷாமிலாவின் இதய ராகம் நாவல் சித்திரித்துள்ளது.

முதலாளித்துவப் பெருமையும், அந்தஸ்தும் மட்டுமே பார்க்கும் பெரிய இடங்களில், முந்தைய காலங்களில் திருமண நிச்சயங்களில் பணம், பெருமை மட்டுமே தகுதிகளாகப் பார்க்கப்பட்டன. பெண்ணிடம் திருமணச் சம்மதமோ அவளது உணர்வுகளுக்கு மதிப்போ வழங்கப்படவில்லை. முதலாளித்துவப் பெருமைக்காக விரும்பாத வாழ்க்கையில் தள்ளப்பட்ட ஒரு கடலோர கிராமத்தின் கதை நூஹ் பாத்திமா, ஆயிஷா பாத்திரங்கள் இதற்கு உதாரணங்களாகும்.

என்றாலும் திருமணத்திற்குப் பெண்ணிடம் திருமணச் சம்மதம் பெற வேண்டும் என்ற விழிப்புணர்வு சமுதாயத்தில் ஏற்பட்டுள்ளதையும் நாவல்களில் காணலாம்.

'பெண்ணின் விருப்பமின்றி ஆண்களுக்கு' அவர்களை மணஞ் செய்ய முடியாது (அ.ஒ., ப.6); 'என்ன மாமா இது? புருஷன வச்சி நடத்தப் போறவ அவதானே, நாளைக்கு நாலு பிள்ளையும் ஆயிட்டா அவ ஒரு குடும்பத் தலைவி. அவக்கிட்ட ஒரு சின்ன சம்மதமாவது கேட்காத நீங்களே முடிவுகட்டிட்டா இது சரியா?'

(கூ.பூ., ப.25) என்று ஒரு பெண்ணே குரல் கொடுப்பதும் ஆறுதல் தருவனவாகும்.

தனது வாழ்க்கையை முடிவு செய்யும் உரிமையைப் பெண்ணின் திருமண சம்மதம் பெறல் என்ற சட்டம் மூலம் இஸ்லாம் பெண்ணுக்கு வழங்கியுள்ளது. ஆனால் நடைமுறையில் இந்தச் சட்டத்தைத் திருமண ஒப்பந்தத்தின் போது ஒரு சம்பிரதாயமாகவே வைத்துள்ளனர். இந்நிலையில் திருமண நிச்சயத்துக்கு முன்பே பெண்ணுக்கான உரிமையைச் செயல்படுத்த வேண்டும் என்ற குரலைப் படைப்பாளிகள் சிறப்பாகவே முன் வைத்துள்ளனர். இது பெண்ணின் உணர்வுகளுக்கு அளிக்க வேண்டிய மதிப்பினையும் முன் வைக்கிறது.

திருமணம் முடிந்த கையோடு வெளிநாடு சென்று பல ஆண்டுகள் பிரிவை ஏற்படுத்திப் பெண்ணின் அபிலாஷைகளைச் சாகடிக்கும் கணவன்மாரைப் பசுமைப்பூக்கள் நாவல் (ப.57) விமர்சிக்கிறது..

கணவன் மனைவியை வாழ்வியல் நிமித்தமாகப் பிரிதல் என்பது இன்று சகஜமாகியுள்ளது. பொருளாதாரத் தேடலுக்காக வளைகுடா மற்றும் வெளி நாடுகளுக்குச் செல்வோர் வருடக்கணக்கில் குடும்பத்தைப் பிரிந்து வாழ்கின்றனர். இத்தகைய நீட்டித்தப் பிரிவின் காரணமாகப் பாலியல் உணர்வுகளைக் கட்டுப்படுத்த முடியாமல் கணவனோ மனைவியோ தவறிழைக்கும் சூழல் கூட உருவாகிவிடுகிறது. இவ்வாறு நிகழும் தவறுகளுக்கு யார் காரணம் என்று குற்றம் சுமத்தாமல் மார்க்க அறிவுரைப்படி நடக்காததே காரணம் என்பதை நாவலாசிரியர் ஜெக்கிய ஜுனைதீன் ஷாமிலாவின் இதய ராகம் நாவலில் முன்வைக்கிறார்.

கணவனுக்கு வெளிநாட்டில் வேலை நீண்ட பிரிவு ஏற்படுத்திய பாலியல் உணர்வால் மனைவி தவறிழைத்து விடுகிறாள். ஊர் திரும்பிய கணவன் மனைவியின் தவறான நடவடிக்கையைக் கேள்விப்பட்டு முதலில் கொதித்துப் போகிறான். வெள்ளிக்கிழமை ஜும்மாவில் 'கோவத்த அடக்குறவன்தான் உண்மையான முஸ்லிம்'. 'ஒரு பெண்ணை அவள் கணவன் நாற்பது நாளுக்கு மேல் பிரிஞ்சு இருக்கக்கூடாது என்று நபி (ஸல்) அவங்க சொல்லியிருக்காங்க...' என்ற மார்க்க அறிஞரின் உபதேசத்தைக் கேட்டவுடன் மனம் மாறுகிறான். மார்க்க அறிவுரைப்படி, தான் நடக்காததே தனது மனைவி தவறிழைத்ததற்குக் காரணம் என்பதை உணர்ந்து மனைவியை மன்னித்து ஏற்றுக் கொள்கிறான் (ஷா.இரா.,பக்.130-131)

என்று முடிவை நாவலாசிரியர் ஜெக்கிய ஜுனைதீன் தந்துள்ளார். கணவன் மனைவி இருவரிடையேயுள்ள பிரிவு நீட்டித்தப் பிரிவாக இருக்கக்கூடாது என்ற மார்க்க அறிவுறுத்தலின் மூலம், ஆண்-பெண் சார்ந்த பாலியல், உளவியல் சிக்கல்கள் நிகழாவண்ணம் தடுக்கும் அறிவுறுத்தலைப் படைப்பாளி தந்துள்ளார்.

வெளிநாடுகளில் வேலை செய்யும் ஆடவரின் வருகையை எதிர்பார்த்து அவர்களது மனைவியர் காத்திருப்பது என்பது இன்றும் உள்ள நிலைமைதான். என்றாலும் இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறையேனும் குறைந்த பட்சம் வருவர் என்ற உறுதி இன்றுண்டு. ஆனால், முந்தைய காலங்களில் மலேசியா, சிங்கப்பூர், பர்மா போன்ற நாடுகளில் பொருள் ஈட்டச் சென்றவர்களுள் பலர் இத்தகைய உறுதியை ஏற்படுத்தவில்லை. பல ஆண்டுகளுக்கு ஒரு முறை வருபவர்களும் உண்டு. பலர் அங்கும் ஒரு திருமணத்தைச் செய்து கொண்டு மனைவி மக்களுடன் வாழ ஆரம்பித்து விட்டதால் ஊரையும் மனைவி மக்களையும் மறந்து விட்டதுண்டு. தகப்பனின் முகம் காணாத பிள்ளைகள், தன் அத்தனை அபிலாசைகளையும் அடக்கிக் கொண்டு வாழ்ந்த மனைவியர் பலர் உண்டு. இச்சூழலில் கணவன் ஒரு ஸபர் வந்து போக மாட்டாரா என்ற அவர்களது ஏக்கம் கடிதங்களில் எதிரொலிக்கும். 'ஒரு ஸபர் வந்து போதல்' என்பது பல குடும்பங்களில் எதிர்ப்பார்ப்போடு பயன்படுத்தப்பட்ட வாக்காக இருந்தது. இராமநாதபுரம் வட்டார முஸ்லிம்களிடம் உள்ள இவ்வழக்கின் பின்னணியிலான சோகங்களைப் புயலில் ஒரு பூ (ப.36) நாவல் கனமாகக் கவனப்படுத்தியுள்ளது. தன்னை நம்பி வாழும் பெண்களையும் பிள்ளைகளையும் இப்படித் தவிக்க விடும் ஆண்களின் செயலை 'அயோக்கியத்தனம்' என்று நாவலாசிரியர் ஹிமானா சையத் விமர்சனம் செய்துள்ளார். இன்று வளைகுடா நாடுகளில் அதிகமான தமிழ் முஸ்லிம்கள் வேலை செய்கின்றனர். என்றாலும் இப்பிரச்சினை மிகக் குறைவு. முன்பு இதுவே பெரும் பிரச்சினையாக முஸ்லிம் தாய்மார்களுக்கு இருந்தது என்ற சித்திரிப்பே அக்காலப் பெண்களின் உணர்வுகள் முடக்கப்பட்ட வாழ்வைக் கணித்திட உதவுகிறது. இவ்வழக்கு காரைக்கால், நாகபட்டினம், தஞ்சாவூர், பட்டுக்கோட்டை, காயல்பட்டினம், தக்கலை போன்ற வட்டாரங்களிலும் இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

இச்சித்திரிப்பு வாயிலாகச் சமூகத்திற்குச் சில நடைமுறை உண்மைகளை நாவலாசிரியர் சுட்டிக் காட்டுகிறார். இன்று தமிழகம் இலங்கையைச் சார்ந்த முஸ்லிம்கள் பலரின் பொருளாதார ஆதாரம் வளைகுடா நாடுகளையே நம்பியே உள்ளது. இச்சூழலில் கணவன்-மனைவி பிரிவு என்பது தவிர்க்க முடியாத யதார்த்தமான ஒன்றாக

அமைந்து விடுகிறது. திருமணம் முடிந்த சில மாதங்களில் ஏன் சில நாட்களில் ஏற்படும் பிரிவுகளும் அதிகம் நிகழ்கின்றன. வாழ்க்கை நிர்பந்தங்களின் காரணமாக நிகழும் இப்பிரிவுகளால் இளம் உள்ளங்களின் உணர்வுகள் பாதிக்கப்படுவதோடு, சில தவறுகளும் நிகழ வாய்ப்புள்ளது. எனவே, வெளிநாடுகளில் வேலை செய்யும் ஆடவனுக்குப் பெண் கொடுப்பவர்கள் திருமணம் முடிந்த பின் பெண்ணையும் வெளிநாட்டுக்கு உடன் அழைத்துச் செல்ல வேண்டும். அல்லது அடிக்கடி வந்து செல்லும் தகுதி படைத்தவன் தானா என்பதை ஆராய்ந்து பெண் கொடுக்க வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக ஒழுக்கம் பேணலில் இறையச்சத்துடன் நடந்து கொள்ளும் உணர்வு ஊட்டப்பட வேண்டும் என்ற கருத்துகள் நாவல் பாத்திரங்களின் வழி உணர்த்தப்பட்டுள்ளன.

இவ்வாறு குடும்ப அமைப்பில் பெண்ணுக்கு எதிரான ஆதிக்கப் போக்குகள் அதிகமாக நிகழ்வதற்கு இஸ்லாமிய மார்க்கம் வலியுறுத்தியுள்ள பெண்ணுரிமை, பெண்ணின் உணர்வுகளுக்கு மதிப்பளித்தல் போன்ற வாழ்வியல் நெறிகள் மிகச்சரியாகப் பின்பற்றப்படாதது முக்கியக் காரணமாகிறது என்பதைக் கதை நிகழ்வுகளில் படைப்பாளிகள் உணர்த்திச் செல்கின்றனர்.

### சமுதாய அமைப்பில் பெண் பாதிக்கப்படல்

சமுதாய அமைப்பில் பெண்ணுக்கான சுதந்திரமும் பாதுகாப்பும் இன்றுவரை உறுதிப்படுத்தப்படவில்லை. ஆணாதிக்கச் சூழல் நிறைந்த சமுதாய அமைப்பில் பெண் இயங்கும்போது அவள் பல நிர்பந்தங்களுக்கும், பாலியல் வன்முறைகளுக்கும் ஆளாகிறாள். இஸ்லாமியப் பெண்கள் சமுதாயத்திற்கு வரல் குறைவு என்பதால் இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்களில் இப்பிரச்சினைகளும் மிகக் குறைவாகவே பதிவு செய்யப்பட்டுள்ளன. சமுதாய அமைப்பில் ஆதிக்கப் போக்குகளால் பெண் சந்திக்கும் இத்தகு பிரச்சினைகளைக் கீழ்க்கண்டவாறு ஆராயலாம்.

1. சமூக நிர்பந்தங்கள் பெண்ணைப் பாதித்தல்
2. பெண்ணுக்கு எதிரான வக்கிரங்களால் விளையும் பாதிப்புகள்

சமுதாய அமைப்பிலுள்ள சில கட்டுப்பாடுகள் பெண்ணைப் பாதிப்பனவாக உள்ளன. முதலாளியின் அதிகாரப் போக்கிற்கு மஹ்மூது கட்டுப்படாததால் தனது ஊர்த்தலைமை அதிகாரத்தை மஹ்மூதிற்கு எதிராக முதலாளி பயன்படுத்த நினைக்கிறார். 'மஹ்மூதிற்கு மகள் உண்டு. அவன் தன்னை

எதிர்த்தால் ஊர்த்தண்டனையாகப் பள்ளிவாசல் தூணில் கட்டி வைத்து அடித்தால் அவன் மகளுக்கு மாப்பிள்ளை கிடைக்காது' (ஒ.க.கி.க., ப.129) என்று தனக்குப் பிடிக்காத ஒருவனைப் பழிவாங்க அவனது மகளின் வாழ்க்கையைச் சிக்கலுக்கு உள்ளாக்கும் அதிகாரத்தனத்தைக் காணலாம்.

ஒரு தனிமனிதன் மற்றொருவனை எதிர்த்தால் அதனைத் தனிமனிதர்களுக்கிடையிலான பிரச்சினையாகத் தான் பார்க்க வேண்டும். ஆனால் முதலாளித்துவத் தலைமைத்துவ அதிகாரத்தால் அது சமுதாயப் பிரச்சினை ஆக்கப்படுகிறது. அதில் பாதிப்புக்கு உள்ளாவது ஏழை மட்டுமல்ல அவனது மகளும் ஆவாள். மகளின் வாழ்க்கையை முன்னிறுத்தித் தந்தைக்கான அச்சுறுத்தல் விடப்படுகிறது. குடும்பத்தில் ஒருவர் ஊர் நிர்வாகத்திற்கு எதிராக நடந்து கொண்டால், அக் குடும்பத்திலுள்ள பெண்ணின் திருமணத்தில் ஊர் நிர்வாகம் கலந்து கொள்ளாது. திருமணப் பதிவேட்டில் திருமணம் பதிவு செய்யப்படமாட்டாது. திருமணத்தை நடத்திக் கொடுக்கக் கத்தீபு (மார்க்க அறிஞர்) அனுப்பப்படமாட்டார் என்பது போன்ற தடைகளை ஊர் நிர்வாகம் விதிப்பதை ஒரு கடலோர கிராமத்தின் கதை, துறைமுகம், மூன்றாம்பிறை நாவல்கள் சித்திரித்துள்ளன. தான் சம்பந்தப்படாமலேயே சமூக ஆதிக்கங்களால் பெண் பாதிக்கப்படுவதை இதனால் அறியலாம்.

பாலியல் வக்கிரங்களால் பெண் பல பாதிப்புகளைச் சமுதாய அமைப்பில் எதிர் கொள்கிறாள். பெண்ணைப் பாலியல் வக்கிர உணர்வுகளோடு அணுகும் ஆண்களின் நடவடிக்கை மேற்கல்விக்குப் பெண் அனுப்பப்படாமைக்குக் காரணமாகப் பேசப்படுகிறது. ஒரு தலைமை ஆசிரியரே தன் மகளை இத்தகு காரணத்திற்காக மேல்படிப்புக்கு அனுப்புவதைக் தவிர்க்கிறார். 'தாய்க்குலத்தையே தாசிக்குலமாக எண்ணி, தெருவில் வரும்போகும் பெண்களை வயது வித்தியாசம் பார்க்காமல் கேலி செய்யும் ஆண்களிடமிருந்து தப்பிக் கொள்ள எண்ணிய ஷாமிலா தன் படிப்பைக் கைவிடுகிறாள்' (ஷா.இ.ரா., ப.2)

விவசாயக் கூலிகளாக வேலை செய்யும் பெண்கள் நில முதலாளிகள், மேற்பார்வையாளர்களின் காமப் பார்வைக்கும் பாலியல் வன்முறைக்கும் ஆளாவதையும் காணலாம். குடும்பத்தின் வறுமை காரணமாகக் களைபிடுங்கும் வேலைக்கு வயல்வெளிக்கு விவசாயக் கூலியாகச் செல்லும் ஆமினா வயற்கார இளைஞனின் பாலியல் பலாத்காரத்தில் இருந்துதப்பித்து வருகிறாள் (கா.எ.நி.,

பக்.58-59). இது போன்று பெண்ணுக்கு இழைக்கப்படும் பாலியல் கொடுமைகள் மிகக் குறைவாகச் சித்திரிக்கப்படுவது ஆறுதல் தரும் விசயமாகும்.

இலங்கை முஸ்லிம் சமுதாயத்தில் விவசாயக் கூலிகளாகப் பெண்கள் உழைக்கின்றனர் என்பது தமிழக முஸ்லிம்களுக்குப் புதிய தகவல் ஆகும். தமிழகத்தில் வீடுகளில் அமர்ந்து வேலை செய்யும் பீடிசுற்றல், பாய்முடைதல் போன்ற தொழில்களில்தான் முஸ்லிம் பெண்கள் ஈடுபடுகின்றனர். விவசாயக் கூலிகளாக வேலை செய்வதில்லை. கால் நூற்றாண்டுக்கு முன்பு குமரி மாவட்டத்தின் மாதவலாயம், திட்டுவிளை பகுதிகளிலும், தஞ்சாவூர் மாவட்டத்தின் கிராமப் பகுதிகளிலும் முஸ்லிம் பெண்கள் விவசாயக் கூலிகளாக இருந்ததை அறிய முடிகிறது. இன்று அந்நிலை இல்லை. ஆனால் இலங்கையில் முஸ்லிம் பெண்கள் இன்றும் விவசாயக் கூலிகளாக உள்ளனர் என்பது அவர்களது வாழ்க்கைத் தரத்தை அளவீடு செய்ய உதவுகிறது.

## ஆதிக்கப் போக்குகளுக்கு எதிரான வளர்ச்சிகள்

குடும்ப-சமுதாய அமைப்புகளில் ஆதிக்கப் போக்குகளால் பெண்ணுக்கு ஏற்படும் பாதிப்புகளுக்கு எதிரான வளர்ச்சி நிலைகளையும் இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்கள் சுட்டிக்காட்டுகின்றன. பெண்கள் பெற்றுவரும் கல்வி வளர்ச்சியினால் ஏற்பட்ட முன்னேற்றங்களும், பெண்ணுரிமை பேணுதலில் ஆண்களிடம் ஏற்பட்டுள்ள விழிப்புணர்வுகளும் இந்த வளர்ச்சி நிலைகளுக்கு முக்கியக் காரணங்கள் எனலாம். அதனைப் பின்ருமாறு ஆராயலாம்.

1. தன் ஆளுமையின் மூலம் பெண் சம்பாதித்தல்
2. பெண்ணின் முன்னேற்றத்திற்காக ஆண்களிடம் ஏற்பட்டுள்ள விழிப்புணர்வு

பெண்கள் தங்கள் ஆளுமையின் மூலம் சாதித்துத் தங்களுக்கென்று வளர்த்துக்கொண்ட குடும்பசம்பாதித்த மதிப்பு அவர்களுக்கு எதிரான ஆதிக்கப் போக்குகள் குறைய முக்கியக் காரணமாக உள்ளது.

கணவன் கைவிட்டுப் போனாலும் தான் சம்பாதித்துக் குடும்பத்தைத் தூக்கி நிறுத்தும் பெண்ணைப் புயலில் ஒரு பூ நாவலும் பதினெட்டு கால்களும் கைகளும் எதற்காக ஓய்ந்து கிடக்கனும்? ஏன் எங்க குடும்பம் சும்மா இருந்து பசியுடன் காலம் கடத்தனும்?' என்ற கேள்வியோடு தன் குடும்பத்தினர்

அனைவரையும் உழைக்கச் செய்து அதற்குத் தலைமை தாங்கிச் சாதிக்கும் பெண்ணை அவளுக்கும் ஓர் இதயம் நாவலும், ஏழைப் பெண்களுக்காகப் பல எதிர்ப்புகளுக்கு இடையே நெசவுக் கூடத்தை நடத்திச் சாதிக்கும் விதவைப் பெண்ணைச் சரித்தரம் தொடர்கிறது நாவலும், பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியையாக இருந்து நிர்வாகத்தில் சாதிக்கும் பெண்ணைப் பனிமலர் நாவலும் சித்திரித்துள்ளன. பெண்களின் இத்தகைய சாதிப்புகள் பெண்ணுக்கான சமூக அங்கீகாரத்தைப் பெற்றுத் தருவதோடு, பெண் பற்றிய குறைந்த மதிப்பீட்டையும் மாற்றி ஆணுக்கு நிகரான வளர்ச்சி நோக்கிப் பெண்ணை அழைத்துச் செல்கின்றன.

"பெண்ணுக்கு எதிரான சூழலை மாற்ற பெண்களும் ஆண்களும் சேர்ந்து எடுக்கும் உணர்வுப் பூர்வமான செயல்பாடுகளே பெண்ணியம்" என்பது கமலா பாசின் (Kamala Bhasin ), நிகாத் செய்யது கான் (Nighat Said Khan) போன்ற பெண்ணியவாதிகளின் கருத்து. எனவே, பெண்ணுக்கான விடியல் என்பது பெண்கள் மட்டும் போராடிப் பெறுவதல்ல, ஆண்களும் பெண்களும் இணைந்து போராடிப் பெற வேண்டிய சமுதாய விடியல் ஆகும். நாவல்கள் சித்திரிக்கும் சமூகத்தில் பெண் தனக்கெதிரான ஆதிக்கப் போக்குகளைத் தாண்டி முன்னேறி வருவதற்கு ஆண்களின் விழிப்புணர்வும் பணியும் முக்கியக் காரணங்களாக அமைந்துள்ளன.

'பெண்கள் வைரக்கற்கள், பட்டை தீட்டப்பட்டால் அவர்களின் திறமை பளீரெனப் பிரகாசிக்கும்' என்று பேசும் டாக்டர் கஸ்ஸாலி, கல்விச் சேவைக்குழு மூலம் பெண் கல்விக்காகப் பாடுபடுகிறார் (ச.தொ., ப.54); 'பெண் கல்வியில் நாம் மிகப் பின்தங்கி இருக்கிறோம். நீங்கள் உங்களால் ஆன மட்டும் பாடுபடுங்கள். உங்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்ய நாம் காத்திருக்கின்றோம்' என்று பெண் கல்விக்காகப் பாடுபடும் தலைமை ஆசிரியைக்குப் படித்த பதவி வகிக்கும் இளைஞர் ரஹீம் ஊக்கம் தருகிறார் (ப.ம., ப.30); ஏழைப் பெண்களுக்காக நெசவுக்கூடம் நடத்தும் விதவை கதிஜாவை 'நீங்கள் திறமையாக நிர்வாகம் செய்கிறீர்கள்' என்று பாராட்டும் வங்கி மேலாளர் அலி சப்ரி அவளது பணிகள் அனைத்துக்கும் ஆதரவு தருகிறார் (ச.தொ).

இவ்வாறு பெண்களின் முன்னேற்றத்திற்கான வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுத்தும், சாதிக்கும் பெண்களுக்கு ஆதரவளித்தும் சமுதாய அமைப்பில் பெண்களின் உயர்வில் ஆண்கள் பங்கேற்கின்றனர். இத்தகைய ஆண்களின் பங்கேற்பு சமுதாயத்தில் பெண்களின் முன்னேற்றத்திற்நலிந்தவர் 19கான முக்கிய உந்து சக்தியாக அமைவதை நாவல்கள் வெளிப்படுத்தியுள்ளன.

# வாழ்வியல் நம்பிக்கைகள்

உண்மை பற்றிய அறிதலுக்கு அதிகம் இடம் கொடுக்காமல் உணர்வு அடிப்படையில் மக்கள் ஏற்றுக் கொண்ட மரபு வழிப்பட்ட வழக்கங்களை நம்பிக்கைகள் எனலாம். நம்பிக்கைகளை ஒரு குறிப்பிட்ட சமயம் சமுதாயம் தீர்மானித்திருக்கும் நம்பிக்கைகள், வட்டாரச் சூழல் சார்ந்து வாழ்வின் அனைத்து நிலைகளிலும் மக்கள் கொண்டுள்ள நம்பிக்கைகள் எனப் பகுக்கலாம்.

சமயம் சார்ந்த நம்பிக்கைகள் கேள்விக்கும் விமர்சனத்திற்கும் அப்பாற்பட்டதாகக் கருதப்படுகின்றன. இந்நம்பிக்கைகளைப் பற்றிக் கேள்வி எழுப்பினாலோ, விமர்சித்தாலோ அது சமய-சமுதாயக் கோட்பாட்டிற்கு எதிரானதாக அமைந்து விடும். சமய நம்பிக்கைகளுள் பல வாழ்வியல் நோக்கங்களை நிறைவு செய்வனவாகக் கருதப்படுகின்றன. எனவே, இவை பக்தி சார்ந்த மதிப்புப் பெற்றனவாகும். வட்டாரச் சூழல் சார்ந்த நம்பிக்கைகளும் வாழ்க்கை நன்றாக அமைய வேண்டும் என்ற எதிர்நோக்கலையே அடிப்படையாகக் கொண்டிருக்கும். இவற்றுள் பல பகுத்தறிவுக்கு ஒவ்வாதனவாகவே இருக்கும் என்றாலும் காலம்காலமாக அந்நம்பிக்கைகள் மீது ஏற்றப்பட்ட மதிப்பு என்பது அச்சம் சார்ந்த அணுகலையே அவற்றின்பால் ஏற்படுத்தியுள்ளது. இந்நம்பிக்கைகளுள் பல குறிப்பிட்ட வட்டாரத்தில் வாழும் பல சமுதாயத்தவர்களின் பொது நம்பிக்கைகளாகவும் இருக்கும்.

இஸ்லாமியச் சமயம் 'மார்க்கம்' (வழிமுறை) என்றே அழைக்கப்படுகிறது. நன்மையைப் பேணித் தீமையை விலக்கி வாழ்வதை அனைத்து நிலைகளிலும் வாழ்வியலாக இஸ்லாம் வலியுறுத்துகிறது. வாழ்வியலுக்கான நேரிய சட்ட திட்டங்களையும் நெறிமுறைகளையும் வகுத்தும் தந்துள்ளது. என்றாலும் இஸ்லாமியர்கள் பல வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் சமயச் சார்பில் உருவாக்கிவிட்டனர். அவ்வழக்கங்களும் நம்பிக்கைகளும் சமய அங்கமாகவே மக்களால் அனுசரிக்கப்பட்டதையும், அவற்றை விலக்கி அசல் இஸ்லாமிய வாழ்வை வாழ வேண்டும் என்ற

விழிப்புணர்வு சமுதாயத்தில் ஏற்பட்டதையும் நாவல்களின் வெளிப்பாடுகளால் அறியலாம். வெளி உலகம் அறியாத பல வழக்கங்களும், நம்பிக்கைகளும் மட்டுமல்லாமல் பிற தமிழ் முஸ்லிம் மக்களே அறியாத சில வட்டாரம் சார்ந்த நம்பிக்கைகளும் முஸ்லிம்களிடம் உள்ளன. இத்தகு நம்பிக்கைகளைச் சமயம் சார்ந்த - சாராத நம்பிக்கைகள் எனப்பகுத்துப் பின்வருமாறு ஆராயலாம்.

1. சமயச் சார்பில் உருவான வழக்கங்களும் நம்பிக்கைகளும்
2. சமயச் சார்பு ஏற்றப்பட்ட நம்பிக்கைகள்
3. இறை ஆற்றல் பற்றிய புரிதலின்மையால் உருவான நம்பிக்கைகள்
4. நன்மை-தீமை விளைவு பற்றிய நம்பிக்கைகள்
5. நம்பிக்கைகளை மறுதலிக்கும் நவீனப் போக்குகள்

**சமயச் சார்பில் உருவான வழக்கங்களும், நம்பிக்கைகளும்**

சமயக்கடமைகள் - நெறிகளை நடைமுறையில் பேணும்போது, அவற்றுடன் தாங்களாகவே உருவாக்கிக் கொண்ட அல்லது சமயம் என்று தவறாக விளங்கி கொண்ட பல வழக்கங்களும் நம்பிக்கைகளும் தமிழ் முஸ்லிம்களின் வாழ்வில் மிக இயல்பாகப் பிரதிபலித்துள்ளன. நோன்புக் காலங்களில் திருமணங்கள், ஆண் குழந்தைகளுக்குச் செய்யும் கத்னா (விருத்த சேதனம்) போன்ற விஷேசங்களைத் தவிர்க்கும் வழக்கம் உள்ளது.

பிரயாணிகள், நோயாளிகள் மாதவிடாய் ஏற்பட்டுள்ள பெண்கள், கர்ப்பிணிகள், பாலூட்டும் அன்னையர், முதியவர்கள் ஆகியோரைத் தவிர்த்துப் பால்யப் பருவம் கடந்த உடல் ஆரோக்கியம் உள்ள அனைவரும் நோன்பு நோற்க வேண்டும். நோற்காவிட்டால் மிகப்பெரிய பாவமாகும். நோன்புக் காலத்தில் நோன்பு வைத்துக் கொண்டு பகற்பொழுதில் உடலுறவு கொள்வது கூடாது. அப்படிக் கொண்டால் அதற்குப் பரிகாரமாக ஓர் அடிமையை விலைக்கு வாங்கி விடுதலை செய்ய வேண்டும் அல்லது இரண்டு மாதங்கள் தொடர்ந்து நோன்பிருக்க வேண்டும் அல்லது 60 ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். நோன்புக் காலங்களில் பகற்பொழுதில் புதுமணத் தம்பதிகள் ஒன்றாகச் சேர்ந்திருக்கும் வாய்ப்பு அதிகம். அவ்வாய்ப்பு அவர்கள் நோற்றிருக்கும் நோன்பை முறிப்பதற்கான சூழலை ஏற்படுத்தி விடலாம். மேலும் நோன்புக் காலங்களில் இரவு நேரங்களில் உடலுறவு கொண்டால் அதிகாலை (ஸஹர் நோன்பைத் துவக்கும் நேரம்) நேரத்திற்குள் குளித்துச் சுத்தமாகிவிட வேண்டும். இவை எல்லாம் புதுமணத் தம்பதிகளுக்குச்

சிரமமான ஒன்றாகும். எனவேதான் நோன்புக காலங்களில் திருமணம் செய்ய மார்க்கத்தில் அனுமதி இருந்தும் வழக்கத்தில் முஸ்லிம்கள் தவிர்த்து வருகின்றனர். இதனைக் கண்மணி வஹீதா கவலை வேண்டாம், சாணைக்கூறை நாவல்களின் சித்திரிப்பால் அறியலாம்.

இன்றும் தமிழகம், இலங்கையில் நோன்புக் காலங்களில் திருமணம் நடத்துவதைப் பெரும்பாலும் தவிர்க்கின்றனர். ஆனால் வளைகுடா நாடுகளில் வேலை செய்யும் இளைஞர்கள் குறைந்த நாள் விடுப்பில், அதுவும் நோன்புக் காலங்களில் ஊர் வந்தால் அவர்கள் திருமணம் முடிக்கும் நோக்கத்தில் இருந்தால், அடுத்து ஊர் வருவதற்குக் காலதாமதம் ஆகும் என்பதால் கன்னியாகுமரி மாவட்டம் போன்ற சில இடங்களில் நோன்புக் காலத்திலும் திருமணங்கள் நடைபெற்று வருகின்றன.

இஸ்லாத்தில் ஆணுக்குக் கடமையாக்கப்பட்டுள்ள விருத்த சேதனம் செய்யும் வழக்கத்தையும் முஸ்லிம்கள் நோன்புக் காலத்தில் தவிர்க்கின்றனர் (சா.கூ., ப70) குழந்தையாகவோ, சிறுவனாகவோ இருக்கும் போதுதான் ஓர் ஆணுக்கு இவ்வழக்கம் நிறைவேற்றப்படுகிறது. குழந்தைகள் சிறார்க்கு நோன்புக் கடமையில்லை. என்றாலும் இவ்வழக்கத்தைத் தமிழகத்திலும் இலங்கையிலும் பெரும்பாலும் தவிர்த்து வருகின்றனர். இஃது நோன்புக் காலங்களில் வேறு எந்த விசேஷங்களுக்கும் இடம் கொடுக்கக்கூடாது என்ற அதிகப்படியான பக்தி மதிப்பினால் நிகழ்வது எனலாம். இஸ்லாம் இலகுவான மார்க்கம். மார்க்கக் கடமைகளை நிறைவேற்றுவதற்காக, இயல்பாக அனுமதிக்கப்பட்ட வாழ்வியல் நடைமுறைகளை விட்டுவிடவோ, ஒத்திபோடவோ சொல்லவில்லை என்றாலும் மார்க்கக் கடமைகளுக்கு மக்கள் அளித்து வரும் அதீத மதிப்பு என்பதே இத்தகு வழக்கங்களை நோன்புக் காலங்களில் தவிர்ப்பதற்குரிய காரணம் எனலாம்.

உடல் ஆரோக்கியமும் பொருளாதார சக்தியும் உள்ள இஸ்லாமியர் மீது ஹஜ் கடமையாக உள்ளது. முந்தைய காலங்களில் வயதான பின்னரே ஹஜ் செய்யும் வழக்கம் இருந்தது. வாழ்ந்து அனுபவித்த பின்னால் வயதான காலகட்டத்தில் பந்த பாசங்களை விட்டு விடுபட்ட பின்னரே புனிதயாத்திரை புறப்பட வேண்டும் என்று இஸ்லாம் விதிக்கவில்லை. ஆனால் முந்தைய காலங்களில் வயதான காலத்தில், குடும்பப் பொறுப்புகளை நிறைவேற்றிய பின்னர், சொத்துகளுக்கு உயில் எழுதிவிட்டு ஹஜ்ஜுக்குப் புறப்பட்டனர் இவ்வாறு உயில் எழுதுவதை ஹஜ்ஜுக்குப்

புறப்படும் போதுள்ள விசேஷங்களில் ஒன்றாகவே வைத்துள்ளனர். 'அந்த வீட்டில் (ஹஜ்ஜுக்குச் செல்பவர் வீட்டில்) ஜனத்திரள். நொத்தாரிசு (பத்திரப் பதிவாளர்) ஒருவர் வந்து சொத்துக்களுக்கு உயில் எழுதினார்' (சா.கூ.,ப.87) என்பதால் இதனை அறியலாம்.

தற்காலத்தில் வான் மார்க்கமாக ஹஜ்ஜுக்குச் செல்வதற்கான வசதிகள் அதிகரித்துள்ளன. முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் இத்தகைய வசதிகள் குறைவு. கப்பலில் பலநாள் பயணப்பட்டு சவூதி அரேபியாவில் உள்ள ஜித்தா துறைமுகத்தை அடைபவர்கள், அங்கிருந்து அக்கால வாகனங்கள், ஒட்டகங்களில் பயணித்தே மக்காவை அடைவர். வசதியற்றோர் கால்நடையாகச் செல்வர். பயணச் சிரமத்தின் காரணமாகப் பலர் உயிரிழப்பர். திரும்பிவருவோம் என்ற உத்திரவாதம் இல்லாததால் அக்காலத்தில், வயதான காலத்தில் பொறுப்புகளை முழுமையாக நிறைவேற்றி விட்டு ஹஜ்ஜுக்குச் சென்றனர் எனலாம். அதில் உருவானதே இந்த உயில் எழுதும் வழக்கம்.

நோன்புக் காலங்களில் சைத்தான்கள் விலங்கிடப் படுகின்றனர் என்பது இஸ்லாமியர் நம்பிக்கை. 'ரமழான் மாதம் வந்து விட்டால்..சைத்தான்கள் விலங்கிடப்படுகின்றனர்' என்று நபி (ஸல்) கூறியுள்ளார்கள். இந்த நம்பிக்கை மக்கள் மத்தியில் அறியாமையின் காரணமாகப் பேய்கள் விலங்கிடப்படுவதாக வழங்குகிறது. 'நோன்பு நாளையில பேய்களைப் பிடிச்சி அடைச்சி வச்சிடுவாங்களாம். நொண்டிப் பேய் மட்டுந்தான் நிக்குமாம். அது நல்ல பேயாம். ஒருத்தருக்கும் ஒண்ணும் செய்யாதாம்' (ச.கூ., ப.70) என்று சிறுவர்கள் பேசிக் கொள்கின்றனர். சைத்தான்கள் விலங்கிடப்படுவதை அறியாமையின் காரணமாகப் பேய்கள் என்று பேசுகின்றனர். சிறுவர்கள் உரையாடல் என்பதால் நொண்டிப் பேய் நல்ல பேயாகி விடுகிறது. ஹதீஸ் கருத்து சற்று மாறுபாட்டுடன் வழங்கினாலும், நோன்புக் காலங்களில் சைத்தான்களுக்கு விலங்கிடப்படும் என்ற மார்க்க நம்பிக்கை வாழும் சூழல் சார்ந்து பேய் சார்ந்த நம்பிக்கையோடு கட்டமைக்கப்பட்டுள்ளது.

திருக்குர்ஆனை ஓதுவதும், ஓதக் கேட்பதும் மிகச் சிறந்த நன்மை என்பது இஸ்லாமியர்களின் நம்பிக்கை என்றாலும், நோன்புக் காலங்களில் திருக்குர்ஆனை அதிகமாக ஓதும் வழக்கம் உள்ளது. பெண்கள் இதில் அதிக ஆர்வம் காட்டுகின்றனர். நோன்புக் காலங்களில் குர்ஆனைப் பலமுறை ஓதி முடிக்கின்றனர். ஆனால்,

நோன்பு 17-ல் குர்ஆனை ஓதி தமாம் (நிறைவு) செய்வதும், அதனை அயலாரை அழைத்து நோன்பு திறந்தபின் விருந்து வைத்து நடத்தும் வழக்கம் சில பகுதிகளில் மட்டும் உள்ளது (அ.ஓ., ப.66).

உயிர்பிரியும் தறுவாயில் இருப்பவர்களின் அருகமர்ந்து குர்ஆனை ஓதுதல் (ப.ம., ப.186) மூலம் மரணிப்பவருக்கு நற்பேறு கிட்டும் என்ற நம்பிக்கை உள்ளது. மரணித்தவர்கள் பேரில் குர்ஆனை ஓதிப் பூர்த்தி செய்யும் வழக்கம் தமிழ் முஸ்லிம்களிடம் பெருவழக்காக உள்ளது. ஒருவர் இறந்த தினத்திலிருந்து 40 நாட்கள் இவ்வழக்கம் நடைபெறும். '40 நாட்களில் எட்டுத்தடவை குர்ஆனை முழுமையாக ஓதி, தாயின் பெயரில் பூர்த்தி செய்திருந்தார்' (அ.ஓ.,ப.84). '40-ம் நாள் கத்தமுல் குர்ஆன் ஓதித் தமாம் (நிறைவு) செய்யப்பட்டது' (அ.உ., ப.76). இவ்வாறு குர்ஆனை இறந்தவரின் பேரில் பலமுறை முழுமையாக ஓதி நிறைவு செய்வதன் மூலம் மறையை ஓதிய நன்மைகள் முழுவதும் இறந்தவர்களுக்குப் போய்ச் சேர்கிறது. அந்நன்மைகள் அவருக்குச் சிறப்பான மண்ணறை-மறுமை வாழ்வுக்கு வழிவகுக்கும் என்ற நம்பிக்கை உள்ளது.

குர்ஆனின் சில அத்தியாயங்களை, வசனங்களை ஓதுவதால் குறிப்பிட்ட சில நன்மைகள் விளையும் என்ற நம்பிக்கையும் உள்ளது. 'அதிகாலையில் ..ஸுப்ஹு தொழுட்டு குல்ஹுவல்லாஹு அஹத், குர்அவூது பிரப்பில் ஃபலக், குல் அவூது பிரப்பின்னாஸ் மூணு மூணு தரம் ஓதிட்டு வந்தா எந்த முஸீபத்தும் (தீமையும்) அணுகாது' (அத்.10); '...ராத்திரி படுக்கும் போது ஆயத்துல் குர்ஸியை ஓதி நெஞ்சில் ஊதிட்டுப் படுங்க, வீண் பயமெல்லாம் அண்டாது' (அத். 16) என்பது போன்ற நம்பிக்கைகளை ஒரு பேஷ் இமாம் பதவி ஏற்கிறார் நாவல் மூலம் அறியலாம். கெட்ட கனவு கண்டால் குர்ஆனில் சில அத்தியாயங்களை ஓதும் (க.பூ., ப.24) வழக்கமும் உள்ளது.

'அஸ்மாவுல் உஸ்னா' எனப்படும் இறைவனின் 99 அழகிய திருநாமங்களை உச்சரிப்பது மட்டுமல்லாமல், அந்நாமங்கள் அச்சிடப்பட்ட படத்தினை வீடுகளில் சுவர்களில் தொங்க விடுவதையும் நன்மை பயப்பதாகக் கருதுகின்றனர். குறிப்பாக வீடுகளின் நுழைவுவாயிலின் மேல் அல்லது நடுக்கூடத்தில் இப்படத்தினை மாட்டுவர் (க.பூ., ப.113). இதனால் வீட்டிற்குள் இறையருள் இறங்குகிறது என்றும், தீய சக்திகள் வீட்டை அண்டாது என்றும் நம்புகின்றனர்.

### சமயச் சார்பு ஏற்றப்பட்ட நம்பிக்கைகள்

இறைநம்பிக்கை சார்ந்த வெளிப்பாடுகள் நாவல்களில் பிரதிபலித்திருப்பதுடன் நடைமுறை இஸ்லாமியச் சமூக வாழ்வில் இடம்பெறும் பல நம்பிக்கைகளை நாவல்கள் சித்திரித்துள்ளன. இவை சமயச் சாயம் பெற்றிருந்தாலும் இஸ்லாம் சமயத்தின் ஏகத்துவக் கோட்பாட்டிற்கு எதிர்மரபுகளாகவே உள்ளன. எனினும் இத்தகு நம்பிக்கைகள் இஸ்லாமியச் சமூக வாழ்வில் வெகுஜன கலாச்சாரமாகத் தாக்கம் பெற்றுள்ளன. நாவல் படைப்பாளிகள் அவற்றைத் தங்கள் நாவல்களில் இடம்பெறச் செய்துள்ளனர். இத்தகு நம்பிக்கைகளை நாவல் சான்றாதரங்களின் அடிப்படையில் பின்வருமாறு வகைப்படுத்தி விளக்கலாம்.

1. இறைநேசச் செல்வர்கள் மீது நம்பிக்கை
2. தங்கள் மீது நம்பிக்கை
3. இறை ஆற்றல் பற்றிய அறிதலின்மையால் உருவான நம்பிக்கைகள்

### இறைநேசச் செல்வர்கள் மீது நம்பிக்கை

அவுலியாக்கள் எனப்படும் இறைநேசச் செல்வர்கள் மதிப்புக்கும் மரியாதைக்கும் உரியவர்கள். இஸ்லாத்தை மக்கள் மத்தியில் நிலை நிறுத்திய மகத்துவத்திற்கு உரியவர்கள். இப்பெருமக்கள் மக்கள் மத்தியில் பெற்றிருந்த செல்வாக்கின் காரணமாக அவர்களது சமாதிகள் மக்களின் தரிசனத்திற்கும் வழிபாட்டிற்கும் உரியவையாக மாறிவிட்டன. தர்ஹாவை மையப்படுத்திய நம்பிக்கைகள், வழிபாடுகள் சார்ந்த வெகுஜன கலாச்சாரமே உருவாகிவிட்டது. இதன் தாக்கம் மக்களிடம் உள்ளதை நாவல்கள் பிரதிபலித்துள்ளன.

ஈராக் நாட்டிலுள்ள பாக்தாதில் வாழ்ந்த ஆன்மிக ஞானி முஹையித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் கிழக்காசிய நாடுகளில் இஸ்லாத்தைப் பரப்பிய சிறப்புக்குரியவர். இந்தியா, இலங்கை போன்ற நாடுகளில் இவரது தாக்கமும் இவர் மீதான மரியாதையும் மிக அதிகமானது. 'முஹையித்தீன் ஆண்டகை' என்று அழைக்கப்படும் அளவிற்கும், 'முஹையித்தீன் ஆண்டவர் பள்ளிவாசல்' என்று தொழுகைப் பள்ளி வாசல்களுக்குப் பெயரிடும் அளவிற்கும், 'முஹையித்தீன் ஆண்டகை முஸ்லிம் ஜமாஅத்' என்று ஊர் நிர்வாக அமைப்புக்குப் பெயரிடும் அளவிற்கும் இவரது செல்வாக்கு இன்றும் உள்ளது.

முஹையித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) மீது பாடப்பட்டுள்ள 'யாகுத்துபா' என்னும் புகழ்மாலையைத் தங்கள் தேவைகள் நிறைவேறிடும் நோக்கத்தில் பள்ளிவாசல்களில் நேர்ச்சைகள் வைத்து 'குத்துபியத்து' என்ற பெயரில் பாடுவது வழக்கமாக உள்ளது (து.மு.,ப.138).

இறைவன் மீது பரிபூரண நம்பிக்கை வைத்துள்ளவர்கள் கூட இறைவன் தங்கள் பிரார்த்தனையை நிறைவேற்றிட முஹையித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களின் சிபாரிசு வேண்டும் என்று நம்புகின்றனர். 'அல்லா ஒங்குட வருத்தத்த மட்டும் சுகமாக்கித் தந்தா போதும். இதுக்கு அந்த குத்பு நாயகம் எனக்கு உதவி செய்யணும்' (ப.ம.,ப.189) என்று வேண்டுகின்றனர்.

"யாரேனும் இறைவனுக்கு அஞ்சி (செயல்படுவாரா)னால் இறைவன் அவருக்கு (சிரமங்களிலிருந்து வெளியேறுவதற்கு) ஏதேனும் வழிவகையை ஏற்படுத்துவான். மேலும் அவர் நினைத்துப் பார்த்திராத வகையிலிருந்து அவருக்கு வாழ்வாதாரமும் வழங்குவான். யார் இறைவனையே முழுவதுஞ் சார்ந்திருக்கின்றாரோ அவருக்கு இறைவன் போதுமானவன்" (தி.கு.65:3) என்று தன்னிடம் வேண்டுவோரின் தேவைகளை நிறைவேற்றும் உத்திரவாதத்தை இறைவன் தருகிறான். மனிதன் தனது வேண்டுதலை இறைவனிடம் நேரடியாக வைக்கலாம் "...யாரேனும் அவனுக்கு (அல்லாஹ்வுக்கு) உதவியாளராய் இருக்க வேண்டும் எனும் அளவுக்கு அவன் இயலாதவனும் அல்ல" (தி.கு.17:111) என்று தன் வல்லமையை இறைவன் கூறுகிறான்.

ஆனால் குத்புநாயகம் உதவி இருந்தால்தான் இறைவன் அருள் கிட்டும் என்ற நம்பிக்கை காலம் காலமாக மக்களிடம் ஊறி இருப்பதை நாவல்கள் காட்டுகின்றன. முஹையித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களைச் சிபாரிசுக்கு அழைப்பது மட்டுமல்ல, அவரிடமே தங்கள் வேண்டுதல்களை வைப்பதையும் ஆபத்தான சூழல்களிலும் அதிர்ச்சியான செய்திகளைக் கேள்விப்படும் போதும் இறைவனை அழைப்பதற்குப் பதிலாக 'யா முஹியித்தீன்!' (ஒ.பே.ப.ஏ., அத்7) என்றும், 'என்ற முகையதீன் ஆண்டவரே!' (க.பூ.,ப148) என்றும் அழைப்பதைக் காணலாம்.

"துன்பத்தின் போது நீங்கள் அவனையே (அல்லாஹ்வையே) அழையுங்கள்...(6:40) என்று அறிவுறுத்தும் திருக்குர்ஆன், "அல்லாஹ்வை விடுத்து இவர்கள் யாரை அழைக்கிறார்களோ அவர்களால் ஒரு ஈயைக் கூடப் படைக்க முடியாது" (22:73) என்று எச்சரிக்கை செய்கிறது.

இறை நம்பிக்கை பற்றிய இவ்வறிவின்மை காரணமாக 'யா முஹ்யித்தீன்' என்று துன்பம் - ஆபத்து - அதிர்ச்சியான சூழல்களில் அழைப்பது மட்டுமல்லாமல் 'பத்ரீன்களே' (ப.177) என்றும், பத்திரீன்களே காப்பாத்துங்கோ' (ப.217) என்றும் அபயக்குரல் எழுப்புவது சமுதாய நிகழ்வாக இருந்ததைத் தோப்பிலின் ஒரு கடலோர கிராமத்தின் கதை சித்திரிக்கின்றது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து பயணப்பட்டு மதினாவுக்கு வந்தபின் ஹிஜ்ரி இரண்டாமாண்டு (கி.பி. 624) ரமழான் திங்கள் 17-ஆம் நாள் வெள்ளியன்று குறைஷியரின் படையெடுப்பைப் பத்ருப் போர்க்களத்தில் சந்தித்தார். இந்தப்போரில் 313 முஸ்லிம் வீரர்கள் ஆயிரத்துக்கும் மேற்பட்ட குறைஷிப்படையை இறையருளால் வெற்றி கொண்டனர். இப்போரில் முஸ்லிம்கள் தரப்பில் 14 பேர் வீரமரணம் எய்தினர். இஸ்லாத்திற்காக உயிர்த்தியாகம் செய்த இவர்களைச் சிறப்பிக்கும் வகையில் இப்போர் நடைபெற்ற நோன்பு மாதமான ரமழான் 17-ஆம் நாளை 'பத்ரு ஸ்ஹாப்பாக்கள் (பத்ருத் தோழர்கள்) தினமாக' நினைவு கூர்வது இன்றும் நடைமுறையில் உள்ளது.

"பத்ருப் போரில் கலந்து கொண்டவர்களைப் பார்த்து, நீங்கள் விரும்பியதையெல்லாம் செய்து கொள்ளுங்கள், ஏனெனில் உங்களுக்கு சுவர்க்கம் உறுதியாகி விட்டது" என்று அல்லாஹ் கூறியதாக நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் (நூல் : புகாரி). இத்தகு சிறப்புக்குரிய பத்ரு ஸஹாபாக்கள் மீதான மதிப்பு என்பது காலம் காலமாக முஸ்லிம்கள் உள்ளத்தில் அவர்களைப் பற்றிய உயரிய அந்தஸ்தினை ஏற்படுத்தியுள்ளது. ஆபத்தான சூழலில் இஸ்லாத்தைக் காத்தது போல் ஆபத்துக் காலங்களில் அவர்களை அழைத்தால் நம்மையும் காப்பாற்றுவர் என்ற தவறான நம்பிக்கையில் அறியாமையின் காரணமாகப் 'பத்தீரின்களே காப்பாத்துங்கோ' என்று அழைக்கும் வழக்கம் உருவானதாகக் கொள்ளலாம்.

இவ்வாறு இறைநேசச் செல்வர்களை, பத்ரீன்களை உதவிக்கு அழைப்பதும் அவர்களிடம் பாதுகாவல் தேடுவதும் ஓரிறை வணக்கத்திற்கு முரணாகும். மார்க்க அறிவின்மை காரணமாக மக்களிடம் உள்ள இவ்வழக்குகள் நாவல்களின் ஓட்டத்தில் பதிவாகியிருப்பதைக் காணலாம்.

**தங்கள் மீது நம்பிக்கை**

தமிழகத்தின் தெற்குக் கடற்கரையோர முஸ்லிம்களின் வாழ்வைப் பின்புலமாகக் கொண்ட தோப்பில் முகம்மது மீரானின்

நாவல்களில் இஸ்லாமிய ஞானிகள் கோலத்தில் சித்து வேலைகள், மந்திர தந்திரம் தெரிந்த தங்கள்மார் பற்றிய சித்திரம் இடம் பெற்றுள்ளது. காரமத் என்னும் அற்புதங்கள் நிகழ்த்தக் கூடியவர்கள் என்று இவர்களை மக்கள் நம்பியதால் பயத்தோடும் பக்தியோடும் இவர்களை அணுகினர். சிகர் (செய்வினை) செய்தல், மையிட்டுப் பார்த்தல், தகடு எழுதுதல் போன்றவற்றிற்காக மக்கள் இவர்களை அதிகம் அணுகினர் (ஓ.க.கி.க., ப.118).

தங்கள்மார் ஜின்களை வசப்படுத்திக் காரியம் நிகழ்த்தக்கூடியவர்கள் (ஓ.க.கி.க., பக்.41-41) என்ற நம்பிக்கை' இவர்கள் மீது பயம்கலந்த பக்தியை மக்களிடம் ஏற்படுத்தி இருந்தது.

ஜின்கள் இறைவனுடைய படைப்புகளுள் ஒன்றாகும். ஜின்கள் மனிதர்களுக்கு முன்பே நெருப்பால் படைக்கப்பட்டவர்கள். ஜின்கள் மனிதர்களைப் பார்க்கிறார்கள். ஆனால் மனிதர்களால் ஜின்களைப் பார்க்க முடியாது. மனிதர்களில் எப்படி நல்லவர்களும் தீயவர்களும் உண்டோ அதே போல் ஜின்களிலும் நல்லவைகளும், தீயவைகளும் உண்டு. ஜின்கள் மேலுலகத்திற்குப் பறந்து செல்ல முடியும். என்றாலும் ஓர் எல்லைக்கு அப்பால் அவர்களால் செல்ல முடியாது. என்றெல்லாம் திருக்குர்ஆன் ஜின்களின் ஆற்றலைப் பேசுகிறது.[16]

தொழுது கொண்டிருக்கும் போது தன்னிடம் சேஷ்டைகள் செய்த கெட்ட ஜின் ஒன்றைப் பற்றி நபி (ஸல்) குறிப்பிடும் போது, "ஜின்களைக் காணும் தன்மையையும் வசப்படுத்தும் தன்மையையும் நபி சுலைமான் (அலை) அவர்களுக்குப் பின் மற்றவர்களுக்கு இறைவன் கொடுத்திருப்பானேயானால் அந்த ஜின்னைக் கட்டி மதினா சிறுவர்களுக்கு நான் விளையாடக் கொடுத்திருப்பேன்' என்றார்[17]. ஆகவே சுலைமான் நபி(சாலமோன்)க்குப் பின்னால் எவராவது ஜின்னை வசப்படுத்த முடியும் என்று சொன்னால் அது நபிமொழிக்கு முரணாகிறது.

மனிதனைவிடப் பல நிலைகளில் ஆற்றல் படைத்த ஜின்களை மனிதன் எப்படி வசப்படுத்த முடியும்? சுலைமான் நபிக்கு அல்லாஹ் கூறுகிறான். மற்றபடி மனிதர்களால் ஜின்களை வசப்படுத்த முடியும் என்று திருக்குர்ஆன் கூறுவில்லை. ஆனால் தாங்கள் ஜின்களை வசப்படுத்தக்கூடியவர்கள் என்ற நம்பிக்கையை மக்களிடம் ஏற்படுத்தி, அதன் மூலம் பயம்கலந்த - பக்தி கலந்த மரியாதையை இந்தத் தங்கள்மார் பெற்றிருந்தனர்.

மக்கள் தங்கள் மீது வைத்திருந்த மதிப்பைப் பயன்படுத்திக் கொண்டு தங்கள்மார் சுகபோக வாழ்க்கை வாழ்ந்தனர். ஓர் ஆடவன்

நான்கு திருமணம் வரை செய்து கொள்ள இஸ்லாம் அனுமதிக்கிறது. ஆனால் தங்கள்மார் ஐந்தாவது திருமணம் செய்து கொள்ள ஆசைப்படுகிறார். இந்த ஆசை இஸ்லாமியச் சட்டத்திற்குப் புறம்பானது என்று மக்கள் கருதவில்லை. 'தங்கள்மார் போற இடம் வாற இடம் எல்லாம் நிக்காஹ் செய்வது வழக்கம். அவர்களுக்கு இது ஹலால்' (ஒ.க.கி.க., பக்.119-21) என்று பேசுகின்றனர். இது மக்களின் மார்க்க அறிவின்மையைக் காட்டுவதோடு, ஹராமை (மார்க்கத்தில் தடை செய்யப்பட்டது) ஹலாலாக்கும் (மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டது). அளவிற்கு மக்கள் மத்தியில் தங்கள்மார் செல்வாக்குப் பெற்றிருந்தனர் என்பதை அறிய உதவுகிறது.

## இறை ஆற்றல் பற்றிய புரிதலின்மையால் உருவான நம்பிக்கைகள்

இறைஆற்றல் பற்றிய தவறான நம்பிக்கைக் காரணமாக மக்களிடம் வேரோடிப் போன தவறான பழக்கங்கள், வழிபாடுகள், வழக்கங்கள் நாவல்களில் பிரதிபலித்துள்ளன. இறை ஆற்றல் மற்றும் இறை நம்பிக்கையின் தாத்பரியம் என்ன என்பதே அறியாத மக்கள் இருக்கின்றனரே என்ற வேதனையையும் படைப்பாளிகள் வெளிப்படுத்தியுள்ளனர்.

'நீங்க அல்லாவிலயும் வேதத்திலயும் நம்பிக்கை இல்லாத ஆட்கள், நான் மவ்லானாட கபுருக்கு எவ்வளவோ நேத்திக்கடன் வெச்சிபாத்திருக்கன், கைமேல பலன் கிடைச்சிருக்கு, ஒங்களுக்கும் நம்பிக்கை இருந்தா செஞ்சி பாருங்க..' (ப.ம;ப37) என்ற பெண்ணின் உரையாடல் இதைத் தெளிவாக்குகிறது.

இறைவன் மீதும் அவன் வேதத்தின் மீதும் நம்பிக்கை கொள்ள வேண்டும் என்று தெரிகிறது. ஆனால் தான் வேண்டுவதும் தனக்கு நல்லது நடப்பதும் மவ்லானா என்ற மஹானால்தான் என்றும் ஆழமாக நம்புகிறாள். இறைவன் மீதும் அவனது வேதத்தின் மீதும் நம்பிக்கை கொள்ளல் ஈமான் (நம்பிக்கை) ஆகும். அந்நம்பிக்கையைத் தொழுகை போன்ற கடமைகள் வாயிலாக நிறைவேற்றி இறைவனிடம் நேரடியாகப் பிரார்த்திப்பதன் மூலம் நிலை நிறுத்துவதை விட்டு விட்டு, மஹான் ஒருவரின் மண்ணறைக்குச் சென்று நேர்த்திக்கடன் வைப்பதன் மூலம் நிரூபித்தல் என்பது ஈமானுக்கு எதிரானது. ஆனால் இது மடமை என்பது கூடத் தெரியாமல் மக்கள் ஒழுகுவதை மேற்கண்ட பெண்ணின் உரையாடல் மூலம் அறியலாம். இது போன்று இறை நம்பிக்கை பற்றிய அறிவின்மை காரணமாக மக்கள் தங்கள்

நடைமுறைகளில் கொண்டுள்ள பல நம்பிக்கைகள், வழக்கங்கள் நாவல்களில் வெளிப்பட்டுள்ளன.

நெல்வயல் அறக்கொட்டி என்னும் பூச்சியால் பாத்திக்கப்பட்டால் அதற்குப் பூச்சி மருந்திடாமல் தண்ணி ஓதி எறிதல், மண்ஓதி எறிதல் போன்ற வழக்கங்கள் இலங்கை கிழக்கு மாகாணப்பகுதி முஸ்லிம்களிடம் வழக்கில் இருந்திருக்கின்றது. 'மாவடிப் பள்ளியில் மவ்லானா உம்மா இருக்கா. மவ்லானாடா கபுத்தில் (மண்ணறை) கொஞ்சம் மண் எடுத்து ஓதித்தருவா. அத எறிஞ்சா அறக்கொட்டியில்ல அதுர வாப்பா (தந்தை) கொட்டி எண்டாலும் தீந்து போயிடும்...' (ப.ம., பக்.36-37)

வயல் அறுவடைக்குப்பின் 'சூடு போட்டதும் ஹயாத்து நபி அப்பாவுக்கு நல்லதொரு பாத்திஹா ஓத வேணும்' (ப.ம., ப.131).

தீய சக்திகள் அண்டாமல் இருக்க தங்களிடம் நூல் ஓதிக் கையில் கட்டல் (ஒ.கு.கி.க., ப.31)

அதிகாலை பஜ்ரு தொழுகைக்குப் பாங்க (தொழுகைக்கான அழைப்பு) சொல்வதற்கு முன் வெளியே போகக்கூடாது. 'ரூஹானியத்துகளுவோ (ஆவிகள்) நீராடப் போற நேரம், இப்ப போவாதெங்கோ! வாங்கிட்டா (பாங்கு) எல்லா ரூஹானியத்தையும் அல்லா வெலங்கிட்டுப் பூட்டுவான்' (து.மு., ப.175).

'வெள்ளிக்கிழமை இறந்தவர்களுக்குச் சொர்க்கம் கிட்டும், காலாரா போன்ற நோய்களால் இறந்தவர்களுக்குச் சொர்க்கம் கிட்டாது' (து.மு.; பக்222-23) என்பது போன்று நம்பிக்கைகள் நாவல்களில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

"காலத்தைத் திட்டாதீர்கள். காலத்தைத் திட்டுபவன் என்னைத் துன்பத்திற்கு உள்ளாக்குகின்றான். ஏனெனில் காலம் என் கட்டுப்பாட்டிலேயே உள்ளது" என்று இறைவன் கூறியதாக நபி (ஸல்) கூறியுள்ளார்கள்[18]. ஆனால் இஸ்லாமிய மாதமான ஸபர் மாதம் பீடைகள் நிறைந்த மாதம் என்ற நம்பிக்கையும், அம்மாதத்தில் திருமணம் போன்ற நற்காரியங்கள் நடத்தக்கூடாது என்ற நம்பிக்கையும் தமிழகம், இலங்கையில் இன்றும் உள்ளது. பொதுவாக ஸபர் மாதத்தை 'ஸபுர்களி மாசம்' எனப் பேச்சு வழக்கில் கூறுவர். ஸபர் என்பதே ஸபுர் எனத் திரிந்துள்ளது. களி என்பது கலி அல்லது கழி என்பதன் திரிபாக இருக்கலாம். கலி பீடையைக் குறிக்கின்ற இன்னொரு சொல்லாக இருப்பதால் 'பீடைமிக்க ஸபர் மாதம்' என்ற பொருளில் 'ஸபுர்கலி' என்று மக்கள்

அழைத்திருக்கக் கூடும்[19]. ஸபர் மாதத்தின் இறுதிப் புதனை 'ஒடுக்கத்துப்புதன்' என்று அழைக்கின்றனர். அப்புதனன்று கடற்கரை, ஆற்றங்கரை அல்லது புல்வெளிக்குச் செல்வர். எண்ணெய் தேய்த்து நீர் நிலைகளில் நீராடல், மணல்- புல்லில் கால் மிதித்தல் வாயிலாகத் தங்களைப் பிடித்துள்ள பீடைகள் விலகும் என்ற நம்பிக்கை சார்ந்த வழக்கத்தை ஒரு கடலோர கிராமத்தின் கதை நாவல் (ப.252) சித்திரித்துள்ளது. ஒரு குடும்பத்தின் பூர்வீகம் சமுதாயத்தில் விமர்சனத்திற்குள்ளானால், அக்குடும்பத்திலுள்ள பெண்ணின் திருமண ஏற்பாட்டின் போது அவ்விமர்சனம் அவளது எதிர்காலத்தைச் சிக்கலுக்குள்ளாக்குகிறது (பணவிலங்கு; அத். 3,4). அவள் பிறப்பதற்கு முன்னால் முந்தைய, தலைமுறையில் அக்குடும்பத்தில் யாரோ ஒருவர் செய்த தவறாக இருந்தாலும் அதனைப் பெண்ணின் திருமணப் பேச்சின்போது அலசல் என்பது அவளது எதிர்காலத்தையே கேள்விக்குறியாக்குகிறது.

குடும்பத்தில் ஒருவர் செய்த குற்றமும் அக்குடும்பத்திலுள்ள பெண்ணின் வாழ்வைப் பாதிக்கிறது. குற்றம் செய்து ஜெயிலுக்குப் போன அண்ணனால் குடும்பத்திற்கு ஏற்பட்ட பழி, பெண்ணின் திருமணத்தின் போது அவளது ஆசைகளை நிராசையாக்கி விடுகிறது. விருப்பமில்லாத ஒரு வாழ்க்கைக்குள் அவள் தள்ளப்படுகிறாள் (ஷா.இரா., ப.16)

நபிகள் நாயகத்திற்கு முந்திய அறியாமைக் காலத்தில் ஸபர் மாதத்தைப் பீடைகள் நிறைந்த மாதமாக மக்கள் கருதினர். அம்மாதத்தின் இறுதிப் புதன்கிழமை எண்ணெய் தேய்த்துக் குளித்தால் பீடைகள் விலகும் என்றும் நம்பிக்கை கொண்டிருந்தனர். இறைவனால் படைக்கப்பட்ட காலம் அனைத்தும் நல்லவையே என்பதால் "ஸபர் மாதத்தில் அபசகுனம் என்பது கிடையாது" என்று நபி (ஸல்) கூறினார். எனவே ஒடுக்கத்துப்புதன் போன்றவை மார்க்கத்திற்கு முரணான நம்பிக்கைகள் ஆகும். இந்த நம்பிக்கைகளைச் சமயம் சார்ந்த நம்பிக்கைகளாக மக்கள் கொண்டதை நாவல் சித்திரிப்புகளால் அறியலாம். இவ்வழக்கங்கள் - நம்பிக்கைகள் இறை நம்பிக்கை மற்றும் மார்க்கம் பற்றிய தெளிவின்மை காரணமாக மக்களிடம் மிக இயல்பாக ஊறிப்போன வழக்கங்களாக இருந்துள்ளன. இத்தகைய வழக்கங்கள் தற்காலத்தில் அருகிவிட்டன என்பது குறிப்பிடத்தக்கது என்றாலும் இவ்வழக்கங்களின் போதுள்ள உறவுகள் கூடுதலும் மகிழ்ச்சிகளும் காணாமல் போகின்றன என்பது மாற்றுச் சிந்தனைக்குரியது.

மனச்சோர்வு, பயம், உடல் நலமின்மை போன்றன ஏற்படும் போது ஓதிப்பார்த்தல் எனும் வழக்கம் இஸ்லாமியர்களிடம் உள்ளது. குர்ஆனின் சில பகுதிகளை ஓதிப் பாதிக்கப்பட்டவரின் தலையில் ஊதுவர். "நலம் காக்க வல்லதும், மூஃமின்களுக்கு (இறை நம்பிக்கையாளர்) அருட்கொடையுமான வசனங்களைக் குர்ஆனில் நாம் இறக்கியுள்ளோம்". (அகு, 7:82) என்று இறைவன் கூறியுள்ளான். "முகம்மது நபி (ஸல்) அவர்கள், இறைவனுக்கு இணை கற்பிக்கும் அமைப்பில் இல்லாத வாசகங்களைக் கொண்டு ஓதி விடுவதில் குற்றமில்லை என்று அருளினார்கள்" (நூல் : முஸ்லிம்).

நோய் நிவாரணத்திற்காகவும், மன தைரியம் பெறுவதற்காகவும் ஓதிப் பார்க்கலாம். ஆனால் இந்த ஓதிப்பார்த்தல் வழக்கத்தில் பல முறைகள் புகுந்து அவையும் மார்க்கம் சார்ந்ததுதான், அவற்றைச் செய்வதாலும் நிவாரணம் கிடைக்கும் என்று முஸ்லிம்கள் நம்புகின்றனர். தண்ணி ஓதிக்குடித்தல், நூல் ஓதிக்கட்டல், பீங்கான் எழுதிக் குடித்தல் போன்ற வழக்கங்களைக் குறிப்பிடலாம் (ஓ.க.கி.க., ப.48). இவற்றைச் செய்தவற்கு என்று தங்கள்மார் பழைய காலத்தில் இருந்தனர் (ஓ.க.கி.க., ப.31). மார்க்க அறிஞர்களான ஆலிம்களும், பள்ளிவாசல் பராமரிப்பு வேலை செய்யும் மு.அதின்களும் இதனைச் செய்து வந்தனர். நூல் ஓதிக்கட்டல் பீங்கானில் ஓதிக் குடித்தல் ஆகியன தற்காலத்தில் அருகிவிட்டன. தண்ணி ஓதிக்குடித்தல் பெருவழக்காக உள்ளது.

தனக்குப் பிடிக்காத குடும்பத்தின் சந்தோசத்தைக் கெடுக்க எண்ணெய் ஓதிக்கொண்டு வந்து குறிப்பிட்ட குடும்பத்திலுள்ள குழந்தைகள், சிறார்க்குத் தடவி விட்டால் அவர்கள் பாதிக்கப்படுவர். இதனால் அக்குடும்பத்தினரின் மகிழ்ச்சி பறிபோகும் என்ற நம்பிக்கை இலங்கை அக்கரைப்பற்று பகுதி முஸ்லிம்களிடம் இருந்தது (க.பூ., ப.27).

தங்கள்மார் தங்கள் ஏவலில் உள்ள ஜின்னைக் கொண்டு இயற்கையைக் கூடத் தங்கள் வசப்படுத்தி விடுவர் என்ற நம்பிக்கை முன்பு தமிழ் முஸ்லிம்களிடம் இருந்தது. முதலாளியின் தூண்டுதலால் தங்கள் ஜின்னைக் கொண்டு கடலைக் கட்டி விட்டதால் தான் மீன் கிடைக்கவில்லை என்று மீனவர்கள் நம்பினர் (ஓ.க.கி.க., ப77) கண்ணுக்குத் தெரியாத ஆவியான ஜின்னைத் தங்கள் வசப்படுத்த முடியாது என்பதை மார்க்க அடிப்படையில் ஏற்கெனவே விவரித்துள்ளோம். இயற்கையில் நிகழும் மாற்றங்களைக் கூட நம்பிக்கையின் அடிப்படையில் சமயச் சார்புடையதாக மக்கள் நம்பினர்.

அதிகாலைத் தொழுகையான சுபுஹு தொழுகைக்குப் பாங்கு சொல்வதற்கு முன் வெளியே செல்லக் கூடாது. ஏனென்றால் அப்போது பிசாசுகள் இறங்கி நடக்கும் சுபுஹு தொழுகைக்கான பாங்கு சொல்லப்பட்டதும் அவற்றின் கால்கள் கட்டப்பட்டுவிடும் என்று தென் தமிழ்நாட்டின் கடற்கரைப் பகுதி முஸ்லிம்கள் நம்பினர். இதில் சமயம் சார்ந்த எந்த உண்மையும் இல்லை என்பதும் ஏற்கெனவே விளக்கப்பட்டுள்ளது.

நிவாரணம் வேண்டியும் நினைத்த காரியம் கைகூடவும் நேர்த்திக்கடன் வைக்கும் நம்பிக்கை தமிழ் முஸ்லிம்களிடம் இன்றும் உள்ளது. மகனுக்கு வேலை கிடைக்கத் தாய் நேர்த்திக்கடன் வைக்கிறாள் (க.பூ., ப.17); நெல் அறுவடை சிறப்பாக இருக்க, ஹயாத்து நபி அப்பாவுக்குச் சோறாக்கிப் பாத்திஹா ஓத நேர்த்திக்கடன் வைக்கப்படுகிறது, (ப.ம., ப.131); தோசம் காரணமாகக் குழந்தைக்கு ஏற்பட்ட காய்ச்சல் குணமாகக் கோரி நேர்ந்து விடப்படுகிறது. (சா.கூ., பக்.156–157).

தாங்கள் நினைத்தது நிறைவேற இறைவன் பேரில் மட்டுமே நேர்த்திக்கடன் வைக்க இஸ்லாம் அனுமதித்துள்ளது. ஆனால் தமிழ் முஸ்லிம்கள் அவுலியாக்கள் எனப்படும் இறைநேசச் செல்வர்கள் பெயரிலும் நேர்த்திக்கடன் வைத்து விடுகின்றனர்.

இத்தகைய சமயச் சார்பு ஏற்றப்பட்ட நம்பிக்கைகள் தற்காலத்தில் அருகி வருவதை இலங்கை முஸ்லிம் சமூக ஆய்வாளர் ஜவாத் மரைக்காயர் குறிப்பிடும் போது, “பொதுவாக, செய்வினை (சூனியம்), பேய், பிசாசு, கெட்ட ஆவிகள் போன்றவற்றில் நம்பிக்கை வைத்தல் முன்னொரு காலத்தில் பரவலாகக் காணப்பட்டது. பேய்-பிசாசுகளுக்கு மடை போடுதல், தாயத்துக் கட்டுதல், அட்சரங்கள் - மந்திரங்கள் போன்றவற்றை எழுதி வைப்பதன் மூலம் தமது வீட்டை அல்லது உடைமைகளைக் காவல் செய்தல், மந்திரித்து ஊதிய நீரைக் குடித்தல், இஸ்ம் எழுதிக் கரைத்துக் குடித்தல், கோழி - ஆடு முதலானவற்றைப் பலியிடுதல் போன்ற நடவடிக்கைகள் பரிகாரங்களாக அமைந்தன. நல்லடியார்கள் என்று கருதப்படுவோரின் அடக்கத்தலங்களுக்குச் சென்று பிரார்த்தனை செய்தல், சாம்பிராணிச் சட்டியிலிருக்கும் சாம்பலை மருந்தாகப் பயன்படுத்தல், அங்குள்ள உண்டியலில் காணிக்கை போடுதல், நேர்ச்சை செய்தல், கொட்டுக் காத்தல் போன்றவையும் துன்பங்களிலிருந்து மீட்சி பெறுவதற்கான பரிகார முறைகளாகக் கைக்கொள்ளப்பட்டன. இவ்வாறான பரிகார முறைகளில் சில, பிற சமய மக்களின் பண்பாடுகளிலிருந்து பெறப்பட்டவையாக உள்ளன.

அப்பரிகார முறைகளுள் சில இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகளுக்கு முரண்பட்டவையாகக் கூடக் காணப்பட்டன. ஆயினும் இத்தகைய பரிகாரம் தேடும் வழக்கங்கள் தற்போது அருகிக் கொண்டு செல்கின்றன.[21]

**நன்மை – தீமை விளைவு பற்றிய நம்பிக்கைகள்**

மனிதன் சிறப்பாக மேற்கொள்ளும் ஒவ்வொரு செயலும் நல்வாழ்விற்கான அடித்தளமாகிறது. இச்செயல் வெற்றிக்கு மனிதனது முயற்சி, உழைப்பு, பொருளாதாரம், உண்மைத்தன்மை ஆகிய பின்னணி காரணமாக அமையும். ஆனால் அவற்றைப் பின்னுக்குத் தள்ளிவிட்டுத் தங்கள் செயல் வெற்றிக்கு முதன்மைக் காரணமாக அமைந்தது நாள் பார்த்தது, நட்சத்திரம் பார்த்தது போன்றனவே என்று மக்கள் எண்ணுகின்றனர். வட்டாரச் சூழல் சார்ந்த நம்பிக்கைகளில் அறிவுக்குப் பொருத்தமான காரண காரியத்துடன் கூடிய நம்பிக்கைகளும் உண்டு. பகுத்தறிவுக்கு ஒவ்வாத நம்பிக்கைகளும் உண்டு. நன்மை விளைவை முன்னிட்ட நம்பிக்கைகள் இருப்பது போன்று, தீமை விளைவை அறிவிக்கும் நம்பிக்கைகளும் உண்டு.

பெரியம்மை, தட்டம்மை போன்ற நோய்களைச் சமயச் சார்புடையதாய் நம்பிக் கழிப்புச் சடங்குகளையே சிகிட்சையாக மேற்கொள்ளல் தமிழ்ச் சமூகத்திலுள்ள வழக்கமாகும். தமிழ் முஸ்லிம்களும் இந்நோய்களை இந்துக்களைப் போலவே நம்பினர். இலங்கை காத்தான்குடி பகுதிகளில் இந்நோய் குணமானவுடன் மஞ்சள் சோறாக்கிக் கடற்கரைக்குச் சென்று தென்னம்பாளையில் செய்த சிறு ரேணியில் நோயால் பாதிக்கப்பட்டவரின் கையால் சோற்றை அள்ளி நிரப்பி அதன்மேல் சில இறைச்சித் துண்டுகளையும் வைத்து அவர் கையாலேயே கடலில் விட வைப்பர் *(சா.கூ., பக்.59-61)*. இக்கழிப்புச் சடங்கு இன்று வழக்கில் இல்லை.

இயற்கை நிகழ்வுகளைக் கூட நம்பிக்கை சார்ந்ததாகப் பார்க்கும் மரபு உள்ளது. கடலில் மீன் பிடிக்கப் புறப்படும் மீனவர்கள் முதலில் வானத்து விண்மீன்களை அளவிடுகின்றனர். குறிப்பிட்ட திசைகளில் சில விண்மீன்கள் தோன்றியிருந்தால் இன்று அதிகமான மீன்கள் கிடைக்கும் அல்லது கிடைக்காது என்ற முடிவுக்கு வந்து அதன்படித் தங்கள் முயற்சியை அமைத்துக் கொள்கின்றனர் *(து.மு., ப.13)*

சித்திரை மாதம் கடலில் அதிகமாக நெத்திலி என்ற மீன் வகை கிடைக்கும். தமிழகத்தின் தென்கடற்கரைப் பகுதி மீனவர்கள்

இந்த ஒரு மாதம் நெத்திலி மீனைப் பிடித்துக் காயவைத்துப் பதப்படுத்தி வியாபாரிகளுக்கு மொத்தமாக விற்பர். வியாபாரிகள் அதனை இலங்கைக்குத் தூத்துக்குடி துறைமுகம் வழியாக ஏற்றுமதி செய்வர். இதில் கிடைக்கும் அதிக வருமானத்திற்காகச் சித்திரை மாத சீதோஷ்ண நிலை நன்றாக இருக்க வேண்டும் என்று அப்பகுதி மீனவர்கள் எதிர்பார்ப்பர். குறிப்பாக இம்மாதத்தில் மழை இருக்கக் கூடாது. மழை இருந்தால் நெத்திலிப்பாடு இருக்காது என்ற அனுபவ உண்மையை ஒரு நம்பிக்கையாகக் கொண்டுள்ளனர் (து.மு., ப.58). கடற்கரை சார்ந்த இந்நம்பிக்கைகளின் பின்னணியில் வானியல், சீதோஷ்ண நிலை சார்ந்த அறிவார்ந்த உண்மைகள் இருக்கலாம். ஆனால் நவீன இவ்வறிவு இல்லாத காலத்தில் தங்கள் அனுபவத்தின் மூலம் அம்மக்கள் பெற்ற அறிவு நம்பிக்கைகளாக வளர்ந்துள்ளதை அறியலாம்.

கட்டடங்கள் கட்டும் போது அஸ்திவாரக் குழியின் கன்னி மூலையில் ஒரு பவுன் தங்கம் வைத்து அதன்மேல் முதற்கல்லைத் தூக்கி வைக்கும் வழக்கம் தமிழகத்தின் தென்பகுதியிலுள்ள வசதி படைத்த முஸ்லிம்களிடம் இருந்துள்ளது. ஆன்மீகப் பெரியோர்களின் கரங்களால் அடிக்கல் நாட்டுவதை உயர்வாகக் கருதினர் (ஒ.க.கி.க., ப.41).

தாம் மேற்கொண்ட காரியம் மனத்திருப்தியைத் தரவில்லை, வெற்றியைத் தரவில்லை என்றால் அதற்குரிய காரணத்தை வேறு ஒன்றின் மீது ஏற்றிப் பேசுவது ஒரு நம்பிக்கையாக உள்ளது. தன்னிடம் அன்று யாரும் முடிவெட்ட வராததற்குக் காலையில் புறப்படும் போது மனைவி தன்னுடன் சண்டையிட்டதுதான் காரணம் என்றும், ஏழை நூக்கண்ணுக்கு தாடி ஒதுக்கி வாங்கிய முதல் கைநீட்டம் தான் காரணம் என்றும் குடிமகன் ஒசா நம்புகிறான் (து.மு., ப.199)

நல்ல காரியங்கள் நிகழும்போது தற்செயலாக நடக்கும் சில தடங்களைக் கூட அபசகுனமாகக் கருதும் நம்பிக்கை உள்ளது. திருமணத்திற்காகப் பெண் வீட்டிற்கு வரும் மாப்பிள்ளைக்குக் கால் கழுவும் சம்பிரதாயம் நடைபெறுகிறது. கால் கழுவ ஏறி நிற்கும் பலகையில் கால் வைத்தவுடன் வழுக்குகிறது. உடனே அதனை அபசகுனமாக மாப்பிள்ளை கருதுகிறார். இவ்வாறு நம்பும் அம்மாப்பிள்ளை படித்தவர் என்பது குறிப்பிடத்தக்கது (மூ.மு., ப.49).

ஊர் தர்ஹாவில் நடைபெற்ற உரூஸ் விழாவின் போது ஊர்வலத்தில் இடம்பெறும் சந்தனக்கூடு பற்றி எரிந்ததை ஊருக்கு மிகப் பெரும் கேடு விளைவதற்கான முன் அறிகுறியாக நம்பினர்

(சாகூ, ப.89). இவ்வாறு நற்காரியங்கள் நிகழும் போது சிறு தடங்கல் ஏற்பட்டாலும் அதனைத் தீங்கின் முன்னறிவிப்பாகக் கருதும் நம்பிக்கை மிக இயல்பாக மக்களிடம் உள்ளதை நாவல்களின் வாசிப்பில் அறியலாம்.

பயணம் புறப்படுபவர்களை வழியனுப்பும் போது அபசகுனமாக ஏதும் நிகழ்ந்து விடக்கூடாது என்பதில் கவனமாக இருந்துள்ளனர். வெளிநாட்டுக்கு மகன் புறப்படுகிறான். தாயார் ரோட்டுக்கே ஓடி வந்து விடுகிறாள். அபசகுனமாக யாராவது எதிர்ப்பட்டால் போகச் கூடாதாம் வெற்றுக் குடத்தை எடுத்துக் கொண்டு யாராவது எதிர் கொண்டால் கெட்ட சகுனமாம். கத்தி போன்ற இரும்பு ஆயுதங்களை எடுத்துக் கொண்டு யாராவது வந்தால் அது ஆபத்தில் முடிந்து விடுமாம். அதனால் யாரும் பாதையில் வராத நேரமாகப் பார்த்துப் போக வேண்டுமாம் (அ.ஒ., ப.54) என்று இந்நம்பிக்கைகளுக்கு மக்கள் கொடுத்த முக்கியத்துவம் பேசப்பட்டுள்ளது.

இவைபோன்று நாவல்கள் வெளிப்படுத்தும் வேறு சில நம்பிக்கை சார்ந்த வெளிப்பாடுகள்.

அ. வீட்டிற்குள் வலது காலை முன்வைத்து நுழைதல் (அ.ஒ., பக்.53-54)

ஆ. நல்ல எதிர்வருகை பார்த்துப் புறப்படல் (அ.ஒ., பக்.53-54)

இ. விடியற்காலையில் காணும் கனவு பலிக்கும் (க.க., ப.25)

ஈ. மாலை மங்கி இருட்டும் நேரத்தில் படுத்துக் கிடக்கக்கூடாது (ஒ.க.கி.க., ப.203)

உ. வீட்டின் முன் அமர்ந்து காக்கா கத்தினால் விருந்து வரும் (க.க., ப.31)

ஊ. காலையில் படுக்கையில் இருந்து எழுந்ததும் கண்ணாடி முன் விழித்தால் அன்றைய நாள் சிறப்பாக அமையும் (அ.ஒ., ப.86)

எ. மருந்து கொடுத்தும் காய்ச்சல் தீரவில்லை என்றால் காத்து கருப்பு பட்டிருக்கும். வைத்தியரை அழைத்துக் குழை அடித்தால் நோய் தீரும் (சா.கூ., பக்.118-20)

ஏ. கர்ப்பிணிப் பெண் மீது கண் பார்வை விழுந்தால் பிள்ளை பெறுவதில் சிக்கல் ஏற்படும். அச்சிக்கல் தீர குழை அடித்து உலக்கை விட வேண்டும் (சா.கூ., பக்.10-102)

மேற்கண்ட நம்பிக்கைகளில் விடியற்காலையில் காணும் கனவு பலித்தல், இருட்டுற நேரத்தில் படுத்துக் கிடக்கக் கூடாது, காக்கா வீட்டின்முன் அமர்ந்து கத்தினால் விருந்தினர் வருவர், கண்ணாடியில் விழித்தால் அன்றைய பொழுது நன்றாக அமையும் போன்ற நம்பிக்கைகள் தமிழர்களிடம் உள்ள பொதுவான நம்பிக்கைகள் ஆகும். பேசும் மொழியாலும் வாழும் கலாச்சாரச் சூழலாலும் தமிழர் சமூகத்தில் ஓர் அங்கமாக முஸ்லிம்கள் உள்ளனர். என்பதற்கு இந்தப் பொதுத்தன்மைகள் சான்றாகும்.

'குழையடித்தல்' என்பது பாதிக்கப்பட்டவரின் தலை முதல் கால் வரை மந்திரஞ் சொல்லி வேப்பிலையால் தடவி அடித்தலாகும். இதனால் பாதிக்கப்பட்டவரைப் பீடித்திருக்கும் தீய சக்திகள் விலகும் என்று நம்பப்படுகிறது. இந்துக்களிடம் உள்ள இந்த நம்பிக்கை வாழும் வட்டாரத் தாக்கத்தால் முஸ்லிம்களிடமும் வழக்கத்தில் உள்ளதை இலங்கை கிழக்கு மாகாணப் பகுதிகளில் காணலாம். தமிழகத்தில் பூசாரிகள் மந்திரவாதிகள் செய்வதை இலங்கை காத்தன்குடிப் பகுதியில் வைத்தியர் செய்கிறார் என்பதுதான் வேறுபாடு.

'குழையடித்து உலக்கை விடல்' என்பது மேற்சொன்னபடி குழையடித்துப் பின்னர் வாசலில் போய் நின்று உலக்கை ஒன்றைக் கையில் பிடித்தவாறு மந்திரம் சொல்லித் தூரத்தில் வைத்தியர் எறிவார். அத்துடன் பாதிக்கப்பட்டவரின் மேல் வீழ்ந்திருந்த பார்வை நீங்கி நிவாரணம் கிட்டும் என்று நம்பப்படுகிறது. இதுவும் இந்துக்களின் தாக்கத்தால் உள்வாங்கப்பட்ட நம்பிக்கையாகும். தற்காலத்தில் இது போன்ற நம்பிக்கைகளும் பரிகார நிகழ்ச்சிகளும் இலங்கையில் அருகி விட்டன என்பது குறிப்பிடத்தக்கது.[22]

மனித முயற்சிகள் அனைத்தும் இறைநம்பிக்கையை முன்னிறுத்தித் துவக்கபட வேண்டுமே தவிர இதர நம்பிக்கைகளுக்கு இடம் கொடுக்கக் கூடாது என்பது இஸ்லாமியக் கோட்பாடு. என்றாலும் வாழும் வட்டாரச் சூழலின் தாக்கத்தால் தமிழ்ப் பெருமக்களிடம் உள்ள இத்தகைய நம்பிக்கைகள் முஸ்லிம்களிடமும் இருப்பதை நாவல்கள் வெளிப்படுத்தியுள்ளன.

**நம்பிக்கைகளை மறுதலிக்கும் நவீனப்போக்குகள்**

தமிழ் முஸ்லிம்கள் வாழ்வில் இயல்பாக ஊடாடி நிற்கும் வாழ்வியல் நம்பிக்கைகளுள் பலவற்றை மறுத்து, இவை மார்க்கத்திற்கு முரணானவை - பகுத்தறிவுக்கு ஒத்து வராதவை

என்று விமர்சனம் செய்யும் பாத்திரங்களைப் படைப்பாளிகள் தந்துள்ளனர்.

தலைவலி வந்தால் டாக்டரிடம் போக வேண்டும். ஓதிப்பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது என்று அறிவுறுத்தப்படுகிறது (க.பூ., ப.45).

மந்திரங்கள் அனைத்தும் பொய் என்பதைப் பிரச்சாரப் படுத்த ஜுனைதா ஷெரீப் சாணைக்கூறை நாவலில் ஒரு அத்தியாயத்தையே ஒதுக்கியுள்ளார் (சா.கூ;அத்.14).

மூத்த தலைமுறையினர் அதிக முக்கியத்துவம் அளித்து வரும் இந்நம்பிக்கைகளை இளைய தலைமுறை ஏற்காமையும் விமர்சனம் செய்தலும் ஒரு கடலோர கிராமத்தின் கதை (ப.50), சாணைக்கூறை (பக்.127-28), அடிவானத்தின் ஒளிர்வுகள் (ப.54) நாவல்களில் இடம் பெற்றுள்ளது.

மூடநம்பிக்கைகள் பெண்களிடம்தான் அதிகம் உள்ளன என்று சுட்டிக்காட்டப்பட்டு விமர்சிக்கப்படுகிறது. 'காலையில் இருந்தே காக்கை கரைந்தது யார் வரப் போகிறார்கள் என்று குழம்பிக் கொண்டிருந்தேன்' என்று ஒரு பெண் கூற, 'ஏன் அந்தக் காக்கையிடமே கேட்பது தானே யார் வரப் போகிறார்கள் என்று', இந்த மூட நம்பிக்கை மட்டும் நம் பெண்களை விடமாட்டேன்கிறது (க.க., ப.31) என்று ஒரு பத்திரிக்கையாளன் விமர்சனம் செய்கிறான்.

இவ்வாறு வாழ்வியல் நம்பிக்கைகளை மறுதலிக்கும் நவீனப் போக்குகள் இருபது வருடங்களுக்கு முன்பே தமிழ் முஸ்லிம் சமூகத்தில் உருவாகி விட்டதை நாவல்கள் வெளிப்படுத்துகின்றன. தற்காலத்தில் இத்தகைய நம்பிக்கைகள் மிகவும் குறைந்து விட்டதைக் காணலாம். இதற்கான அறிகுறிகள் சமூகத்தில் ஏற்பட்டதை நாவல்கள் சுட்டுகின்றன.

# வாழ்வியல் சடங்குகள்

சடங்குகளை (Rituals) வாழ்வியல் சடங்குகள், சமயச் சடங்குகள் என இரண்டாக வகுக்கலாம். இஸ்லாம் வாழ்வியலை முன்னிறுத்தும் மார்க்கம் என்பதால் வாழ்வியல் சடங்குகளும், சமயச்சார்புடன் இணைந்தே வழக்கில் உள்ளன. சமயச்சார்புகள் கிராமிய நடைமுறைகள், வட்டாரத் தாக்கங்கள் என்பனவற்றால் இவ்வாழ்வியல் சடங்குகள் தனித்தன்மையைப் பெறுகின்றன.

நாவல்கள் சித்திரிக்கும் சம்பிரதாயங்கள் இருபது ஆண்டுகளுக்கு முந்தையவை என்பதால் அவற்றுள் பல இன்று வழக்கொழிந்துள்ளன. சில சில மாற்றங்களுடன் நடைமுறையில் உள்ளன. அத்தகைய வழக்குகள் தற்காலத்தோடு ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளன. குறிப்பிட்ட வட்டார சம்பிரதாயங்கள் வேறு பகுதிகளிலும் வழக்கில் இருக்கும். அவை பற்றிய ஒப்பீடும் பிற சமுதாயத் தாக்கங்களால் உருவான சம்பிரதாயங்கள் பற்றிய பிரித்தறிதலும் இவ்வாய்வில் இடம் பெற்றுள்ளன. எண்பதுகளில் வெளியான இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்களில் இடம் பெற்றுள்ள வாழ்வியல் சடங்குகளில் கீழ்க்கண்டவற்றைச் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

1. பிள்ளைப்பேறு சடங்குகள்
2. விருத்தசேதனச் சடங்குகள்
3. காதுகுத்துச் சடங்குகள்
4. பூப்புச் சடங்குகள்
5. திருமணச் சடங்குகள்
6. மரணச் சடங்குகள்

## பிள்ளைப்பேறு சடங்குகள்

ஒரு பெண் கர்ப்பிணியாக இருக்கும் போதே பிள்ளைப்பேறு தொடர்பான சடங்குகள் தொடங்கி விடுகின்றன. கர்ப்பம் தரித்த ஏழு அல்லது ஒன்பதாம் மாதத்தில் 'தலைப்பாத்திஹா ஓதுதல்' எனும் வைபவம் நடைபெறுவதை (பக்.139-40) அ.க. அப்துல் ஸமதுவின் பனிமலர் நாவல்

குறிப்பிடுகிறது. மாப்பிள்ளை லெப்பை ஆலிம் என்ற பெரியாரால் பாடப்பட்ட தலைப்பாத்திஹாவைத் ஓதி அன்னதானம் வழங்குதல் இலங்கையிலும் தமிழகத்தின் தென்பகுதியிலும் முன்பு பெருவழக்கமாக இருந்தது. பிறக்கும் குழந்தை பாத்திமா நாயகி (முகம்மது நபியின் மகளார்) மாதிரி சிறந்த குணநலப் பண்புகளுடனும் மார்க்கப் பக்தியுடனும் விளங்க வேண்டும் என்ற நோக்கிலேயே இதனை நடத்துகின்றனர். பெண்கள் மாத்திரம் கலந்து கொள்ளும் இந்நிகழ்ச்சியில் கர்ப்பிணிப் பெண்ணைச் சபையில் உட்கார வைத்துத் தலைப் பாத்திஹா ஓதுவார்கள்.

தலைப்பாத்திஹா ஓதத் தெரிந்திருத்தல் பெண்ணுக்குரிய முக்கியத் தகுதியாக அக்காலத்தில் கருதப்பட்டது (ப.ம., பக்.139-40). முஸ்லிம்களிடம் இவ்வழக்கம் அறிமுகமானதற்குரிய காரணத்தையும் இவ்வழக்கம் ஏற்படுத்திய தாக்கத்தையும் இலங்கை முஸ்லிம் சமூக ஆய்வாளர் ஜே.எம்.ஷம்சுதீன் மவ்லானா பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

"முஸ்லிம் மக்கள் அக்காலத்தில் பிள்ளைப் பேற்றின் போது பிற சமயச் சடங்குகளையும் ஆசாரங்களையும் பின்பற்றி வந்தனர். ஆகவே, அவ்வழக்கங்களை விடுத்துச் சமயச் சார்புடன் பிள்ளைப்பேறு தொடர்பான சம்பிரதாயங்கள் அமைவதற்காகவே தலைப்பாத்திஹா ஓதுதல் அறிமுகமாகி இருக்க வேண்டும். இதைச் செய்யாவிட்டால் அப்போதிருந்தவர்களுக்கு மனத்திருப்தியோ நிம்மதியோ ஏற்படுவதில்லை. தலைப்பாத்திஹா வரவர மறைந்து விட்டது. ஆடம்பரமாக தலைப்பாத்திஹா ஓதுதல் 'அகீகா' எனும் அவசியமான சடங்கையே மறைத்து விட்டது. ஆகீகா கொடுக்கும் வழக்கம் இன்று அதிகரித்து வருகிறது."[23]

குழந்தைப் பிறப்புத் தொடர்பாக இஸ்லாம் வலியுறுத்தும் முக்கிய வழக்கம் 'அகீகா' கொடுப்பதாகும். அகீகா என்பதற்குத் துண்டிக்கப்பட்டது அல்லது களையப்பட்டது என்று பொருள். குழந்தை பிறந்து ஏழாவது நாளில் குழந்தையின் வளர்ச்சிக்காக ஆடு அறுத்து, தர்மம் செய்ய வேண்டும். குழந்தையின் தலைமுடியை அகற்றி அதன் எடைக்கு நிகரான வெள்ளி அல்லது தங்கத்தையும் தர்மம் செய்ய வேண்டும். முகம்மது நபி (ஸல்) வலியுறுத்தியுள்ள இவ்வழக்கமே அகீகா எனப்படும்.

மனித வாழ்வின் முக்கிய நிகழ்வுகளில் மேற்கொள்வதற்குச் சமயம் கூறிய விதிகள் பற்றிய அறிவின்மையும், வட்டாரச் சம்பிரதாயங்கள் சமயச் சம்பிரதாயங்களாக நம்பப்பட்டதுமே

அகீகா கடமையை விடத் தலைப்பாத்திஹாவுக்கு அதிக முக்கியத்துவம் அளித்ததற்கான காரணம் எனலாம்.

குழந்தை பிறந்த நாற்பதாவது நாளைக் கொண்டாடுதல் இன்றும் தமிழ் முஸ்லிம்களிடம் உள்ளது. இலங்கை அம்பாரை மாவட்ட முஸ்லிம்களிடம் குழந்தை பிறந்த நாற்பதாம் நாள் அன்று தாய்மாமன் சீர் செய்யும் வழக்கம் உள்ளது. இதனைச் 'சாணைக் கூறை இடுதல்' என்கின்றனர். பட்டுச் சட்டை பட்டுத் துணியைத் தாய்மாமன் சாணைக் கூறையாக வழங்குவதை (ப.14) ஜுனைதா ஷெரீப் தனது 'சாணைக்கூறை' நாவலில் சித்திரித்துள்ளார். இது இந்துப் பெருமக்களின் தாக்கத்தால் பெறப்பட்ட வழக்கமாகும். பெண் குழந்தை பிறந்த உடனேயே முறைப் பையனுக்கு உறுதிப்படுத்தும் மரபுதான் இவ்வழக்கம். தற்காலத்தில் இவ்வழக்கம் அருகிவிட்டது என்றாலும் குழந்தை பிறந்த உடன் தாய்மாமன் போன்ற நெருங்கிய உறவினர் குழந்தைக்கு நகை, ஆடை பரிசளிப்பது வழக்கமாக உள்ளது. சாணைக்கூறை கொடுக்கும் போதுள்ள 'உறுதி செய்தல்' என்ற நோக்கம் இதில் இல்லை. பெண் குழந்தை என்றால் இந்த அன்பளிப்பின் தரம் கூடுகிறது.

### விருத்தசேதனச் சடங்குகள்

ஆண் குழந்தைகளுக்குக் 'கத்னா' என்னும் விருத்தசேதனம் (circumcision) செய்யும் வழக்கத்தையும் ஒரு சடங்காகத் தமிழ் முஸ்லிம்கள் கொண்டாடுவதைப் பற்றிய பதிவுகள் நாவல்களில் உள்ளன. இதனைச் 'சுன்னத் செய்தல்' என்று வழங்குகின்றனர். சுன்னத் என்பது முகம்மது நபியின் எல்லா வழிமுறைகளையும் குறிப்பதாகும். ஆனால் தமிழகத்திலும் இலங்கையிலும் உள்ள முஸ்லிம்களிடம் விருத்த சேதனத்தைக் குறிப்பிடவே இவ்வார்த்தை அதிகம் பயன்படுத்தப்படுகிறது.

குழந்தை பிறந்த ஏழாவது நாள் அல்லது நாற்பதாவது நாள் கத்னா செய்வதுதான் இஸ்லாமிய மரபு. ஆனால் தமிழ் முஸ்லிம்கள் சிறுவர் பருவம் அடைந்த பின்னரே இவ்வழக்கத்தை நிறைவேற்றுகின்றனர். குழந்தையாக இருக்கும்போது நிறைவேற்றுவது அருகிய வழக்கமாக உள்ளது. இவ்வழக்கத்தை நிறைவேற்றுவதைத் தொழிலாகக் கொண்டவர்கள் குடிமகன், ஒசா, மாலி, உஸ்தா, முஸ்லிம் நாவிதன் என்றெல்லாம் இடத்திற்கு இடம் வேறு பெயரில் அழைக்கப்படுகின்றனர். இவர்களைப் பற்றிய தகவல்கள் ஒரு கடலோர கிராமத்தின் கதை, துறைமுகம், ஒரு பேஷ்இமாம் பதவி ஏற்கிறார், சாணைக்கூறை போன்ற நாவல்களில்

இடம் பெற்றுள்ளன. இவர்களது சமூக மதிப்புப் பற்றிய ஆய்வு இவ்வாய்வில் இடம்பெற்றுள்ளது.

சுன்னத்துப் பிள்ளைகளை மாப்பிள்ளை போல் புத்தாடை உடுத்திப் பள்ளிவாசலுக்குப் பைத்து (இறைவனையும் முகம்மது நபியையும் புகழ்ந்து எழுதப்பட்ட பாடல்கள்) பாடி ஊர்வலமாய் அழைத்துச் செல்வார்கள். வசதியுள்ளோர் குதிரை மீதமர்த்தி ஊர்வலமாய் அழைத்துச் செல்வதும் உண்டு. வசதிக்கேற்ப இந்த ஊர்வலத்தின் தன்மை அமையும். ஊர்வலத்தில் பட்டாசு கொளுத்தல், களிகம்பு அடித்தல், கம்பு விளையாட்டு, வாள் கத்தி - கிரிஸ் விளையாட்டுகளும், நாதஸ்வரம் - தவில் இசையும் இடம் பெறுவது முன்பு கிழக்கிலங்கைப் பகுதிகளில் பிரபல்யம் (சா.கூ., பக்.81-83).

இந்த ஊர்வலத்தின் போது உறவினரும் நண்பரும் விருத்த சேதன மாப்பிள்ளையை அழைத்து ஆரத்தி எடுத்து, சிற்றுண்டி கொடுத்துப் பரிசுகளும் வழங்குவர். இதுவும் ஒரு கொண்டாட்டமான நிகழ்ச்சியாகும். குதிரையேற்றம், வலம் வருதல், வாத்திய முழக்கம் போன்றவை இப்போது மறைந்து விட்டன. சுமார் இருபது வருடக் காலத்தில் இம்மாற்றம் நிகழ்ந்துள்ளது.[24] குடிமகன்களால் செய்யப்பட்ட சுன்னத் தற்போது மருத்துவமனைகளில் முஸ்லிம் மருத்துவர்களைக் கொண்டு நடத்தப்படுவது இலங்கையிலும் தமிழகத்திலும் தொடங்கியுள்ளது.

### காது குத்துச் சடங்குகள்

பெண் குழந்தைகள் ஓரளவு வளர்ந்த பின் காது குத்துதலை ஒரு சடங்காகக் கொண்டாடுதல் அருகிய வழக்கமாகத் தமிழ் முஸ்லிம்களிடம் உள்ளது. சமய ரீதியாக இதற்கு எவ்வித முக்கியத்துவமும் இல்லை.

காது குத்தப்படும் சிறுமிக்குப் புத்தாடை அணிவித்து மணப்பெண் போல் காட்சிக்கு வைப்பர். உற்றார், அண்டை அயலார் அவளுக்குப் பணமும் ஆடைகளும் கொடுப்பர். நெருங்கிய தாய்மாமன் போன்ற உறவினர் ஆபரணங்களை அன்பளிப்பாக வழங்குவர். முந்தைய காலங்களில் கன்னியாகுமரி மாவட்டம் தேங்காய்ப் பட்டினப் பகுதிகளில் காதுகுத்து வைபவத்தை முன்னிட்டு உற்றார்க்கும் ஊரார்க்கும் புட்டு அவித்துப் பரிமாறியுள்ளனர் (ப.31) என்பதை ஒரு கடலோர கிராமத்தின் கதை நாவலால் அறியலாம்.

நகைவேலை செய்யும் கம்மாளரை அழைத்துக் காது குத்துவர். தற்போது உறவுகளை அழைத்து இச்சடங்கை நடத்துவது குறைந்து வருகிறது. மருத்துவ மனைகளில் சிறுமிகளுக்குக் காதுகுத்தும் அளவிற்கு மாற்றம் நிகழ்ந்து வருகிறது. இச்சடங்கு இந்துக்களிடம் இருந்து உள்வாங்கப்பட்டதாகும்.

## பூப்புச் சடங்குகள்

பெண் பருவமடைதலைக் 'குமராகுதல்' என்று தமிழ் முஸ்லிம்கள் கூறுகின்றனர். தமிழகத்தின் தென் மாவட்டங்களில் 'சடங்காகுதல்' என்றும், தேங்காய்ப் பட்டினப் பகுதிகளில் 'புத்தி அறிதல்' (ஒ.க.கிக., ப.33) என்றும் வழங்குகின்றனர்.

பூப்படைந்தவுடன் அப்பெண்ணின் வாயில் நல்லெண்ணெய்யை விடுவர் (ஒ.க.கி.க;ப.32) பூப்படைந்த பெண்ணுக்கு நல்லெண்ணெய்யும் பச்சை முட்டையும் கொடுக்கும் வழக்கம் இன்றும் உள்ளது.

ஒரு பெண் பருவமடைந்து விட்டால் பாற்சோறு சமைத்து அண்டை அயலாருக்கு வழங்குவது இலங்கையிலும் தமிழகத்தின் தென்பகுதிகளிலும் முன்பிருந்த வழக்கமாகும். இது பெண் பருவமடைந்து விட்டதை ஊருக்கு வெளிப்படுத்தும் நிகழ்ச்சியாக அமைந்தது.

பெண் பருவமடைந்ததைக் கேள்விப்படும் உறவினர்களும் அயலாரும் முட்டை, சீனி, நல்லெண்ணெய் போன்றவற்றை அன்பளிப்பாக எடுத்துச் செல்வதை **மூன்றாம் பிறை** நாவல் குறிப்பிடுகிறது (ப.72). பருவமடைந்த பெண் தொடக்கு நீங்கிக் குளிக்கும் வரை ஓர் அறைக்குள்ளேயே முடக்கி வைப்பது முன்னைய வழக்கமாக இருந்தது. ஏழாவது நாள் பூப்பெய்திய பெண்ணின் தலைக்குத் தண்ணீர் விடும் வழக்கம் வைபவமாக நடத்தப்படும். தலைப்பிள்ளை காரியம் என்றால் விமரிசையாக நடத்துவர் (ப.20) என்பதை ஹிமானா சையத் தனது **புயலில் ஒரு பூ** நாவலில் காட்டுகிறார்.

"பூப்புச்சடங்கின் போது இலங்கைத் தமிழ் முஸ்லிம்கள் முன்பு பாற்சோறு சமைத்து மஞ்சள் தடவிய வெற்றிலையில் வைத்து உறவினர்களுக்கு அனுப்புவர். ஏழு நாட்களும் பெண்கள் பரிசு மற்றும் தின்பண்டங்களுடன் வந்து செல்வர். பூப்பெய்திய பெண்ணைச் சுற்றி ரபான் கொட்டிப் பெண்கள் மகிழ்வூட்டுவர். ஏழாம் நாள் விருந்தோடு வைபவம் நிறைவு பெறும். இவை இன்று பெரும்பாலும் விடை பெற்று விட்டன"[25].

இலங்கைத் தமிழ் முஸ்லிம்களிடம் பூப்புச்சடங்குகள் அருகி வருவதை ஜே.எம். ஷம்சுதீன் மவ்லானா பின்வருமாறு மதிப்பிடுகிறார்: "சுமார் 20, 25 வருடங்களுக்கு முன்னர் மகள் ஒருத்தி பருவம் அடைந்துவிட்டால் அதனைப் பகிரங்கப் படுத்தி அலங்காரம் செய்து இன சனத்தவர் கொண்டாடுவதற்கு வாய்ப்பு வைப்பது வழக்கமாக இருந்தது. மஞ்சள் பூசி விளையாடுதல், நீர் இறைத்து விளையாடுதல் ஆகிய கேலி விளையாட்டுக்கள் நடைபெறும். இவ்வழக்கம் தற்போது முஸ்லிம் சமூகத்திடம் முற்றாகவே ஒழிந்து விட்டது. இது வரவேற்கத்தக்க ஒரு மாற்றம். பயனற்ற வகையில் பணத்தை விரயம் செய்தலும் வீண் நேரக்கழிவும் ஏற்படா. இவ்வகையில் நம்மிடம் ஏற்பட்டு வரும் மாற்றங்கள் இஸ்லாமியப் பண்பாட்டுடன் இணங்கி வருவதாகும்".[26]

தமிழகச் சூழலிலும் இன்று பூப்பு நிகழ்ச்சி ஒரு சடங்காகக் கொண்டாடப்படல் குறைந்து வருகிறது. இதனைக் கொண்டாடுவதற்குச் சமய ரீதியான வலியுறுத்தும் ஏதும் இல்லாததே காரணமாகும்.

### திருமணச் சடங்குகள்

திருமணம் என்பது அங்கீகரிக்கப்பட்ட ஆண்-பெண் உறவின் ஒப்பந்த நிகழ்வாகும். ஆண்-பெண் இருவரின் இணைவாக மட்டுமல்லாமல் உயிரியல், பொருளியல், சமூகவியல் அம்சங்களின் முக்கியக் கூட்டாகவும் சக்தியாகவும் திருமணம் விளங்குகிறது. சம்பிரதாயங்களும் சடங்குகளும் சமய, சமூக நிலைகளில் இதன் முக்கியத்துவத்தை வலியுறுத்தவோ, உறுதிப்படுத்தவோ முயல்வதைப் பழைய திருமண மரபுகள் காட்டுகின்றன.

எண்பதுகளில் வெளியான இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்கள் சித்திரிக்கும் திருமணங்களில் ஏராளமான மரபுகளும் சம்பிரதாயங்களும் காணப்படுகின்றன. குறிப்பிட்ட வட்டாரம் சார்ந்த திருமணச் சம்பிரதாயங்களைச் சிறப்பாகவும் இஸ்லாமியத் திருமண முறைமைகளைப் பொதுவாகவும் அறிந்து கொள்ள இவ்வெளிப்பாடுகள் துணை செய்கின்றன. "கிழக்கு மாகாண மக்களின் கலாச்சாரம், பண்பாடுகள், திருமணச் சம்பிரதாயங்கள் முதலியவற்றை நாங்கள் அறிய உதவி செய்த உங்களை எப்படிப் போற்றுவது என்றே தெரியவில்லை..." என்று 'சாணைக்கூறை' நாவலாசிரியர் ஜுனைதா ஷெரீபை ஒரு வாசகர் போற்றுவது இதனை உறுதிப்படுத்துகிறது.[27]

திருமணச் சடங்குகள் பற்றிய சித்திரிப்புகளை இலங்கை இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்களே அதிகம் தருகின்றன. தமிழகத்தில் வெளியான நாவல்களில் திருமணச் சடங்குகள் அளவாகவே பேசப்பட்டுள்ளன. இந்நாவல்களின் வெளிப்பாடுகளாக அமைந்துள்ள திருமணச் சடங்குகள் இருபது அல்லது முப்பது ஆண்டுகளுக்கு முந்தைய திருமண மரபுகளையே அதிகம் வெளிப்படுத்துகின்றன. தற்காலத் திருமண நிகழ்வுகள் உட்காட்சியாய் மனத்துள் நிற்பதால், நாவல்களின் வாசிப்பின் போது திருமண மரபுகளில் ஏற்பட்டு வந்துள்ள மாற்றங்களை இயல்பாகப் புரிந்து கொள்ள முடிகிறது. எனவே நாவல்கள் சித்திரித்துள்ள திருமணச் சடங்குகளை விளக்கும் போது அவற்றுள் வழக்கொழிந்து போன சம்பிரதாயங்களும், சமகாலத்தில் ஏற்பட்டுள்ள மாற்றங்களும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. இலங்கைத் தமிழ் முஸ்லிம் சமூகத் திருமணச் சடங்குகளே அதிகம் தரவுகளாகக் கிடைத்துள்ளதால் அவற்றை விளக்கும் போது, தமிழக முஸ்லிம்களின் திருமணச் சடங்குகளும் ஒப்பு நோக்கப்பட்டுள்ளன. இச்சடங்குகளில் பிற சமூக, பிரதேசத் தாக்கங்கள் என்ன என்பதும் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. ஆய்வுக்குரிய நாவல்களில் உள்ள திருமணச் சடங்குகள் பற்றிய தரவுகள் பின்வருமாறு பகுத்து ஆராயப்பட்டுள்ளன.

1. திருமணத்திற்கு முந்தைய சடங்குகள்
2. திருமண நிகழ்வின் போதுள்ள சடங்குகள்
3. திருமணத்திற்குப் பிந்தைய சடங்குகள்

## திருமணத்திற்கு முந்தைய சடங்குகள்

முந்தைய காலங்களில் சிறுவயதிலேயே பெண்ணுக்குத் திருமணம் செய்யும் வழக்கம் இலங்கையிலும் தமிழகத்திலும் பெருவழக்காக இருந்துள்ளது. பருவமடைந்த பெண்ணை வீட்டில் வெகுகாலம் வைத்திருக்கும் குடும்பத்தினரை மதிப்புக் குறைவாகச் சமூகம் மதிப்பிட்டது. 'புத்தி அறிஞ்சிட்டு ஆறுமாசம் எந்தப் பெண்ணும் இந்த குடும்பத்துல இருந்ததில்ல' (ஓ.க.கி.க., ப.34) என்று கௌரவம் சார்ந்த விசயமாகப் பெண்ணின் இளம் வயது திருமணம் பார்க்கப்பட்டது.

திருமணத்திற்குப் பின் தாய் வீட்டோடு பெண் வாழ்தல் இலங்கையில் பெருவழக்காக இருப்பதால் மணப்பெண் சிறுவயதுடையவள் என்பதால் மணமகனுக்காகப் பணி விடைகளைப் பெண்ணின் தாயாரே செய்தனர். 'அந்தக் காலத்தில்

பெண் பிள்ளைகளுக்குப் பத்து பன்னிரெண்டு வயதில் கல்யாணம் முடித்து விடுவார்கள். அப்புறம் மருமகனுக்குச் சோறு போட்டு கொண்டு வைப்பது, முகம் கழுவத் தண்ணீர் வைப்பது, குளிப்பதற்குச் சாரம் துவாய் - சர்வக்காரம் கொண்டு கிணற்றடியில் வைப்பது எல்லாம் மாமியாரே செய்வாள். படிப்படியாகப் பிள்ளையையும் பழக்கி எடுக்க இரண்டு மூன்று பிள்ளைத் தலைமுறையாகப் போகும்...' (ப.ம., ப.100) என்ற அனுபவ வாசகங்களில் ஒரு பெண் குடும்பம் நடத்தும் பக்குவம் பெறுமுன்னே சில குழந்தைகளுக்குத் தாயாகி விடும் அளவிற்குச் சிறு வயதில் திருமண வாழ்வை ஏற்ற முந்தைய சமூக நடைமுறையை அறியலாம்.

முந்தைய காலங்களில் முஸ்லிம்கள் இரவு நேரத்திலேயே திருமணத்தை நடத்தினர் (சா.கூ., ப.43). எல்லோரும் கலந்து கொள்ளும் விதத்தில் இரவு நேரம் ஓய்வுப் பொழுதாக இருப்பதாலும், இரவுப் பயணம் அக்காலத்தில் தவிர்க்கப்பட்டதாலும் போக்குவரத்து வசதியின்மை காரணமாக வெளியூர்களிலிருந்து புறப்பட்டு வருபவர்கள் வந்து சேர்வதற்காகவும் எனப் பல காரணங்களால் அக்காலங்களில் இரவில் திருமணங்கள் நடத்தப்பட்டன எனலாம்.

திருமணத்திற்கு நாள் குறித்தல் முறையாக நடைபெறும். திருமணப் பேச்சு வார்த்தைகள் இருதரப்பாரும் திருப்தியடையும் வண்ணம் முடிந்தால் நிச்சயதார்த்தத்தன்று திருமணத்திற்கான நாள் குறிக்கப்படும். ஆலிம் கல்யாண நாளைக் குறித்துக் கொடுப்பார்.

"முஸ்லிம்கள் அநேகமாக துல்கஹ்தா, ரஜப் மாதங்களில்தான் திருமணங்களை வைப்பதற்குப் பிரியப்படுவார்கள். கிழமைகளில் திங்கள், புதன், வெள்ளிக்கிழமைகளையே விரும்புவார்கள். சீதனப்பணம் கொடுத்த தினத்திலிருந்து மூன்று மாதங்களுக்கிடையில் திருமணத்தை வைப்பதற்கு முயல்வார்கள். பெரும்பான்மையான இடங்களில் திருமண வைபவங்கள் ஷவ்வால், ரபிய்யுல் ஆகிர், ஜமாதுல் அவ்வல், ஜமாதுல் ஆகிர், ரஜப் ஆகிய மாதங்களிலேயே நடைபெற்றன. இப்பொழுது புனித ரமழானைத் தவிர ஏனைய எல்லா மாதங்களிலும் திருமணம் நடக்கின்றன"[28].

நாள் குறிக்கிற ஆலிமிடம் ஜோசியர் பாணி அமைந்திருக்கும். 'இன்று ரஜப் பிறை பனிரெண்டு. திங்கட்கிழமை, செவ்வா, புதன் இரண்டும் நஹ்சுடைய நாட்கள். வியாழக்கிழமை ஸுஹுல் ஸாஅத் துறவறம் போவதற்குரிய நாள். இதெல்லாம்

கல்யாணத்துக்கு ஆகாத நாட்கள். வெள்ளிக்கிழமை பிறை பதினாறு இரவு உன்பது மணிக்கும் பதனொரு மணிக்கும் இடையில் ரெண்டு காவினையும் (திருமணம்) முடிச்சிருங்க. நல்ல பறக்கத்தான (அபிவிருத்தியான) நாள்' (ப.ம., ப.190) என்று முறையாக நாள் குறித்துக் கொடுப்பார். அவருக்குத் தட்சிணையாக ஒரு வட்டாவில் வெற்றிலை பாக்கு பரப்பிஅதன் மேல் காணிக்கைப் பணம் வைத்து அத்தட்டை ஒரு வெள்ளைத் துணியால் மூடிக் கொடுப்பது வழக்கமாக இருந்தது (ப.ம., ப.190)

நிச்சயதார்த்தத்திற்குப் பிறகு இரு குடும்பத்தாரிடையேயும் பரிசுகள் பரிமாறப்படும். முஸ்லிம்களின் முக்கிய நாட்களாகிய நோன்புப் பெருநாள், ஹஜ்ஜுப்பெருநாள் போன்ற நாட்களில் விலையுயர்ந்த சேலைகளையும் சரிகைகளையும் பெண்ணுக்கும் அவளது சகோதரிகளுக்கும் தாயாருக்கும் மாப்பிள்ளை அனுப்புவது வழக்கம். இதற்குப் பதிலாகப் பெண் வீட்டிலிருந்து மாப்பிள்ளை வீட்டுக்குச் சுவையுள்ள தின்பண்டங்களும் உணவு வகைகளும் அனுப்பப்படுவதைக் **கனவுப் பூக்கள்** நாவல் சித்திரிக்கிறது. தமிழகத்திலும் இதுபோன்று திருமணத்திற்கு முன் நோன்புப் பெருநாள் வந்தால் பெண்ணுக்கு மாப்பிள்ளை துணி எடுத்துக் கொடுப்பதும், இரு வீட்டாரும் தின்பண்டங்கள் பரிமாறிக் கொள்வதும் பல இடங்களில் வழக்கில் உள்ளது.

ஏதேனும் காரணத்தால் நிச்சயித்த திருமணத்தை நிறுத்த மாப்பிள்ளை வீட்டார் முடிவு செய்தால் ஆள் மூலம் சொல்லி அனுப்புவர். பெண் வீட்டினர் முடிவு செய்தால் மாப்பிள்ளை கொடுத்தனுப்பிய புடவையைத் திருப்பி மாப்பிள்ளை வீட்டுக்கு அனுப்பிவிட்டால் திருமணப் பேச்சு முறிந்து போகும் (க.பூ., ப.151)

திருமணத்திற்கான நாள் குறித்த பின்னர்த் 'தாலிக்குத் தங்கம் உருக்குதல்' வைபவம் மாப்பிள்ளை வீட்டில் இரு வீட்டு முக்கியஸ்தர்களும் கலந்து கொள்ள நடைபெறும். நிகழ்ச்சிக்குப் பின்னர் விருந்து நடைபெறும். இவ்வழக்கம் இந்து சமூகத்தாரின் தாக்கத்தால் உருவானதாகும்.

திருமணத்தேதி முடிவானதும் மாப்பிள்ளை தான் வாழும் ஊர் ஜமாஅத்துக்கு 'ஊர்ப்பணம்' கொடுக்க வேண்டும். இதனைப் 'பள்ளிப்பணம்' என்றும் கூறுவர். ஊர்ப்பணம் கொடுத்தால் தான் ஜமாஅத் நிர்வாகத்தினர் திருமணத்தில் பங்கேற்பர். ஆலிம், மோதினார், குடிமகன் போன்றோரும் திருமண நிகழ்ச்சிகளை நடத்திக் கொடுக்க அனுமதிக்கப்படுவார்கள் (ஒ.க.கி.க., பக்.192-94)

தமிழகத்திலும் இலங்கையிலும் உள்ள எல்லா ஜமாஅத்துகளிலும் திருமணக் கட்டணம் வாங்கும் வழக்கம் நடைமுறையில் உள்ளது. பெண் வீட்டாரும் ஊர்ப்பணம் வழங்கும் வழக்கம் பல இடங்களில் உள்ளது. தற்காலத்தில் மாப்பிள்ளை வாங்கும் வரதட்சிணையிலும் ஒன்று முதல் மூன்று சதவிகிதம் வரை ஜமாஅத்துக்கு வழங்க வேண்டும் என்ற எழுதப்படாத சட்டத்தையும் பல ஜமாஅத்துகள் விதித்துள்ளன கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள பெருபான்மையான ஜமாஅத்துகளில் இவ்வழக்கம் உள்ளது.

திருமணத்திற்கு உறவினரையும் ஊராரையும் அழைத்தாலும் திருமணத்திற்கு முந்திய நாள் மாப்பிள்ளை வீட்டு சார்பாக 'ஊர் அழைப்பு' நடத்தப்படும். இதில் பெண் வீட்டுப்பிரதிநிதிகளும் கலந்து கொள்வர். வீடுவீடாகச் சென்று வெற்றிலைப் பாக்கு கொடுத்துத் திருமணத்திற்கு அழைப்பர் (சா.கூ., ப.37). இதனை 'வட்டா கொண்டு போதல்' என்றும் கூறுவர். இவ்வாறு அழைக்கச் செல்லும் போது, பறையன் ஒருவன் முன்னால் பறையடித்துச் செல்வான். இதனை 'அழைப்புப்பறை' என்பர். பறை அடிப்பவனுக்கு அழைப்பு விடும் வீட்டில் காசு கொடுப்பர்.[29] இலங்கைக் கிழக்கு மாகாணப் பகுதிகளிலும் மட்டக்களப்புப் பகுதிகளிலும் இவ்வழக்கம் இருந்தது. தமிழகத்தில் மாப்பிள்ளை வீட்டார் ஊர் அழைப்பு நடத்துதல் முந்தைய காலங்களில் இருந்து வந்தது. ஆனால் பறை அடித்துச் செல்லல் கிடையாது. தற்காலத்தில் இலங்கையிலும் தமிழகத்திலும் ஊர் அழைப்பு வழக்கம் சில கிராமப்புறங்களைத் தவிர பெரும்பான்மை இடங்களில் மறைந்து விட்டது. தமிழகத்திலுள்ள இந்துப் பெருமக்களிடம் மரணச் சடங்குகளின் போது மட்டுமே பறை அடிக்கும் வழக்கம் உள்ளது. எழவுக்கு அடிப்பவர்கள் என்று பறை அடிப்பவர்களைத் தாழ்வாகக் கருதும் மனநிலையும் காலம் காலமாக உள்ளது. ஆனால் இலங்கைத் தமிழ் முஸ்லிம்கள் திருமணச் சடங்குகளின் போது பறை அடித்தார்கள் என்ற தகவல் தமிழக வழக்கத்துக்கு முரணாக இருப்பதுடன், பறை அடித்தலையும் பறை அடிப்பவர்களையும் தாழ்வாகக் கருதாத பண்பாட்டைக் காட்டுகிறது.

திருமணத்திற்குப் 'பந்தல் அமைத்தல்' என்பது அதிகக் கவனம் செலுத்தப்பட்ட ஒரு சம்பிரதாயமாகும். பந்தல் அமைப்பதற்குக் கூலிக்கு ஆள் அமர்த்தும் வழக்கம் இல்லை. உறவினர்களும் நண்பர்களும் சேர்ந்து ஈடுபாட்டுடனும் ஆர்வத்துடனும் அழகுடனும் பந்தல் அமைப்பர் (மூ.மு., ப.37). பந்தலின் முதல் காலைக் குடும்பத்தின் மூத்த உறுப்பினர் ஒருவர்

எடுத்து வைப்பார். பந்தலில் குருத்தோலைகளைத் தோரணமாகக் கட்டித் தொங்கவிடுவர் (சா.கூ., ப.35). தமிழகத்தில் மதுரை, தேனி, திண்டுக்கல் மாவட்டங்களில் பந்தலில் குருத்தோலை அலங்காரம் செய்யும் வழக்கம் உள்ளது. இது இந்துக்களிடம் இருந்து பெற்ற வழக்கமாகும்.

திருமணத்திற்கு முன் மணப்பெண்ணை அழகுபடுத்தல் என்பது ஒரு சடங்காகவே கன்னியாகுமரி மாவட்டப் பகுதிகளில் நடத்தப்பட்டது. பொண்ணுக்கு 'முகம் மினுக்கல்' என்ற பெயரில் நடைபெறும் இச்சடங்கில் ஒசாத்தி (குடிமகள்) முக்கியப் பங்கேற்பாள் (ஒ.க.கி.க., ப.193) அவள் பாலைத் தொட்டு மணப்பெண்ணின் முகத்தில் தடவிச் சவரக்கத்தியால் அழகு படுத்துவாள். பின்னர் மறைவிடத்திற்கு அழைத்துச் சென்று பெண்ணின் மறைவிடங்களில் உள்ள முடியையும் அகற்றுவாள். மணப்பெண்ணின் வீட்டாரும் திருமணத்திற்கு வந்த உறவினரும் ஒசாத்திக்குக் கைமடக்குக் கொடுப்பர். இதுவே முகம் மினுக்கல் என்ற பெயரில் நடைபெறும் சடங்காகும். ஒசா, ஒசாத்தி இருவரும் ஜமாஅத் கட்டுப்பாட்டில் இருப்பர். ஊர்ப்பணம் கொடுக்கவில்லை என்றால் இச்சடங்குகளுக்குச் செல்ல இவர்கள் அனுமதிக்கப் படமாட்டார்கள். (ஒ.க.கி.க., ப.196) மணமகனுக்கும் இதுபோன்று 'முகம் மினுக்கல்' என்ற பெயரில் ஒசா (குடிமகன்) முகச்சவரம் செய்வது ஒரு சடங்காகச் சமீபக் காலம் வரை தமிழகத்தின் தென்மாவட்டங்களில் நடந்துள்ளது. தமிழ் முஸ்லிம்கள் அனைவரிடமும் பெருவாரியாக இவ்வழக்கம் இருந்ததையும் இன்று அருகி வருவதையும் அறிய முடிகிறது.

மணப்பெண்ணுக்கு 'மருதாணி இடும் வழக்கம்' இலங்கையிலும் தமிழகத்திலும் ஒரு சடங்காகவே நடத்தப்படுகிறது. கேரளாவில் மருதாணி இடும் நிகழ்ச்சி ஆடல் பாடலுடன் சிறப்பாக நடைபெறுகிறது. இதற்கெனப் பாடப்படும் மைலாஞ்சிப் பாடல்கள் கேரள முஸ்லிம்களை அடையாளப் படுத்தும் பாடல் மரபாக உள்ளன. கேரளத்தின் தாக்கத்தால் கன்னியாகுமரி மாவட்டத்திலும் மணப்பெண்ணுக்கு மருதாணி இடுவது சிறப்பாக நடைபெறுகிறது. மாப்பிள்ளை வீட்டார் குறிப்பாக மணமகனின் சகோதரிகள் இதில் முக்கியப் பங்கேற்பர் (மூ.மு., ப.39). இலங்கையில் இவ்வழக்கம் 'மருதோண்டி கொண்டு போதல்' என்றும், 'பரசம் கொண்டு போதல்' என்றும் வழங்கப்படுகிறது. மாப்பிள்ளையின் சகோதரி மருதாணித் தட்டை ஏந்த அவளுக்கு ஒரு பெண் குடை பிடிக்க, பெண்கள் சூழ, பறையடி முன் தொடரப் பெண் வீட்டை நோக்கிச் செல்வர்.

பெண் வீட்டிலுள்ள பெண்கள், மருதாணித் தட்டை வாங்கும் பெண்ணின் சகோதரிக்குக் குடை பிடித்தவாறு எதிரேற்றுச் சென்று வரவேற்பர். எதிரேற்கப் புறப்படும்போது பெண்கள் குலவையிடுவர். பறையடிப்பவர்கள் பறைகளைத் தட்டியவாறு முன்னே செல்லப் பெண்கள் பின் தொடர்ந்து செல்வர். மருதாணி வாங்கப் போகும் பெண் இரட்டை முக்காடிட்டு நடுநாயகமாகக் குடையின் கீழ் நிற்பாள். மாப்பிள்ளை வீட்டாரும் பறையடி முன்தொடர மாப்பிள்ளை வீட்டிலிருந்து மருதாணி கொணரும் பெண்ணும் இரட்டை முக்காடிட்டுக் குடையின் கீழ் நிற்பர். பட்டாசு வெடிக்க, பெண்கள் குலவையிட மாப்பிள்ளைத் தரப்பைப் பெண் வீட்டார் அழைத்துச் சென்று அமர வைக்க அனைவருக்கும் வெற்றிலைச் சுருள் பறிமாறப்படும். பின்னர் மாப்பிள்ளையின் சகோதரிகள் பெண்ணுக்கு மருதாணி வைத்து இரண்டு ரூபாய்த் தாளையும் வைப்பார்கள். தொடர்ந்து ஏனைய பெண்களும் மருதாணி தொட்டு வைப்பர் (சா.கூ., பக்.40-41).

கன்னியாகுமரி மாவட்டத்தில் இத்தகைய பறையடி ஊர்வலம், எதிரேற்று வரவழைத்தல் என்பன இல்லா விட்டாலும் திருமணத்திற்கு முந்திய நாள் இரவு மாப்பிள்ளையின் சகோதரிகளுடன் பெண்கள் குழு ஒன்று பெண் வீட்டுக்குச் சென்று பெண்ணுக்கு மருதாணி வைத்துவிட்டு வருவர். இன்று இவ்வழக்கம் சற்றுக் குறைந்திருக்கிறது.

இவ்வழக்கம் திருமணத்திற்கு முன் இருவீட்டாரின் பரஸ்பர அறிமுகத்திற்கும் மகிழ்வான உரையாடலுக்கும் வழி வகுக்கும். தற்காலத்தில் பெண் வீட்டாரே பெண்ணுக்கு மருதாணி இட்டுக் கொள்ளும் அளவிற்கு இவ்வழக்கத்தில் மாற்றங்களும் நிகழ்ந்து வருகின்றன. முந்தைய காலங்களில் திருமண வீட்டார் இருவரும் ஒரே ஊரையோ அல்லது பக்கத்து ஊரையோ சார்ந்தவர்களாகத்தான் இருப்பர். தூர இடங்களில் சம்பந்தம் செய்தல் என்பது அரிதாகவே இருக்கும். இரு வீட்டாரும் அண்மையில் இருந்த காரணத்தினால் திருமணத்திற்கு முன்பு மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டிற்குச் சென்று மருதாணி இட்டு வருவதற்கு வசதியாக இருந்தது. ஆனால் தற்காலத்தில் தூர இடங்களில் திருமணம் செய்வது பெருகி வருவதால் மருதாணி இடுதல் போன்ற வைபவங்களுக்குச் சிரமம் எடுத்தல் முடியாததாக உள்ளது. எனவே இதனை ஒரு சடங்காக நடத்தல் என்பது குறைந்து வருகிறது.

## திருமண நிகழ்வின் போதுள்ள சடங்குகள்

மணமகள், மணமகன் அலங்காரம் என்பது இன்று போலல்லாமல் முந்தைய காலங்களில் வித்தியாசமாக அமைந்தது. மணப் பெண்ணுக்குக் கழுத்திலும் காதிலும் கையிலும் பொன் நகைகள், இடுப்பில் பொன் அரைஞாணம் அணிவித்துச் சிறந்த பட்டுடுத்தி அகலம் கூடிய சரிகையிட்ட கசவுக்கவுணி கொண்டு தலையும் முகமும் மறைத்து அலங்காரம் செய்யப்படும் (ஒ.க.கி.க., ப.138). மாப்பிள்ளை சாரம் அணிந்து, அரைக்கை சட்டை, தலையில் நீண்ட உயரமான கறுப்புத் தொப்பி, பின் கழுத்தை வளைத்து நெஞ்சின் இருபுறமும் தொங்கும் சால்வையுடன் காட்சியளிப்பார் (சா.கூ., ப.43).

இத்தகு அலங்காரங்கள் இன்று இல்லை. மணப்பெண்ணுக்குப் பட்டுடுத்தி நகைகள் அணிவித்து, கிறிஸ்தவ மணப்பெண் தலையில் இடுவது போன்ற வலைப் பின்னலில் அமைந்த துணியைத் தலைமறைப்பாக அலங்காரமாக அமைக்கின்றனர். மணமகன் தனது சக்திக்கு ஏற்ப வேஷ்டி-சட்டை, பேன்ட்ஸ்-சர்ட், கோட்-சூட் ஏதாவது ஒன்றில் காட்சி தருவார். தொப்பி அணிந்திருப்பார். இன்று நஜாத் இயக்கத்தின் தாக்கத்தால் பூமாலை, தொப்பி அணிதல் போன்றவற்றை மணமகன் தவிர்ப்பதைத் தமிழகம், இல்ங்கையில் அரிதாகக் காணலாம்.

இலங்கைத் தமிழ் முஸ்லிம்களின் திருமணம் பெண் வீட்டிலேயே நடைபெறுகிறது. தன் வீட்டாருக்குச் சலாம் சொல்லிப் பெண் வீட்டுக்கு மாப்பிள்ளை புறப்படுவார். மாப்பிள்ளையின் மச்சான் குடை பிடிக்க நண்பர்களும், உறவினர்களும் புடைசூழ ஆலிம் பைத்து ஓத மேள தாளங்களுடன் மாப்பிள்ளை புறப்பட்டுச் செல்வார். வழியெங்கும் பட்டாசு கொளுத்தப்படுவதைப் புள்ளியாமீனின் அடிவானத்து ஒளிர்வுகள் நாவல் சித்திரிக்கின்றது. குழல் ஊதுபவர்கள் ஊது குழல்களை வாய்க்குள் வைத்துக் கன்னங்கள் முட்டை அடைத்தவைகளாக உப்பும்படித் தொடர்ந்து ஊதுவார்கள். பறையடிப்பவர்கள் இரு கைகளிலும் வைத்திருந்த சிறு பிரம்பால் பறையை அறைய, ஊர்வலம் தொடரும். பெண் வீட்டை ஊர்வலம் நெருங்கியவுடன் பெண் வீட்டைச் சார்ந்த ஒருவர் (பெரும்பாலும் பெண்ணின் சகோதரர்) பறை முழங்க விரித்த குடையுடன் உறவினர்களுடன் எதிரேற்று வருவார். மாப்பிள்ளையைத் தனது குடைக்குள் எடுத்து வீட்டை நோக்கி அழைத்துச் செல்வார்கள் (சா.கூ., ப.43).

மணமகனுடன் வந்த கூட்டத்துக்குத் தலைவாயில் தரையில் வெள்ளைத்துணி விரித்து, பன்னீர் தெளித்து அமோக வரவேற்பு அளிக்கப்படும் (அ.ஒ., ப.186) மணமகன் பெண் வீட்டு வாசலில் கால் வைக்குமுன் ஆரத்தி எடுக்கப்படும். மஞ்சள் கரைத்த நீரில் வெற்றிலையை அமிழ்த்தி முட்டை, தேங்காய், எலுமிச்சை, பூக்கள் கொண்ட ஆரத்தித் தட்டுடன் சுமங்கலியான மூத்த பெண் ஒருத்தி ஆரத்தி எடுப்பாள் (அ.ஒ., ப.186). "ஆரத்தி எடுப்பதற்குப் பல முறைகள் உண்டு. ஆரத்தி எடுப்பதற்கு மூன்று பாத்திரங்களை உபயோகிப்பர். ஒன்றில் மஞ்சள் தண்ணீரும் இரண்டாவது பாத்திரத்தில் தேங்காய்ப்பாலும், மூன்றாவது பாத்திரத்தில் வெற்றிலையும் சில செப்புக் காசுகளும் இருக்கும். முதலிரண்டு பாத்திரங்களையும் மாப்பிள்ளையின் முகத்தருகில் சுற்றிக் கொண்டுவர மாப்பிள்ளை மூன்று முறை துப்புவார். மூன்றாவது பாத்திரத்தில் உள்ள காசை மாப்பிள்ளையின் தலைக்கு மேல் வீசுவார்கள்"[30].

இலங்கைத் தமிழ் முஸ்லிம்களிடம் இருந்த ஆரத்தி எடுக்கும் வழக்கம் தமிழகத் தாக்கத்தால் ஏற்பட்டது என்பதைச் சமூக வரலாற்று ஆய்வாளர் ஏ.எம். சமீம் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

'ஆலத்து' என்பது முஸ்லிம்கள் கடைப்பிடித்து வரும் சடங்குகளில் ஒன்று. இதை ஆராத்தி, ஆலாத்தி என்றும் கூறுவர். 'வளரெரி வலங்கொண்டாய் பொற்கட்டிறா னேறினானே' என்று சீவகசிந்தாமணி வரிக்கு நச்சினார்க்கினியர் தரும் உரையில் 'விவாகம் பண்ணியெழுந்திருந்து சாந்தியான கூத்தும் ஆராத்தியும் கண்டு அருந்ததி காணப் போமளவும் இருக்கும் கட்டில்' என்றார். இதனால் ஆரத்தி என்பது தமிழர்களின் வழக்கங்களில் ஒன்று என்பதை நாம் அறிகின்றோம். இன்னல்கள் வராத வண்ணம் தடுப்பதற்கே ஆரத்தி என்ற இந்த வழக்கத்தை இவர்கள் கடைப்பிடித்து இருக்கலாம். இதே கருத்தினால் தானோ என்னவோ முஸ்லிம்களும் இப்பழக்கத்தை அனுஷ்டிக்கின்றனர்.

அரேபிய மக்களும் இதே கருத்தில் ஒரு வழக்கத்தைக் கடைப்பிடித்தனர் என்பதற்கு ஹதீஸில் (முகம்மது நபியின் வாழ்வும் வாக்கும்) ஒரு குறிப்பு இருக்கிறது. நபிகள் நாயகம் (ஸல்) தங்கள் மகளை அலி (ரலி) அவர்களுக்குக் கைப்பிடித்துக் கொடுக்குமுன் ஆண்டவனுடைய அருளைப் பெறுமாறும், சைத்தானின் பார்வை விழாமல் இருக்குமாறும் இருவர் மேலும் தண்ணீர் தெளித்ததாக அறிகிறோம். இதே கருத்தில்தான் இன்றும் முஸ்லிம்கள் பன்னீர் தெளிக்கின்றனர்."[31]

இவ்வாறு ஆரத்தி எடுக்கும் போது பெண்கள் குரவையிடுவர். பின்னர்ப் பெண்ணின் சகோதரர்களில் இளையவர் மாப்பிள்ளைக்குக் கால் கழுவுவார். மாப்பிள்ளை ஒரு பலகையில் ஏறி நின்று கொள்ள, தேங்காய்ப் பாலாலும் தண்ணீராலும் கால் கழுவப்படும். அதற்குப் பதிலாக மைத்துனனுக்கு மாப்பிள்ளை தங்க மோதிரம் அணிவிப்பார் (மூ.மு., ப.49). சில இடங்களில் பன்னீர் தெளித்தும் கால் கழுவுவர் (அ.ஒ., ப.186). இவ்வழக்கம் தமிழகத்திலும் பெருவழக்காக இருந்தது. தற்காலத்தில் இவ்வழக்கம் மறைந்து வருகிறது. தண்ணீரால் கால் கழுவி விடுவதற்குப் பதில் பன்னீரைத் தெளித்தோ அல்லது சென்ட் ஸ்பிரேயைக் காலில் அடித்தோ சடங்கை நிறைவேற்றி விடும் வழக்கமும் சில இடங்களில் உள்ளது.

மணப்பந்தலில் நுழைந்த மணமகன் மணமேடையில் திருமண ஒப்பந்தத்தை நிகழ்த்தும் மார்க்க அறிஞரின் எதிரில் மண்டிக்காலிட்டு மேற்கு நோக்கி அமர்வார் என்பதை ஆளூர் ஜலால் தனது ஒரு பேஷ்இமாம் பதவி ஏற்கிறார் நாவலில் சுட்டுகிறார் (அத். 15). புனித இறையில்லமான மக்காவிலுள்ள காஃபாவை நோக்கித் தொழுகை நடத்துவது இஸ்லாமியர்களின் வழக்கமாகும். இதனைக் கிப்லாவை முன்னோக்கல் என்பர். இந்த அடிப்படையில் நற்காரியங்கள் நிகழும் போதும் கிப்லா திசையான மேற்கு நோக்கி அமர்தல் வழக்கமாகி உள்ளது. தமிழகத்திலும் இலங்கையிலும் பெரும்பாலும் மணமகன் இவ்வாறே மணமேடையிலும் அமருவார். தற்காலத்தில் திருமண மண்டபங்களில் திருமணங்கள் அதிகம் நிகழ்வதால், புகைப்படங்களும் ஒளிப்படமும் எடுக்கப்படுவதால் மணமகன் பார்வையாளர்களை நோக்கி அமருகிறார். இதனால் கிப்லாவை முன்னோக்கி அமரும் முறை குறைந்து வருகிறது.

மணப்பெண் சார்ந்த ஜமாஅத்திலிருந்து வரும் விவாகப் பதிவேட்டில் மஹர் தொகைக் குறிக்கப்படும். மணமகன், மணமகள் பற்றிய விபரத்தோடு, திருமண ஒப்பந்தத்தை நடத்தி வைக்கும் வக்கீலால் இருசாட்சிகளின் பெயர்களும் எழுதப்பட்டுக் கையொப்பம் வாங்கப்படும். மணமக்களும் கையெழுத்திடுவர். இத்தகைய முறையான பதிவுக்குப் பின்னர் மார்க்க அறிஞர் சொல்லிக் கொடுக்க வக்கீல் (பெரும்பாலும் பெண்ணின் தந்தை) திருமண ஒப்பந்தத்தை நடத்தி வைப்பார் (மூ.மு., ப.44). தமிழகத்திலும் இம்முறையே அதிகம் பின்பற்றப்படுகிறது.

திருமண ஒப்பந்தத்திற்கு முன் மணமகனுக்கு, கலிமா என்னும் ஏகத்துவ வாக்கை மார்க்க அறிஞர் சொல்லிக் கொடுக்க,

மாப்பிள்ளை திருப்பிச் சொல்வது ஒரு பொது நடைமுறையாகும். இலங்கை கிழக்கு மாகாணத்தில் கலிமா சொல்லுமுன் ஒரு கோப்பையில் தண்ணீர் மணமகனிடம் கொடுக்கப்படும். அவர் அதிலிருந்து தண்ணீரெடுத்து மூன்று முறை வாய் கொப்பளித்துப் படிக்கமொன்றினுள் உமிழுவார் (மூ.மு;ப.44). மிக உயர்வான ஏகத்துவ வாக்கைக் கூறுவதால் மணமகனின் வாய் சுத்தமாக இருக்க வேண்டும் என்பதே இச்செயலின் நோக்கம். தற்காலத்தில் இவ்வழக்கம் குறைந்து விட்டது.

திருமண ஒப்பந்தம் முடிந்தவுடன் மார்க்க அறிஞர் மணமக்களுக்காகப் பிரார்த்தனை செய்வார். அனைவரும் அதில் பங்கேற்பர். தற்காலத்தில் நஜாத் கொள்கைத் தாக்கம் உடையவர்கள் திருமணத்தில் மார்க்க அறிஞருக்கு வேலை இல்லை. பெண்ணின் தந்தையே நேரடியாகத் திருமண ஒப்பந்தத்தை நிகழ்த்தி விடுகிறார். கூட்டுப் பிரார்த்தனையும் தவிர்க்கப்படுகிறது. காரணம் இவை நபி வழி அல்ல என்பது அவர்கள் கருத்து. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தனது மகள் பாத்திமா (ரலி) அவர்களின் திருமணத்தின் போது கேட்ட, 'இறைவா! இம்மணமக்கள் இருவருக்கும் சிறந்த வாழ்வை நல்குவாயாக! நல்ல காரியங்கள் அனைத்திலும் இவ்விருவரையும் ஒன்று சேர்ப்பாயாக!' என்ற பிரார்த்தனையை மட்டும் தனித்தனியாக ஒவ்வொருவரிடமும் கேட்க அறிவுறுத்தப்படுகிறது.

திருமண ஒப்பந்தம் முடிந்தவுடன் மணமகன், மணமகள் இருப்பிடத்திற்கு அழைத்துச் செல்லப் படுகிறான். தங்கநகை ஒன்றைத் தாலியாக மணமகள் கழுத்தில் மணமகன் அணிவிப்பான். அதற்கு முன்னர், சுற்றி நிற்கும் பெண்கள் குரவையிடுவர். முக்கிய நிகழ்வு நடைபெறப் போவதால் வந்துள்ள பெண்கள் அனைவரையும் தாலிகட்டும் இடத்திற்கு வரவழைப்பதற்காகவே இக்குரவை எழுப்பப்படுகிறது (சா.கூ., ப.38). "திருமண நிகழ்ச்சி மட்டுமல்லாமல் இன்னும் பிற நிகழ்ச்சிகளிலும் பெண்கள் குரவையிடும் வழக்கம் தமிழகத்திலிருந்தே வந்திருக்க வேண்டும்" என்று ஏ.எம். சமீம் குறிப்பிடுகிறார்.[32] தமிழக முஸ்லிம்களிடமும் முந்தைய காலங்களில் குரவையிடுதல் இருந்துள்ளது. தற்போது இவ்வழக்கம் இல்லை என்று சொல்லுமளவிற்குக் குறைந்து விட்டது.

பின்னர், பெண்ணின் தகப்பனார் தன் மகளின் வலது கையைப் பிடித்து மணமகனிடம் கொடுப்பார் (மூ.மு., ப.50). இவ்வழக்கம் தமிழகத்திலும் பல இடங்களில் உள்ளது. பிடித்துக் கொடுத்தும் இரு கைகளையும் ஒரு துணியால் சிறிது நேரம் மூடி

விடும் வழக்கம் தென் தமிழ் மாவட்டங்களில் இன்றும் வழக்கில் உள்ளது. இலங்கையில் காத்தன்குடிப் பகுதியில் மணமகளின் தலை முடியில் சிலதைப் பிடித்து மாப்பிள்ளையின் கையில் கொடுத்தலும் அப்போது பெண்கள் குரவையிடுதலும் வழக்கில் உள்ளது (சா.கூ., ப.45)

தாலிச் செயின் அணிவித்த பின், மணமக்களுக்குப் பால்பழம் கொடுக்கப்படும். மணமகன் - மணமகளின் நெருங்கிய உறவினர் அனைவரும் கொடுப்பர். (சா.கூ., ப.45) தமிழகத்திலும் இவ்வழக்கம் உள்ளது.

மணமக்களை வாழ்த்திப் பெண்கள் பாடும் வழக்கம் இலங்கை அக்கரைப்பற்றுப் பகுதிகளில் இருந்தது. இதனைச் 'சவ்வாசி பாடுதல்' என்பர்.

இந்த மணமகனும் - சவ்வாசி
இந்த பெண்மானும் - சவ்வாசி
நந்தா விளக்குப்போல் - சவ்வாசி
நாள்தோறும் வாழ்ந்திடுக- சவ்வாசி (ப.ம., ப.199)

என்பது போன்று இவ்வாழ்த்துப் பாடல்கள் அமையும்.

மணமக்களின் முதலிரவுக்காக மணவறை அலங்காரத்திலும் பல சம்பிரதாயங்கள் பேணப்பட்டுள்ளன. மணப்பெண்ணின் அறை முழுதாகச் சோடிக்கப்பட்டு, குத்து விளக்கு எரிந்து கொண்டிருக்கும். வெடித்த தென்னம்பாளைகள் இரண்டு செப்புக்குடங்களில் செருகப்பட்டு விரிந்து அழகு பரப்பும் (மூ.மு., பக்.47-48). கட்டிலில் ஏழு பாய்கள் விரிக்கப்பட்டு, வெள்ளைச் சீலையால் கட்டிலின் மேலே உள்ள சட்டம் மூடப்பட்டிருக்கும். வெள்ளை கட்டிய தட்டால் மூடிய தண்ணீர்க் கோப்பை, பால்பழக் கோப்பை இத்தியாதிகளுடன் சோபிக்கும் (சா.கூ., ப.43). மணவறை அலங்காரத்திற்கு இலங்கை முஸ்லிம்கள் கொடுத்த முக்கியத்துவத்தைச் சமூக வரலாற்று ஆய்வாளர் ஏ.எம். சமீம் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

"...பெண் வீட்டில் மணமக்கள் உறங்கும் கட்டிலைத்தான் நன்றாக அலங்கரித்து வைத்திருப்பார்கள். ஏனென்றால் மாப்பிள்ளை அந்தக் கட்டிலில்தான் பெண்ணுக்குத் தாலி கட்டுவார். இதை மாப்பிள்ளைக் கட்டில் என அழைப்பர். இந்தக் கட்டில் சந்ததிக்குச் சந்ததி கைமாறிக் கொண்டு வரும் ஒரு குடும்பச்

சொத்து. இதை யாரும் விற்கமாட்டார்கள். இந்தக் கட்டில் மற்றைய கட்டில்களைப் போலல்லாமல் உயரமாக இருக்கும். இக்கட்டிலின் மேல் ஏழு பாய்களை ஒன்றன்மேல் ஒன்றாகப் போட்டிருப்பார்கள். ஏனென்றால் மாப்பிள்ளை, திருமணத்திற்குப் பிறகு ஏழு நாட்களுக்கு அந்த அறையில் தான் தங்கவேண்டும் என்பதாலும், அவர் அந்த ஏழு நாட்களுக்குக் குளிக்கக்கூடாது என்பதாலும் இப்படி ஏழு பாய்களும் போட்டிருக்கலாம்.

கட்டில் மட்டத்திற்கு உயரமாக ஒரு படிக்கமும் ஒரு குத்து விளக்கும் கட்டிலுக்குப் பக்கமாக வைக்கப்பட்டிருக்கும். அதன் பக்கத்தில் சேவரக்கால் (தண்ணீர்க் கோப்பை வைக்கும் ஒரு தாங்கி) ஒன்றும் இருக்கும். அதோடு எண்ணெய் ஊற்றும் ஒரு மூக்குள்ள செம்பு, பூரணக் கும்பங்கள் இரண்டு, ஓர் அலுமாரி அல்லது பெட்டகம் இவைகளை மாப்பிள்ளைக்குக் கொடுப்பதாக முன்பே பேச்சு வார்த்தைகளின் போது முடிவு செய்யப்பட்டு விட்டது".[33]

இஸ்லாமியத் திருமணங்களில் விருந்து பிரதான அம்சமாகும். திருமணத்திற்கு முந்தைய நாள் இரவு மாப்பிள்ளை வீட்டில் மௌலூது (நபிகள் நாயகம் மீது பாடப்பட்ட புகழ்ப்பாக்கள்) ஓதி மாடு அறுத்து விருந்து கொடுப்பர். திருமணம் முடிந்தவுடன் பெண் வீட்டார் சார்பில் இருதரப்பினருக்கும் விருந்து அளிக்கப்படும் (சா.கூ., பக்.41-42). தமிழகத்திலும் திருமணத்திற்கு முந்திய நாள் இரவு மாப்பிள்ளை வீட்டார் தங்கள் தரப்பினருக்கு விருந்தளிப்பர். அப்போது பாத்திஹா ஓதப்படும். மௌலூது ஓதும் வழக்கம் மிக அரிது. திருமணம் முடிந்த மூன்று அல்லது ஏழாம் நாள் மணமகன் வீட்டார் சார்பாக வலிமாவிருந்து அளிக்கும் வழக்கமும் தமிழகம் இலங்கையில் பரவலாக உள்ளது.

மாப்பிள்ளை, பெண் வீட்டிற்குக் கொண்டு செல்லும் 'கூறைப்பெட்டி' பெண்களின் கவனத்தை அதிகம் ஈர்க்கும். அதில் மணமகன் உடைகளோடு மணமகளுக்கான உடைகளும் அலங்காரப் பொருட்களும் இருக்கும். மேலும் மணமகள் வீட்டிலுள்ள இளம் பெண்களுக்கான அலங்காரப் பொருட்களும் வைக்கப்பட்டிருக்கும். இப்பெட்டியைப் பெண்கள் குழு திறப்பர். எனவே மாப்பிள்ளை தனது தாராளத்தனத்தை அதில் காட்டியிருக்க வேண்டும் (ப.ம., ப.194). தமிழகத்திலும் மாப்பிள்ளை கொண்டு வரும் பெட்டியில் மணமகளுக்கும் மணமகளைச் சார்ந்த இளம் பெண்களுக்கும் அலங்காரப் பொருட்கள் கணிசமாக இருக்கும். இதனை 'மாப்பிள்ளை பெட்டி' என்று அழைப்பர்.

## திருமணத்திற்குப் பிந்தைய சடங்குகள்

திருமணம் முடிந்த அடுத்த நாள் காலையில் பெரியதொரு ஓலைப்பெட்டி நிறைய அரிசிமாவுப் புட்டும் கோழிக் கறியும் மணப்பெண்ணின் வீட்டிலிருந்து மாப்பிள்ளையின் வீட்டுக்கு அனுப்பி வைப்பது இலங்கை கிழக்கு மாகாணப் பகுதி வழக்கமாகும். பணக்காரத் திருமணங்களில் மிகப்பெரிய பெட்டியொன்று இதற்காகப் பயன்படுத்தப்படும் (மூ.மு., ப70)

திருமணம் முடிந்த ஐந்தாவது நாள் மணமுடித்த தம்பதிகளை ஒன்றாக வைத்துக் தண்ணீர் வார்த்து மாப்பிள்ளையின் வீட்டுக்கு மணப்பெண்ணைக் கூட்டிச் செல்லும் நிகழ்ச்சி நடைபெறும் (மூ.மு., ப.84).

திருமணத்திற்குப் பின்னுள்ள சடங்குகள் எல்லாம் முடிந்த பின் மாப்பிள்ளை - பெண் இருவரையும் நிரந்தரமாக வாழ்வதற்காகப் பெண்ணின் தாய் வீட்டில் கொண்டு விடும் வைபவம் நடைபெறும். பெண்ணுக்கு வீடு கொடுத்து, தாய் வீட்டினர் தனிக்குடித்தனம் அமைத்துக் கொடுத்தல் அல்லது தாய் வீட்டோடு மாப்பிள்ளையுடன் வாழச் செய்தல் என்பது இலங்கையில் பெருபான்மையாக உள்ள வழக்கமாகும். இது குறித்து இவ்வியலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

முந்தைய காலங்களில் சம்பந்தம் பேசி முடிவான பின்னர் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பெண்ணின் பெற்றோரது சமூகப் பொருளாதாரச் செயல்பாடுகளில் பங்கேற்று மாப்பிள்ளை தனது தகுதியை நிருபிக்க வேண்டும். அநுராதபுரம் மாவட்டக் கிராமங்களில் இம்முறை ஒரு காலத்தில் இறுக்கமாகக் கடைப்பிடிக்கப் பட்டதை அறிய முடிகிறது. காடு வெட்டுதல், உழுதல், சூடு மிதித்தல் முதலிய அனைத்துத் தொழில்களிலும் மாப்பிள்ளை மாமனாருக்கு உதவ வேண்டும்.

இக்கால இடைவெளியில் மாப்பிள்ளையின் தொழில் திறனையும், நற்குணங்களையும் மாமனார் அவதானிக்கிறார். மாப்பிள்ளையின் நடவடிக்கைகளில் பெண்ணின் பெற்றோர் திருப்தியடைந்தால் திருமணத்திற்கு விருப்பம் தெரிவிக்கின்றனர். இல்லையெனில் திருமணம் முறிவடைகிறது. பெற்றோர் பெண்ணுக்கு வேறு மாப்பிள்ளையைத் தேடுவர். இத்தகைய திருமணங்களை மானிடவியலில் 'தகுதிகாண் திருமணங்கள் (Probationary Marriages) என்று கூறுவர். இன்று இம்முறை பொதுவாக இல்லை என்றே கூற வேண்டும்.[34]

இவ்வழக்கம் குடும்பத்தில் பெண்ணுக்கான மதிப்பையும் உறுதி செய்வதாய் இருந்தது. அதனால்தான் 'ஆண்பிள்ளை ஊரான் ஒருத்தியின் செல்வம்தானே, பெண் பிள்ளைதான் பிறந்த வீட்டில் கலகலப்பாக இருப்பாள். அவளுக்குக் கண் நிறைந்த மாப்பிள்ளை எடுத்துக் கொடுத்தால் அது வீடு நிறைந்த மாதிரி இருக்கும்' (ப.ம., ப.99) என்று பெண்ணின் எதிர்கால மகிழ்வுக்கான திட்டம் பேசப்படுகிறது.

மணமகன் பெண் வீட்டில் வாழச் செல்வதற்கும் நாள் நேரம் பார்ப்பர். பெரும்பாலும் வெள்ளிக்கிழமை ஜும்மாவுக்குப் பின் மணமக்களைப் பெண் வீட்டில் கொண்டு விடுவர் (ச.தொ., ப.148). இத்துடன் திருமணம் தொடர்பான சம்பிரதாயங்கள் முடிவடையும்.

**மரணச் சடங்குகள்**

மரணித்த உடலை மையத்து, ஜனாஸா என்று அழைப்பர். ஒருவர் மரணித்தவுடன் அந்த மையத்தின் உடலில் உள்ள அசுத்தங்களை நீக்கிச் சுத்தப்படுத்தி, குளிப்பாட்டி, மூக்கு மற்றும் ஆசனவாய் துவாரங்களில் பஞ்சை வைத்து அடைத்து, நாடிக் கட்டுக் கட்டி, இருகால் பெருவிரல்களையும் வெள்ளைத் துணியால் சேர்த்துக் கட்டுவதை இக்பால் ராஜா தனது கண்மணி வஹிதா **கவலை வேண்டாம்** நாவலில் சித்திரித்துள்ளார் (அத்.13). இதனைக் 'கசறு இறக்கல்' என்பர். இதில் பள்ளிவாசல் மோதினார், குடிமகன் ஆகியோர் முக்கியப் பங்கேற்பர். பெண் மையத்திற்குக் குடிமகள் வேலை செய்பவரோ அல்லது வழக்கமாக மையத்துக்குக் கசறு இறக்கி அனுபவமுள்ள மூத்தப் பெண்களோ கசறு இறக்குவர்.

மையத்தை அடக்குவதற்குத் தூக்கிச் செல்லுமுன் குளிப்பாட்டல் முக்கியச் சடங்காக நடைபெறும். இதற்கு 'ஜனாஸா குளிப்பாட்டல்' என்பர். நெருங்கிய உறவினர் அனைவரும் செம்பில் நீர் எடுத்து மையத்தின் மேல் இரண்டாம் கலிமா சொல்லி விடுவர்.[35] அதன் பின்னர்க் 'கபன் பொதிதல்' நடைபெறும். 18 முழம் வெள்ளைக் கோடித் துணியால் முறையாக மையத்துப் பொதியப்படும். கால், இடுப்பு, கழுத்து மூன்றிடங்களிலும் பொதிவுக்கு மேல் துணியால் கட்டுவர் (து.மு., ப.164).

பள்ளிவாசலில் இருந்து எடுத்து வரப்படும் சந்தூக்கில் ஜனாஸாவை நல்லடக்கத்திற்காகத் தூக்கிச் செல்வர். அப்போது இறுதி ஊர்வலத்தில் செல்வோர் இரண்டாம் கலிமாவும்,

இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்[36] என்றும் கூறிச் செல்வர் (து.மு., ப.164).

மையத்தின் தலை வடக்கேயும் கால்கள் தெற்கேயும் குழிக்குள் மையத்தை வைத்து, தலையைக் கிப்லாவை (மேற்கு) நோக்கிச் சற்றுச் சரித்து வைப்பர். பின்னர், மையத்தின் மீதுள்ள மூன்று கட்டுகளையும் அவிழ்த்து விடுவர். பின்னர் மண்ணிட்டு மூடி ஓர் அடம்பாவள்ளிச் செடியைக் குழியின் மேல் நட்டுத் தண்ணீர் தெளிப்பர் (து.மு., ப.230). தமிழகம், இலங்கை முழுவதும் மரணச்சடங்குகளில் பல பொதுத் தன்மைகளே காணப்படுகின்றன.

ஜனாஸாவை அடக்கஞ் செய்த தினத்திலிருந்து காலை, மாலை எல்லா நேரமும் குர்ஆனின் இதயம் எனப்படும் அத்தியாயமான யாஸீன் சூராவை ஓதுதல், திக்ரு எனப்படும் இறைநாமங்களை உச்சரித்தல், குர்ஆன் ஓதுதல் ஆகியன 40 நாட்கள் நடைபெறும். இறந்தவரின் பெயரால் மூன்று, ஏழு, பதினைந்து என நாட்கள் கணக்கிட்டுப் பாத்திஹா ஓதி அன்னதானம் கொடுக்கும் வழக்கம் இலங்கையில் சில பகுதிகளில் உள்ளது. தமிழகத்திலும் 'மூணாம் நாள் பாத்திஹா' என்பது பல இடங்களில் விருந்துடன் நடைபெறுகிறது. நாற்பதாம் நாளில் இறந்தவரின் பேரில் ஓதப்பட்ட குர்ஆனை நிறைவு செய்து இறந்தவரின் பேரில் அர்ப்பணிக்கும் 'தமாம் செய்தல்' எனும் நிகழ்ச்சி சிறப்பாக நடத்தப்படும். இதனைக் 'கத்தம் ஓதுதல்' என்பர் (அ.உ., ப.76). நாற்பதாம் நாள், ஒரு வருட நிறைவு நாள் ஆகியவற்றை முறையாக நடத்துதல் தமிழகம் இலங்கையில் இன்றும் பெருவழக்காக உள்ளது.

நஜாத் கொள்கையாளர்களின் குடும்பங்களில் இறப்பு, தொடர்பான பல சம்பிரதாயங்கள் நிறுத்தப்பட்டு விட்டதைக் காணலாம். திருமணம், பூப்பு சடங்குகளில் உள்ளன போன்ற பிற சமயத்தாரின் தாக்கம் எதுவும் தமிழ் முஸ்லிம்களின் இறப்புச் சடங்கில் இல்லாதது குறிப்பிடத்தக்கதாகும்.

வாழ்வியல் சடங்குகள் தொடர்பாக இதுவரை ஆராயப்பட்டவற்றுள் பல சடங்குகள் தமிழ்ச் சமூகத்தின், குறிப்பாக இந்துக்களின் தாக்கத்தால் முஸ்லிம்கள் பெற்றவையாகும். தாலி கட்டுதல், மங்கலத்தின் பொருட்டுக் குத்து விளக்கேற்றல், நிறைகுடம் வைத்தல், பந்தல் அல்லது தலைவாசல்களில் வாழைமரம் வைத்தல், ஆரத்தி எடுத்தல், வெற்றிலைப் பாக்கு பரிமாறல், பூமாலை அணிதல் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

முந்தைய காலங்களில் இலங்கைத் தமிழ் முஸ்லிம்களிடம் இவ்வழக்கங்கள் அதிகம் காணப்பட்டன. இவை இந்துக்களின் நேரடிச் செல்வாக்கினால் ஏற்பட்டதெனக் கருதமுடியவில்லை. மாறாகத் தென்னிந்தியத் தமிழர் கலாச்சாரம் தென்னிந்திய முஸ்லிம்களின் ஊடாகவே இங்கு ஊடுருவி இருக்குமெனக் கருத இடமுண்டு என்று ஜவாத் மரைக்கார் குறிப்பிடுகிறார்.[37] ஆனால் தமிழகத்தில் உள்ள முஸ்லிம்களிடம் இந்துப் பெருமக்களின் பல சடங்குகள் பெருகியதற்கு அவர்களோடுள்ள நேரடிக் கலத்தல் சூழலே காரணம் எனலாம். இலங்கை மட்டக்களப்புப் பகுதி முஸ்லிம்களிடமுள்ள திருமணப் பழக்க வழக்கங்கள் பல அப்பகுதி முக்குவர்களின் தாக்கத்தால் பெற்றவை என்று சி.மௌனகுரு குறிப்பிடுகிறார்.[38]

இங்கு ஆராயப்பட்ட வாழ்வியல் சடங்குகளில் பெரும்பாலானவை இன்று வழக்கிழந்துள்ளன. வாழ்வியல் சம்பிரதாயங்கள் நிலையானவை அல்ல. அரசியல், பொருளாதாரம், கல்வியறிவு போன்றவை மாறும்போது சமூகத்தின் வாழ்வியல் மாற்றமடைகிறது. இதனால் பண்பாட்டு மாற்றங்களும் நிகழ்கின்றன. ஒரு காலத்தில் அவசியம் என்று தூக்கிப் பிடிக்கப்பட்ட பண்பாட்டுக் கூறொன்று காலப்போக்கில் அவசியம் அற்றதாக வழக்கிழந்து போகலாம். வாழும் வட்டாரத் தாக்கத்தால் இன்றியமையாத மார்க்கக் கிரியைகளாக நினைத்து நிறைவேற்றப்பட்ட பல சடங்குகள் இன்று மூட நம்பிக்கைகளாகக் கருதித் தூக்கி எறியப்பட்டுள்ளன. இதற்குச் சமயத் தெளிவு முக்கியக் காரணமாக இருந்தாலும் சமூகத்தின் ஏதாவதொரு தேவையை நிறைவு செய்யாத கலாச்சாரக் கூறொன்று கால வெள்ளத்திற்கு ஒரு போதும் தாக்குப் பிடிக்காது என்ற யதார்த்தமும் காரணமாகும்.

இன்றும் கூட, சமயம் சாராத பல சடங்குகள் சமூகத்தில் ஒட்டிக் கொண்டிருக்கக் காரணம் அவை சமூகத்திற்கு ஏதோ ஒரு விதத்தில் பயனளிக்கின்றமையால்தான். அவற்றை நாம் சமயமாக அன்றிக் கலாச்சாரமாக ஏற்றுக் கொள்வதில் தவறில்லை. ஏனெனில் அத்தகைய சடங்குகள் ஆத்மீக ரீதியில் பயன்தராமல் போனாலும் இலௌகீக மட்டத்திலாவது உபயோகமாக இருக்கின்றன. இந்த அடிப்படையில் தமிழ் முஸ்லிம்களின் வட்டாரம் சார்ந்த சம்பிரதாயங்கள் இஸ்லாத்தின் வழிகாட்டலாலும், கல்வியறிவு - நவீன சிந்தனை என்பனவற்றின் செம்மைப் படுத்தலாலும் சீர்பெற்று வந்துள்ளன எனலாம்.

# நவீனத்துவங்களுக்கான வரவேற்பு

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் முஸ்லிம்கள் கல்வியில் மிகப் பின்தங்கி இருந்தனர். இதற்குக் காரணம் கூறும் ஆங்கில அரசின் அறிக்கை ஒன்று "முஸ்லிம்களின் ஏழ்மைநிலை கல்வியின்பால் அவர்களை ஈர்க்கவில்லை. மேலும் வசதி படைத்த முஸ்லிம்கள் வியாபாரிகளாக இருந்ததால், அப்போதைய கல்வி முறை தங்கள் வியாபாரத்திற்குப் பயன்படாது என்றும் கருதியதால் அவர்கள் கல்வியின்பால் ஈர்க்கப்படவில்லை" என்று கூறுகிறது.[39] ஆனால் மிக முக்கியக் காரணம் இஸ்லாமியச் சமயத்தையும், சமயக் கலாச்சாரம் மற்றும் பண்பாட்டையும் தக்க வைத்துக் கொள்ள வேண்டும் என்ற முஸ்லிம்களின் அதீத ஆர்வமே ஆகும்.

"உலகில் இஸ்லாம் சமயத்தை இங்கிலாந்தினது கொள்கை அழித்து விடும் என்பதால் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இஸ்லாமியர் ஆங்கிலேயரை வெறுத்தனர்" என்று கே.எம்.பணிக்கர் குறிப்பிடுகிறார்.[40] பிரிட்டீஷார் இந்தியாவை ஆண்ட காலத்தில் ஆங்கிலேயரின் மொழி, கலாச்சாரம், சமயம் ஆகியவை தங்கள் சமயக் கலாச்சாரத்தை அழித்து விடும் என்று முஸ்லிம்கள் அஞ்சினர். கிறிஸ்தவ சமயம் பிரிட்டீஸ் அரசின் ஆதரவுடன் இந்தியாவில் பரவிக் கொண்டிருந்ததால் ஆங்கில மொழி, கலாச்சாரத்தை ஏற்பது மதமாற்றத்துக்கு வழிவகுத்துவிடும் என்ற அச்சத்தில் அவற்றை இந்திய முஸ்லிம்கள் புறக்கணித்தனர்.

இதற்கு மற்றொரு முக்கியக் காரணம் முஸ்லிம் ஆட்சியாளர்களின் அரசுகளை அகற்றி விட்டுத்தான் ஆங்கிலேயர்கள் இந்திய மண்ணில் தங்கள் அதிகாரத்தைத் துவக்கினர். இதனால் இயல்பாகவே பிரிட்டீஸார் மீது இந்தய முஸ்லிம்கள் வெறுப்புக் கொண்டிருந்தனர். 1857-இல் நடந்த 'சிப்பாய்க் கலகத்தில் முஸ்லிம்கள்' பெரும்பங்கு வகித்தனர். இதனால் வட இந்திய முஸ்லிம்கள் மிகப்பெரும் அடக்கு முறைகளுக்கு ஆளாயினர். திட்டமிட்டு முஸ்லிம்களின் பெரும்பகுதியினர் பொருளாதாரத்தில் நலிந்தவர்களாக, சாலையோரக் கூலித் தொழிலாளர்களாக இன்றும் உள்ளனர். "1857-இல் டில்லியில் இருந்து விரட்டப்பட்ட முஸ்லிம்கள் 1859-வரை டில்லியில் நுழைய

அனுமதிக்கப்படவில்லை. சிப்பாய்க் கலகத்திற்கு உதவினர் என்ற குற்றத்திற்காக அவர்களின் அசையாச் சொத்தில் 35 சதவிகிதத்தைத் தண்டமாக அபகரித்துக் கொண்டுதான் டில்லியில் நுழைய முஸ்லிம்களைப் பிரிட்டீஷ் அரசு அனுமதித்தது."[41]

இதுபோன்று கேரளாவில் நடந்த முஸ்லிம் 'மாப்பிள்ளைமார் புரட்சி' முதலில் நில முதலாளிகளுக்கு எதிரான விவசாயக் கூலித் தொழிலாளர்களின் போராட்டமாக ஆரம்பித்துப் பின்னர் நில முதலாளிகளின் ஆதரவாளர்களான பிரிட்டீஷாருக்கு எதிரான கிளர்ச்சியாகத் திரும்பியது. "கிலாபத் இயக்கத்தின் எழுச்சியில் நிகழ்ந்த இக்கிளர்ச்சியின் போது பொக்காத்தூரில் 600 முஸ்லிம்களும், பட்டாம்பியில் 500 முஸ்லிம்களும் கொல்லப்பட்டனர். கைது செய்யப்பட்டுத் திருச்சூரில் இருந்து கோயம்புத்தூருக்குச் சரக்கு ரயிலின் காற்றுப் புகாத பெட்டிகளுக்குள் அடைத்துக் கொண்டு சென்ற போது மூச்சுத் திணறி இறந்த முஸ்லிம்களின் எண்ணிக்கை 55 என்று 1921 செப்டம்பர் 1-ல் வெளியான 'தி இண்டிபெண்டன்ட்' பத்திரிக்கை கூறியது."[42]

ஏற்கெனவே முஸ்லிம் ஆட்சியாளர்களின் அரசிழப்பால் பிரிட்டீஷாருக்கு எதிரான உணர்வுகளைக் கொண்டிருந்த இந்திய முஸ்லிம்களுக்குச் சிப்பாய்க் கலகமும், மாப்பிள்ளைமார் புரட்சியும் பிரிட்டிஷார் மீது மேலும் வெறுப்புணர்ச்சியை வளர்த்து விட்டன இதனால் பிரிட்டீஷார் மீது எதிர்ப்பு என்பது அவர்களின் மொழி, கலாச்சாராம், சமயத்தின் மீதான எதிர்ப்பாக மாறியது.

இது போன்ற காரணங்களால் இந்திய முஸ்லிம்கள் ஆங்கிலக்கல்வியையும், பிரிட்டீஷ் அரசாங்கத்தால் அளிக்கப்பட்ட கல்வியையும், மிஷனரிப் பள்ளிகள் வழங்கிய கல்வியையும் புறக்கணித்தனர். இதன் காரணமாகப் பல்துறை சார்ந்த நவீனக் கல்வியைப் பெறத் தவறினர். சர்.சையத் அஹமத்கான் போன்றோர் நவீனக் கல்வியை முஸ்லிம்கள் பெற ஆங்கிலக் கல்வியை வலியுறுத்தினர். பல எதிர்ப்புகளுக்கும் ஆளாயினர். இத்தகு எதிர்ப்புகளை மீறி அவர் அலிகர் முஸ்லிம் பல்கலைக் கழகத்தை ஆரம்பித்து அதன் மூலம் ஏற்பட்ட பலனைக் கண்ட பின்னரே இந்திய முஸ்லிம்களிடம் மனமாற்றம் ஏற்பட்டது. ஆனால் தெற்கில் இத்தகைய முயற்சியை யாரும் எடுக்காத காரணத்தினால் இந்தியச் சுதந்திரத்திற்குப். பின்னரும் கூட ஆங்கிலக் கல்வியைப் புறக்கணிக்கும் நிலை தொடர்ந்தது.

இருபதாம் நூற்றாண்டின் முதல் பாதியைப் பின்புலமாகக் கொண்டு எழுதப்பட்ட தோப்பில் முகம்மது மீரானின் ஒரு கடலோர கிராமத்தின் கதை, துறைமுகம் ஆகிய நாவல்களில் இந்நிலை சித்திரிக்கப்பட்டுள்ளது. ஆங்கிலமொழி, கலாச்சாரத்தின் மீதுள்ள வெறுப்பு எவ்வாறு சமயச்சார்புடன் பார்க்கப்பட்டது என்பதை இந்நாவல்கள் சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளன. இஸ்லாமியருக்கு அனுமதிக்குரியவை ஹலால் என்றும், விலக்கப்பட்டவை ஹராம் என்றும் மார்க்கம் வரையறுத்துள்ளது. ஆங்கிலக்கல்வி, கலாச்சாரத்தையும் இவ்வரையறைப்படி ஹராம் என்று ஒதுக்கியுள்ளனர். இதனை முன்மொழிந்து வலியுறுத்தியவர்கள் மார்க்க அறிஞர்கள் என்பதால் மக்கள் அதனைச் சமய நம்பிக்கையாகக் கொண்டனர். என்றாலும் இந்நம்பிக்கை தவறானது என்ற வலியுறுத்தலைப் பிரதானப் பாத்திரங்கள் வாயிலாகவும் கதை நிகழ்வுகள் மூலமும் படைப்பாளி தந்துள்ளார்.

சமய நம்பிக்கை சார்ந்ததாகக் கருதப்பட்ட ஆங்கில மொழி எதிர்ப்பு மற்றும் கலாச்சார எதிர்ப்புகளையும் விளைவுகளையும் பின்வருமாறு காணலாம்.

1. ஆங்கிலக் கல்வி மீதான எதிர்ப்புணர்வு
2. கல்வியறிவின்மையின் விளைவுகள்
3. ஆங்கிலக் கலாச்சாரத்தின் மீதான வெறுப்புணர்வு

## ஆங்கிலக் கல்வி மீதான எதிர்ப்புணர்வு

"நபியே ஒவ்வொரு தூதரும் (தன் மக்களுக்கு) தெளிவாக விவரித்துக் கூறும் பொருட்டு அவர்களுடைய மொழியைக் கொண்டே போதனை புரியுமாறு நாம் அவர்களை அனுப்பி வைத்தோம்" (14:4) என்ற திருக்குர்ஆனின் வசனம், அனைத்து மொழிகளும் சம மதிப்புடன் பார்க்கப்பட வேண்டியன என்பதையும், அனைத்து மொழிகளைப் பேசும் மக்களும் சம மதிப்புடையவர்களே என்பதையும் உறுதி செய்கிறது. அக்கால அரபு சமூக மக்கள், அரபி அல்லாத பிற மொழிகளைப் பேசுபவர்களை அஜமி (ஊமை) என்றனர். அந்த அளவிற்கு மொழியின் காரணமாகத் தங்களை உயர்வாகக் கருதினர். அப்போதுதான் அரபி அஜமியை விட உயர்ந்தவரல்ல, என்று அறிவுறுத்திய நபி (ஸல்), மொழியின் காரணமாக அரேபியர்களிடம் இருந்து வந்த கர்வத்தை மாற்றினார். பிறமொழிகளைக் கற்றுக் கொள்ளுமாறு தனது தோழர்களை ஆர்வப்படுத்தினார்.

உரோமாபுரிக்கு இஸ்லாமிய அழைப்பு விடுக்கத் தன் தோழர்களை அனுப்ப முடிவு செய்தவுடன் ஜைது இப்னு தாபித் (ரலி) அவர்களை இலத்தீன் மொழியைக் கற்றுக் கொள்ளுமாறு கட்டளையிட்டார்.[43] இஸ்லாத்தின் மொழி பற்றிய இத்தகைய அணுகுமுறைகள் எந்த மொழியும் இஸ்லாத்திற்கோ இஸ்லாமியருக்கோ எதிரானது அல்ல என்பதையும் எந்த மொழி வாயிலாகவும் அறிவைப் பெறலாம் என்பதையும் தெளிவுபடுத்துகிறது.

"ஆங்கில அரசு பார்ஸி, அரபி மொழிகளைப் பள்ளிக் கூடத்திலிருந்து எடுத்ததை முஸ்லிம்கள் தங்களுக்கு ஆங்கிலேயர்கள் செய்த மிகப்பெரிய துரோகமாகக் கருதினர். மேலும் இஸ்லாமியரின் சமய ஈடுபாட்டை இல்லாமலாக்கும் வகையில் ஆங்கிலேயர்கள் அறிமுகப்படுத்திய பாடத்திட்டம் உள்ளது என்ற பிரச்சாரமும் ஆங்கிலக் கல்வி மீது இஸ்லாமியரை வெறுப்புக் கொள்ளச் செய்தது" என்பர்.[43] இக்காரணம் வட இந்தியாவுக்குப் பொருந்தும். ஆனால் தென்னிந்தியாவிலும் இலங்கையிலும் முஸ்லிம்கள் ஆங்கிலக் கல்வியை ஒதுக்கியதற்கு முதன்மைக் காரணம் இஸ்லாமியச் சமய, கலாச்சார அழிவு, மதமாற்றம்பற்றிய அச்சமே.

இந்திய, இலங்கை நாடுகளில் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் கிறிஸ்தவ மிஷனரிகளே பள்ளிக்கூடங்களைப் பெரும்பாலும் நடத்தினர். அப்பள்ளிகளுக்குத் தங்கள் பிள்ளைகளை அனுப்பினால் முஸ்லிம்களின் சமயக் கலாச்சாரம் அழிந்து விடும் என்றும், மதமாற்றம் நிகழ்ந்து விடும் என்றும் அஞ்சினர். தாய் மொழியின் மூலம்தான் தம்முடைய கிறிஸ்தவ மதத்தைப் பரப்ப முடியும் என்ற எண்ணத்தில் கிறிஸ்தவ மிஷனரி சபைகள் சிங்கள தமிழ்ப் பாடசாலைகளை நிறுவின. பிறசமயத்தார் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவி ஆங்கிலக் கல்வி கற்று அரசாங்கத்தில் பதவிகளைப் பெற்ற சமயத்தில் முஸ்லிம்கள் தமது மதத்தில் தமக்கிருந்த நம்பிக்கை காரணமாக ஆங்கிலக் கல்வியை ஒதுக்கியே வாழ்ந்தனர் என்று இலங்கை வரலாற்றறிஞர் முகம்மது சமீம் குறிப்பிடுகிறார்.[44] ஆங்கில அரசிலும் மிஷனரிப் பள்ளிகள் நிறுவனங்களிலும் வேலைவாய்ப்புப் பெறுவதற்காகவே பலர் கிறிஸ்தவ சமயத்திற்கு மாறினர். கிறிஸ்தவ மிஷனரிப் பள்ளிச் சூழல்கள் அத்தகைய மனமாற்றத்தை ஏற்படுத்தின என்று இலங்கைச் சமூக ஆய்வாளர் எஸ்.ஹெச்.எம். ஜெமில் குறிப்பிடுகிறார்.[45]

"வெள்ளைக்காரப் பாதிரிமார் பொறுப்பாக இருந்த பாடசாலைகளில் மதமாற்றம் நடைபெறுமென்ற பயத்தில், அதனைச் சார்ந்தவர்கள் பொதுவாகப் பாடசாலைக்குச்

செல்வதைப் பெரிதும் வெறுத்தனர்" (கா.எ.நி., ப.8) என்று இலங்கைச் சூழலில் முஸ்லிம்கள் ஆரம்பத்தில் கல்வி கற்காமைக்குரிய காரணத்தை ஜுனைதா ஷெரீப் சித்திரித்துள்ளார்.

இத்தகைய சூழல் தென் தமிழகக் கடற்கரைப் பகுதிகளிலும் பிரதிபலித்ததால், ஆங்கில மொழியைக் கிறிஸ்துவர்களின் மொழியாகவே முஸ்லிம்கள் கருதினர். அதனால் ஆங்கில மொழியை 'நஸ்ரானிகளின் (கிறிஸ்தவர்கள்) மொழி' (து.மு., ப.86) என்று வழங்கினர். 'அரபி அல்லாக்க பாசெ, இங்கிலீசு நஸ்ரானிக்க பாசெ' (து.மு., ப91) என்று நம்பினர். 'ஆங்கில மொழியைப் படித்துத் தீனுல் இஸ்லாத்தை மறந்து கொண்டு திரிகின்றனர். நஸ்ரானிகளின் மொழி உண்மை முஸ்லிம்களுக்கு விலக்கப்பட்டதாச்சே! மக்கள் செய்யும் இக்குற்றங்களுக்குத் தாய் தந்தையரை இறைவன் தண்டிப்பான்! காலு ஸுராயும் போட்டுத் தலையில் கிராப்பும் வைத்து வாயில் நஸ்ரானி மொழியும் கொண்டு நடப்பவர்களே! உங்களுக்கு நரகம்தான்! அல்லாஹ் உங்களை நரகத்தில் போட்டுத் தீ தின்ன வைப்பான்!' (ப.86) என்ற மார்க்க அறிஞரின் உரையின் மூலம், எந்த அளவிற்கு இஸ்லாமிய நம்பிக்கைக்கு எதிரானதாக ஆங்கிலக் கல்வி கருதப்பட்டது என்பதைத் 'துறைமுகம்' நாவல் உணர்த்துகிறது.

ஆங்கிலம் கற்பிக்கும் சூழல் உருவாவது 'உலக முடிவு நாளின் அறிகுறி' (ஒ.க.கி.க., ப9) என்று மக்கள் நம்பும் அளவிற்கு இந்த எதிர்ச்சிந்தனை வளர்ந்திருந்தது. சமயத்தின் தனித்தன்மையைக் காக்கும் அதீத உணர்வில் இந்த எதிர்ச்சிந்தனை மார்க்க அறிஞர்களால் வளர்க்கப்பட்டிருந்தது என்பதை உணரலாம். ஆங்கிலம் கற்பது மார்க்கத்திற்கு எதிரானது, மார்க்கத்தை அழிக்கக் கூடியது. எனவே மார்க்கத்தை அழிக்கும் இந்தச் சக்திக்கு எதிராகப் போராடுவது ஜிஹாத் (புனிதப்போர்) என்றனர். மார்க்கத்தைக் காக்கப் புனிதப்போரில் ஈடுபட்டு உயிர்த்தியாகம் புரிந்தோருக்கு (ஷஹீத்) சுவனம் கூலியாக வழங்கப்படும் என்பது சமய நம்பிக்கை. இந்த அடிப்படையில் 'ஆங்கிலம் கற்பிப்பவனைக் கொன்றால் ஷஹீதுக்க கூலி கிடைக்கும்' (ஒ.க.கி.க., ப9) என்ற அளவிற்கு மார்க்க அறிஞர்கள் நம்பிக்கை ஏற்படுத்தியிருந்தனர்.

இவ்வாறு சமய நம்பிக்கைக்கு எதிரானது என்று மார்க்க அறிஞர்களால் ஊட்டப்பட்ட ஆங்கிலக் கல்வி எதிர்ப்பானது மக்களிடம் இருந்த அறியாமை காரணமாக மிகப்பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியிருந்தது. இங்கிலிஸ் வாத்தியார் தனது இல்லத்தில் வந்தமர்ந்த பெஞ்சை ஏழு வாளி தண்ணி ஊற்றி, கலிமா

(இறைநம்பிக்கையை முன்மொழியும் வாசகங்கள்) சொல்லிக் கழுவுவதற்கு முதலாளி கட்டளையிடுகிறார் (ஒ.க.கி.க., ப.166). தங்கள் பள்ளிக்கு வந்த ஆண்களும் பெண்களும் ஆங்கிலப் பள்ளிக்கூடம் இடிந்து விழத் தங்களை வேண்டிக் கொண்டனர். உண்டியலில் தனியாக அதற்கெனக் காணிக்கை இட்டார்கள் (ஒ.க.கி.க., ப.233) என்று அவ்வறியாமையைப் படைப்பாளி புலப்படுத்துகிறார். 'தங்களின் துஆ பரக்கத்து (பிரார்த்தனை அருள்) கொண்டு நாய்க்க மோனுக்கோ இங்கிலீஸ் பள்ளிக் கொடத்தே ஒடச்சசுத்தாறேன்! (ஒ.க.கி.க., ப.233) என்று அசனார் லெப்பை ஆறுதல் சொல்வது அந்நம்பிக்கைக்கு உரம் சேர்க்கிறது.

தன்னை எதிர்த்த ஒரு சாதாரணத் தொழிலாளி மஹ்மூது வழங்கிய நிலத்தில் கட்டப்பட்ட காரணத்தினால், எழுந்து நிற்கும் பள்ளிக்கூடக் கட்டடம் தன் முதலாளித்துவ அந்தஸ்திற்கு விடப்பட்ட சவாலாக அஹமது கண்ணு முதலாளி கருதுகிறார். தனக்குப் பிடிக்காத எதுவும் ஊரில் இருக்கக் கூடாது என்று அப்பள்ளிக்கூடத்திற்கு ஓர் இரவில் தீ வைத்து விடுகிறார். பள்ளிக்கூடம் எரிந்து சாம்பலானதற்குரிய காரணம் கூட, சமய நம்பிக்கை அடிப்படையில் பேசப்படுகிறது. 'படைச்சவனுக்கெ கோபம், மூணாம் வேதக்காரனுக்கொ (பைபிளை வேதமாகக் கொண்டவர்கள்) மந்திரொம் தந்திரொம் இந்த ஊரிலெ விலே போகாது. ஜின்கள் (ஆவிகள்) ஜஹன்னத்தில் (நரகத்தில்) இருந்து தீ கொண்டு வந்தாக்கும் பத்த வச்சது' (ஒ.க.கி.க., ப.240) என்று மக்களின் அறியாமையின் மீது தவறான நம்பிக்கைகளை அசனால் லெப்பை போன்றோர் ஏற்படுத்துகின்றனர்.

இவ்வாறு சமயத்திற்கு எதிரானது என்று ஆழமாக நம்பிக்கை ஏற்படுத்தப்பட்ட ஆங்கிலக் கல்விக்கு ஆதரவான குரல் சமுதாயத்திற்குள்ளிருந்தே எழுகிறது. மார்க்க அறிஞர்களின் அறியாமையும் போதிய மார்க்க அறிவின்மையும்தான் நவீனக்கல்வியை மக்கள் பெறாமைக்குரிய காரணம் என்று தோப்பில் முகம்மது மீரான் பாத்திரங்களின் உரையாடல் வாயிலாகக் கூறுகிறார்.

'அலிகர் பல்கலைக் கழகம்' நிறுவிய சர். சையது அஹமது கானுக்கு காபிர் (இறை மறுப்பாளர்) பட்டம் வழங்கினர். கிராப்பும் வைத்து ஆங்கிலமும் படித்த முகமதலி ஜின்னாவைக் காபிர் என்று கூப்பிட்டனர். ஆங்கிலம் படிக்கக் கூடாதென்று நாட்டுப்பற்றுடைய அன்றைய மத அறிஞர்கள் தடை செய்தனர். அப்படித் தடை செய்ததன் உட்பொருள் இந்த மௌலவிகளுக்குத் தெரியுமா?

இவர்களின் பலவீனமான சொற்பொழிவு சமுதாயத்தைக் கல்வித் துறையில் பின்னடைந்த நிலையில் தள்ளிவிட்டது (து.மு., ப.92) என்று கல்வியில் சமுதாயத்தின் பின்னடைவிற்கு மார்க்க அறிஞர்களின் பிற்போக்குத்தனமே காரணம் என்று பாத்திரங்கள் வாயிலாகக் கதாசிரியர் விமர்சித்துள்ளார்.

'இந்திய சுதந்திரத்துக்காகப் போராடிய மௌலானா முகம்மது அலி ஆங்கிலம் படித்தவர், அவருக்கு நரகமா? குர்ஆனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த பிக்தாலுக்கும் யூசுப் அலிக்கும் நரகமா கிடைக்கும்?' (து.மு., ப92) என்ற அறிவார்ந்த கேள்வியைப் படித்த இளைஞன் காசீம் மூலம் எழுப்புகிறார். எந்த மொழி வாயிலாகவும் கல்வி கற்க இஸ்லாத்தில் தடை இல்லை என்பதை 'சீனாப் போயும் இல்மு (கல்வி) படிக்க ரசூலுல்லா (இறைத்தூதர்) சொன்னாங்கோ' (ஒ.க.கி.க., ப.113) என்ற நபி (ஸல்) வாக்கைப் படிக்காத மஹ்மூது மூலம் அழுத்தமாகக் கூறியுள்ளார். இதன் மூலம் நவீனக் கல்விக்கான முயற்சி சமுதாயத்தில் முளையிட ஆரம்பித்ததைச் சித்திரப்படுத்தியுள்ளார்.

எல்லாவற்றிற்கும் மேலாகச் சமயச்சார்பில் அழுத்தமாகப் பதிக்கப்பட்ட நம்பிக்கை, மார்க்க அறிஞர்கள் - ஊர் நிர்வாகம் - முதலாளித்துவ எதிர்ப்பு, மக்களின் எதிர்ப்பு அனைத்தையும் மீறித் தனது மகன்களைப் பள்ளிக் கூடங்களுக்கு அனுப்பும் மஹ்மூதை ஒரு கடலோர கிராமத்தின் கதையிலும், மீரான் பிள்ளையைத் துறைமுகத்திலும் படைத்துக் காட்டி ஒரு சமூக மாற்றத்திற்கான அறிகுறியைத் தோப்பில் வெளிப்படுத்தியுள்ளார்.

### கல்வி அறிவின்மையின் விளைவுகள்

கல்வி அறிவின்மையின் காரணமாக மக்கள் மத்தியில் இருந்த அறியாமையையும் அதனால் நவீனத் தேவைகளை அவர்கள் ஏற்க மறுத்ததையும் நாவல் வெளிப்பாடுகளால் அறியலாம். கல்வி அறிவின்மையின் காரணமாக வியாபார முதலாளிகளை நம்பிச் சம்பா (நெத்தில்கருவாடு) ஏற்றுமதி செய்து பல சிறு வியாபாரிகள் ஏமாறுகின்றனர். பலர் தங்கள் சொத்துகளை இழந்து விரக்தியின், அவலத்தின் விளிம்பிற்குச் செல்கின்றனர் (து.மு., ப.54). கல்வி அறிவின்மையின் காரணமாகப் பொருளாதாரச் சுரண்டலுக்கு ஒரு சமூகம் எப்படி ஆளானது என்பதே துறைமுகம் நாவலின் பிரதான ஓட்டமாக அமைந்துள்ளது.

பேப்பர் படித்தால் முஸ்லிம்கள் வழிதவறி விடுவார்கள் என்று மார்க்க அறிஞர்கள் பிரசங்கம் செய்த காரணத்தினால்

அப்பாவி மக்களுக்கு நாட்டு நடப்பும் நவீனத்துவமும் எட்டாமல் போனது (து.மு., ப.106). முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் வரை தமிழகத்திலுள்ள அரபுக் கல்லூரிகளில் மாணவர்கள் பேப்பர் படிப்பதைத் தடை செய்திருந்தனர். எந்த மாணவராவது இரகசியமாகப் பேப்பர் படித்தால், அவர் முழந்தாளிட்டுப் பாடம் கேட்க வேண்டும் என்று தண்டனை விதித்ததை மூத்த மார்க்க அறிஞர்கள் இன்றும் சுட்டிக்காட்டுகின்றனர். இஸ்லாமியக் கலாச்சாரம்-பண்பாடு சிதைந்து விடக்கூடாது என்ற அச்சமே இதற்குக் காரணமாகும்.

நவீன மருத்துவத்தைக் கூட, கல்வி அறிவின்மையின் காரணமாக மறுத்துள்ளனர். காலரா நோய் பரவி ஊரில் பல உயிரிழப்புகள் ஏற்பட்ட பின்னும் தடுப்பூசி போட மறுக்கின்றனர். 'காபிரான ஒருத்தென எங்கிருந்தோ கூப்பிட்டு வந்திருக்கான். ஈமானும் இஸ்லாமும் உள்ள பொம்புளியளுக்கு கையெப் புடிச்சு ஊசிகுத்த' (து.மு., ப.236) என்று ஆண் மருத்துவர் ஒரு பெண்ணின் கையைத் தொட்டு ஊசி போடுவதைக் கூட, சமயக் கட்டுப்பாட்டிற்கு எதிரானதாகக் கருதி இறுக்கமாக வாழ்ந்துள்ளனர்.

காஃபிர் என்றால் ஓர் இறைக் கோட்பாட்டை நிராகரிப்பவர் என்று பொருள். ஒரு முஸ்லிம் ஏக இறைவனுக்கு இணை வைத்து வணங்கினால் அவனும் காஃபிரே! ஆனால் முஸ்லிம் அல்லாதவர்கள் அனைவரையும் குறிக்க வெறுப்புக் கலந்த தொனியில் பயன்படுத்தும் வார்த்தையாக இச்சொல் அன்று இருந்துள்ளது. இன்றும் அவ்வாறே பயன்பாட்டில் இருப்பது மார்க்க அறிவின்மையைக் காட்டுவதாகவே உள்ளது.

## ஆங்கிலக் கலாச்சாரத்தின் மீதான வெறுப்புணர்வு

ஆங்கிலேயர்கள் மீதும் அவர்களின் சமயத்தின் மீதும் ஏற்பட்ட வெறுப்பு, அவர்களது கலாச்சாரங்களையும் புறக்கணிக்கும்படி முஸ்லிம்களைத் தூண்டியது. நிக்கர், பேன்ட்ஸ் அணிவதும், முடியைக் கிராப்பு வெட்டிக் கொள்வதும் பிரிட்டீஷ்காரர்கள் மூலம் அறிமுகமான காரணத்தினால் அவற்றை ஆங்கிலக் கலாச்சாரமாகத் தமிழ் முஸ்லிம்கள் கருதினர். முந்தைய காலங்களில் மொட்டையடிப்பதும் லுங்கி கட்டிக் கொள்வதும் இஸ்லாமியர்களின் கலாச்சாரமாக இருந்தது. தமிழகத்தின் தென்பகுதிகளில் குறிப்பாகக் கேரளாவை ஒட்டிய தென்மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் இக்கலாச்சாரம் பெரிதும் பேணப்பட்டது. எனவே, இப்பகுதிகளில் முடி வைத்துக் கொள்வதும், கிராப்பு

வெட்டிக் கொள்வதும், நீக்கர், பேன்ட்ஸ் அணிவதும் முஸ்லிம்களால் தவிர்க்கப்பட்டது. இஸ்லாமியக் கலாச்சாரத்திற்கு எதிராகவும், இஸ்லாமியக் கலாச்சாரத்தைச் சீரழிக்க வந்த புதிய கலாச்சாரமாகவும் கருதப்பட்டது.

'தீனுல் இஸ்லாத்துக்க சின்னம் மொட்டை' (து.மு., ப.72) என்று தங்கள் பாரம்பரிய வழக்கத்தை மார்க்க அடையாளமாகக் கருதினர். நிக்கர் போடுதல், கிராப்பு வெட்டல், கியாமத் (உலக முடிவு) நாளின் அடையாளம் (ஓ.க.கி.க., ப.220) என்று கருதினர். இவை காபிர்களின் கலாச்சாரம் எனவே '...காலு ஸுராயும் போட்டுத் தலையில் கிராப்பும் வைத்து நடப்பவர்களே உங்களுக்கு நரகம்தான்! (து.மு., ப.86) என்று மார்க்க அறிஞர்கள் எச்சரித்தனர். எச்சரித்ததோடு நில்லாமல் கிராப்பு வைப்பவர்களுக்கு நரகத்தில் கொடுக்கப்படும் தண்டனையையும் அவர்களே கற்பனையில் தீர்மானித்து மக்களை நம்ப வைத்தனர். '...கிராப்புத் தலையிலுள்ள ஒவ்வொரு ரோமத்தையும் தீக்கங்கு தின்னும் கடும் விஷமுள்ள பாம்புகளைக் கொண்டு இறைவன் பிடுங்கி எடுப்பான்...' (து.மு., ப.86).

இவ்வாறு புறவயனமா கலாச்சாரங்களைக் கூடச் சமயச் சார்போடு பார்த்த மக்களின் நம்பிக்கையை வலுப்படுத்தும் விதத்தில் மார்க்க அறிஞர்களின் பேச்சுகள் அமைந்ததோடு, ஜமாஅத் எனும் ஊர்ச்சபையும் இந்நம்பிக்கையை வளர்க்கும் நடவடிக்கைகளில் ஈடுபட்டது. கிராப்பு வைப்பவர்களுக்கு ஊர்ச்சபை தண்டனை வழங்கியது. கிராப்பு வைப்பவர்கள் தாமாக மொட்டை அடிக்க வேண்டும். இல்லை என்றால் அவர்களைப் பிடித்துக் கட்டி வைக்க நாலு சட்டம்பிமாரை (பலசாலிகள்) ஊர்ச்சபை ஏற்பாடு செய்திருந்தது. அவர்களுக்கு மூன்று வேளை உணவும் சம்பளமும் ஊர்ச்சபை வழங்கியது. கிராப்பு வைத்தவரைப் பிடித்த இடத்திலேயே மொட்டை அடித்துவிட ஒசா (குடிமகன்) ஏற்பாடு செய்யப்பட்டிருந்தார் (து.மு., ப.88). இவ்விசயத்தில் ஊர்ச்சபையை எதிர்க்கக் கூடியவர்களுக்கு மொட்டை அடித்து, கரும்புள்ளி செம்புள்ளி குத்தி, செரட்டை மாலை போட்டு, கழுதை மேலேற்றி ஊர் சுற்ற வேண்டும் (து.மு., ப.206). இதற்கும் கட்டுப்படாதவருடைய குடும்பத்தை ஊர் விலக்கி விடுவர். அதன்பின் அக்குடும்பத்தின் நல்லது கெட்டதில் ஊர்ச்சபையும் ஊராரும் கலந்து கொள்ளக் கூடாது (து.மு., ப.222).

இவ்வாறு கடுமையான தண்டனைக்குரிய அளவிற்குக் கிராப்பு வைத்தல் இஸ்லாத்தில் தடை செய்யப்பட்ட கலாச்சாரமா

என்றால் இல்லை. இதனை நாவல் சித்திரிப்பிலேயே ஆசிரியர் கூறுகிறார். தோளில் புரளும் முடியுடன் வந்த வெளியூர்காரர் மம்மதாஜி 'இது சுன்னத்து (நபிவழி) முடி, நபி வச்சிருந்தது போலத்தான் நான் முடி வச்சிருக்கேன். இது ஹராமில்லே' என்று பேசுகிறார். ஆனால் ஊர் வச்சதுதான் சட்டம் என்பதால் நபிவழியைப் பேணிய மம்மதாஜியின் முடியும் பறி போகிறது (து.மு., பக்.74-75). ஊர்ச்சபை வைத்ததுதான் மார்க்கச் சட்டம் என்று அக்கால மக்கள் நம்பினர். நபிவழி என்று அறிவுறுத்திய பின்னரும் தங்களுடைய மார்க்க அறிவுக் குறைவின் காரணமாக ஏற்க மறுக்கின்றனர். இந்நிலையில் முடி வைப்பது குறித்த மார்க்க விதியைத் தெளிவு படுத்த வேண்டியுள்ளது.

நபி (ஸல்) அவர்களின் தலைமுடி அவர்களுடைய தோளைத் தொட்டுக் கொண்டிருந்தது. அவர்கள் முடிக்கு நறுமணம் பூசினார்கள்.[46] நரை முடியை மருதாணியாலும் கத்ம் எனும் மூலிகைச் சாற்றாலும் அழகுபடுத்த அனுமதித்தார்கள்.[47] எனவே முடி வைத்தல், அதனை அழகுபடுத்தல் ஆகியவை இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்டவை என்பது மேற்கண்ட நபிமொழிகளால் அறியலாம். முஸ்லிம்கள் மொட்டை போடும் வழக்கம் எவ்வாறு உருவானது என்றால், ஆரம்பக்கால முஸ்லிம்கள் கடல் வர்த்தகர்களாகவும், அவ்வர்த்தகத்தில் வேலை செய்வோராகவும் இருந்தனர். கடல் பயணத்தில் பல நாட்கள் அவர்கள் இருப்பதால், கடற்காற்றில் உள்ள உப்பு கலந்த ஈரப்பதம் அவர்களது முடியில் படிந்து பாதிப்புகளை ஏற்படுத்தியது. எனவே மொட்டை போட்டுத் தலைப்பாகைக் கட்டும் வழக்கம் உடையவர்களாக இருந்தனர். இப்படி ஆரம்பக்கால முஸ்லிம்கள் கடல் பயணத்தை முன்னிட்டு உருவாக்கிய வழக்கத்தின் காரணம் தெரியாமல், மொட்டை போடுவது முஸ்லிம்களின் கலாச்சாரம் என்று நம்பினார்.

எனவே, ஆடவர் மொட்டை போடுவது தீனுல் இஸ்லாத்தின் சின்னம் என்பது தவறாகும். மார்க்க அறிவின்மை காரணமாகவும், கிராப்பு வைத்தல் ஆங்கிலக் கலாச்சாரம் என்பதால் ஆங்கிலேயர் மேலுள்ள வெறுப்பு, அவர்கள் கலாச்சாரத்தின் மீது திரும்பியதால் ஏற்பட்ட விளைவாகவும் மொட்டையடித்தல் அப்பகுதி முஸ்லிம்களின் வழக்கமாக இருந்தது எனலாம். எனினும் கிராப்பு வைப்பதற்கு எதிர்ப்பு அதிகமாக இருந்த அச்சூழலில் கிராப்பு வைப்பதை ஆதரிக்கும் குரல்கள் எழுந்ததையும், கிராப்பு வைத்துத் தைரியமாக ஊராரின் கட்டுப்பாட்டினை மீறி நடந்த காசிமையும் காணலாம் (து.மு., ப.90). இது போன்றே கால்ஸுராய்

(பேன்ட்ஸ்) அணிவது ஆங்கிலேயரின் கலாச்சாரம் என்பதால் அதனையும் அம்மக்கள் வெறுத்தனர். கால்ஸ்ராய் அணிபவர்களுக்கு நரகம்தான் (து.மு;ப.86) என்று சமயத்திற்கு எதிரான நம்பிக்கைப் பூச்சுக் கொடுத்தனர். இஸ்லாத்தில் பேன்ட்ஸ் அணிவது அனுமதிக்கப்பட்டதே. 'பர்தா' என்றால் மறைப்பு என்று பொருள். பிறருக்குச் சலனத்தை ஏற்படுத்தாதவாறு தனது உடலின் அங்கங்களைப் பிறரின் பார்வையில் இருந்து மறைத்தல் என்பது இதன் விரிவாகும். பெண்களுக்கு மட்டுமல்லாமல் ஆண்களுக்கும் பர்தாவை இஸ்லாம் கட்டாயமாக்கியுள்ளது. ஆண்கள் தங்கள் அந்தரங்கப்பகுதிகள் தெரியாவண்ணம் ஆடை அணிவதைக் கட்டாயமாகவும், தோள் முதல் கணுக்கால் வரையுள்ள பகுதிகள் மறையும்படி ஆடை அணிவதைப் பேணுதலாகவும் இஸ்லாம் வலியுறுத்திள்ளது. எனவே பேன்ட்ஸ் அணிவது இஸ்லாமிய ஆடைக் கலாச்சாரத்திற்கு உட்பட்டதே. கணுக்காலுக்குக் கீழே இறக்கித் தரையில் தவழும்படி அணியக் கூடாது. ஏனென்றால் அசுத்தம்படிய வாய்ப்பிருக்கிறது.

'பெருமைக்காகக் கணுக்காலுக்குக் கீழே இறக்கி ஆடை அணியாதீர்கள்' என்று நபி (ஸல்) அறிவுறுத்தினார். அவரது தோழர் அபூக்கரின் இடுப்பு சிறியதாய் இருத்ததால் அவரது இடுப்பில் ஆடை நிற்காமல் சற்று வழுகிக் கணுக்காலுக்குக் கீழே தொங்கும். இப்படியான சூழலில் கணுக்காலுக்குக் கீழே ஆடை தொங்குவதை நபி (ஸல்) அனுமதித்தார்.[48] சிர்வால் என்னும் முழுக்கால்சட்டை அணிவதை நபி (ஸல்) அனுமதித்தார். ஹஜ் காலங்களில் இஹ்ராம் கட்டியவர்களுக்குக் கீழங்கி கிடைக்காவிட்டாலும் முழுக்கால் சட்டை அணியலாம் என்றும் கூறியுள்ளார்.[49]

இவ்வாறு பேன்ட்ஸ் போன்ற ஆடைகளை அணிய மார்க்கம் அனுமதித்திருக்கும் போது, ஆங்கிலக் கலாச்சாரம் என்ற ஒரே காரணத்திற்காக அதனைச் சமயக் கலாச்சாரத்திற்கு எதிரானதாகக் கருதினர். ஆனால் அச்சமூகத்திலிருந்தே ஒருவர் '. . எனக்கப் புள்ள கால்சட்ட போட்டுப் பார்க்க எனக்கு ஹாஜத்துடா (ஆசை)' (ஒ.க.கி.க., ப.219) என்று பேசுவது மாறிவரும் சமூகச் சிந்தனையைக் காட்டுகிறது. இவ்வாறு எண்பதுகளில் இடம்பெற்ற இஸ்லாமியத் தமிழ் நாவல்களின் சமூக அமைப்பில் நவீனத்துவம் சார்ந்த மொழி, பண்பாடு மற்றும் பழக்க வழக்கம் நிறைந்த கருத்துகளைச் சமயச் சார்புடன் அணுகும்போது ஏற்பட்ட விளைவுகளை நாவலாசிரியர்கள் பரவலாகச் சுட்டிக் காட்டியுள்ளார்கள்.

# நல்லிணக்க வெளிப்பாடுகள்

பொருளாதாரம் வாழ்க்கையைத் தீர்மானிக்கும் முக்கியக் காரணியாகிவிட்ட நவீனக் காலத்தில் மனித உறவுகளின் இறுக்கத்தன்மை நெகிழ்வடைந்து வருகிறது. பந்தபாசம் அண்டை அயலார், உறவு, நட்பு போன்ற அன்பு, பரவலாக்கத்திற்குக் காரணமான விழுமியங்கள் குறித்து அதிகம் வலியுறுத்த வேண்டிய சூழல் உருவாகியுள்ளது. இத்தகைய நிலையில் எண்பதுகளில் வெளியான இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்களின் வட்டார வெளிப்பாடுகள் உணர்த்தும் நல்லிணக்க வெளிப்பாடுகளை அறிவது சமகால சமூக உறவு நிலைகளின் தன்மைகளை அளவீடு செய்யவும், இன்றைய குடும்ப - சமூக - சகசமயத்தார் உறவுகளை வளர்த்தெடுப்பதற்கு இருபது ஆண்டகளுக்கு முந்தைய சமுதாய அமைப்பில் உள்ள வழிகாட்டும் கூறுகளை வெளிச்சப்படுத்தவும் வழிவகுக்கும். நாவல்களில் காணலாகும் நல்லிணக்க வெளிப்பாடுகளைக் கீழ்வரும் நிலைகளில் ஆராயலாம்.

1. குடும்ப - சமூக உறவுகளை வளர்க்கும் அம்சங்கள்
2. சக சயமத்தினருடனான நல்லிணக்க வெளிப்பாடுகள்

## குடும்ப – சமூக உறவுகளை வளர்க்கும் அம்சங்கள்

தமிழக - இலங்கை முஸ்லிம்களிடம் உள்ள வட்டாரச் சார்புடன் கூடிய பல வழக்கங்கள் குடும்ப-சமூக உறவுகளை வளர்ப்பனவாக உள்ளன. கூரை வேய்தலில் பங்கேற்றல், திருமணப்பந்தல் அமைத்தலில் பங்கேற்றல், இறப்பு வீட்டாருக்கு உணவு வழங்குதல், சஹன் சாப்பாடு, பயணக்காசுகை முழுத்தம் வழங்குதல், கொண்டான் குடுத்தான் முறை போன்ற வழக்கங்களை இந்த அடிப்படையில் குறிப்பிடலாம்.

வீடுகளுக்குக் கூரை வேய்தல், திருமணத்திற்காகப் பந்தல் அமைத்தல் போன்றவற்றில் அண்டை வீட்டாரும் உறவினர்களும் நண்பர்களும் எந்தவிதமான பிரதி பலனும் பாராமல் பங்கேற்கும் பண்பாட்டினை இலங்கை இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்கள் வெளிப்படுத்தியுள்ளன.

வீட்டின் பழைய மேற்கூரையை மாற்றிப் புதிய கூரை வேய்வதற்கு ஒருவர் முடிவு எடுத்து விட்டால், காலைப் பொழுதில் அவர் தனது வீட்டிலுள்ளவர்களுடன் இணைந்து மேற்கூரையைப் பிரிக்க ஆரம்பிப்பார். இக்காட்சியைப் பார்க்கும் அண்டை வீட்டார் மற்றும் உறவினர்கள் எந்தவித அழைப்புமின்றி அவர்களாகவே முன்வந்து கூரைபிரிக்கும் பணியில் தங்களையும் ஈடுபடுத்திக் கொள்வார்கள். கூரை பிரிக்கப்பட்டதும் வெயிலில் வீட்டை நன்றாகக் காயவிட்டுவிடுவர். பிற்பகலில் மீண்டும் அனைவரும் கூடி புதிய கூரை வேயும் பணியில் வீட்டுக்காரருடன் ஈடுபடுவர். பொழுது சாய்வதற்குள் கூரை வேயப்பட்டுவிடும்.

எந்தவிதமான கூலியும் எதிர்பாராமல் யார் வீட்டில் கூரை வேயும் பணி நடந்தாலும் அண்டை அயலார் இவ்வாறு பங்கேற்பது கிழக்கிலங்கைப் பகுதியில் இயல்பான ஒன்றாக உள்ளது. கூரை வேய்வதற்குத் தானாக முன்வந்து உதவியவர்களுக்கு வீட்டுக்காரர்கள் அரிசிமாவு ரொட்டியுடன் இறைச்சியைப் பரிமாறித் தங்கள் நன்றியினைச் செலுத்துவர். அனைவரும் மகிழ்வுடன் அளவளாவி உண்டபின் கலைந்து செல்வர் (கா.எ.நி., பக்.61-62).

இந்தப் பண்பாடு ஓர் அர்த்தத்தில் ஏழைகளின் தேவைகளை நிறைவு செய்யப் பொருளாதார ரீதியாகப் பங்கேற்க முடியாவிட்டாலும் உடலுழைப்பு மூலமாவது பங்கேற்கும் நல்லிணக்க மாண்பினைக் காட்டுகிறது.

தமிழகத்தின் தென்கடற்கரைக் கிராமச் சூழலைச் சித்திரிக்கும் துறைமுகம் நாவலில் வரும் மம்மாத்திலு, தன் வீட்டுக்குக் கூரை வேயக் கூலி கொடுக்கக் காசில்லாமல், நாவர் தர்ஹாவுக்கு நேர்ச்சை செய்து காணிக்கையாய்க் காசு போட்டு வைத்திருந்த உண்டியலை உடைத்துக் காசு எடுத்துக் கூரை வேயும் காட்சியை (ப.252) மேற்கண்ட பண்பாட்டு நிகழ்வோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது, சாதாரணக் கீழ்த்தட்டு மக்கள் மத்தியில் நிலவி வந்த ஒத்துழைப்பு மூலம் உறவு வளர்க்கும் உன்னதத்தை அறியலாம். திருமணப்பந்தலையும் கூலி கொடுத்து அமைக்கும் வழக்கம் இலங்கைத் தமிழ் முஸ்லிம்களிடம் முன்பு இருந்ததில்லை. உறவினர் நண்பர்கள் அனைவரும் சேர்ந்தே பந்தல் போடும் வழக்கம் இருந்துள்ளது (மூ.மு., ப.37).

ஊருக்குள் என்ன விசேஷங்கள் நடந்தாலும், மங்கல நிகழ்ச்சியாய் இருந்தாலும் சரி, அமங்கலக் காரியமாய் இருந்தாலும்

சரி கூலி என்ற சொல்லுக்கே இடம் வைக்காமல் சகல வேலைகளையும் எமது இளைஞர்களே பொறுப்பேற்றுச் செய்து முடிப்பார்கள். கிணறுகளிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து நிறைப்பதிலிருந்து வைபவம் முடிந்து எச்சிற் பாத்திரங்கள் தேய்ப்பது வரை எல்லா அலுவல்களிலும் இளைஞர்கள் தம் சொந்த காரியம் என நினைத்துச் செயலாற்றுவர் (அ.ஓ., ப.180).

இவ்வாறு குடும்ப - சமூக அமைப்பில் உள்ள பங்கேற்பு தற்காலத்தில் அருகிவிட்டது. இதற்குக் கூரை வீடுகள் சிமெண்ட் கட்டிடங்களாக மாறிவருவதும் திருமணங்கள் மண்டபங்களில் நிகழ ஆரம்பித்திருப்பதும் போன்ற நவீன வளர்ச்சிகள் ஒரு காரணமாக இருந்தாலும் இந்த நவீன அமைப்பிலும் கூட முற்கூறிய அளவிற்கு ஒத்துழைப்பு இல்லை என்பது கவனத்திற்குரியது. என்றாலும் கிராமப்புறங்களில் இப்பண்பாடு இன்றும் மறைந்து விடாமல் இருப்பது ஆறுதல் தருவதாய் உள்ளது.

ஒருவர் இறந்து விட்டாலும் இறப்பு நிகழ்ந்த வீட்டில் சில நாட்கள் சமையல் நடக்காது. அண்டை வீட்டாரும் உறவினருமே மூவேளைகளுக்குமான உணவினைக் கொடுத்து அனுப்புவர் (மூ.மு., ப.174) இலங்கை காத்தன்குடிப் பகுதியிலுள்ள இவ்வழக்கம் இலங்கையிலும் தமிழகத்திலும் உள்ள முஸ்லிம்களிடம் பரவலாக உள்ளது. இழப்பினைச் சந்தித்த குடும்பத்தாரின் துக்கத்தில் பிறரும் பங்கேற்பதற்கு இவ்வழக்கம் ஒரு வாயிலாக அமைகிறது.

திருமணம் போன்ற விசேஷங்களின் போது கூட்டாக அமர்ந்து ஒரே தட்டில் உணவருந்தும் வழக்கம் தமிழகத்திலும் இலங்கையிலும் முன்பிருந்த ஓர் அரிய வழக்கமாகும். இதனைச் 'சஹன் சாப்பாடு' என்றழைப்பர். சஹன் என்பது முலாம் பூசப்பட்டு அதன் மீது பூவேலைப்பாடுகள் அமைந்த பெரிய உலோகத் தட்டினைக் குறிக்கும். ஒரு தட்டுக்கு நான்கு முதல் ஆறு பேர்கள் வரை அமர, நெய்ச்சோறு, தட்டின் நடுவே குவிக்கப்பட்டு, ஆட்டுக்கறி அக்குவியலின் மீது கணிசமாக வைக்கப்படும். யாராவது ஒருவர் பிஸ்மி (இறையருளால் துவக்கல்) சொல்ல அனைவரும் சாப்பிட ஆரம்பிப்பர் (சா.கூ., ப.87); (அ.ஓ., ப.185).

இலங்கை இஸ்லாமியச் சமூக வரலாற்று ஆய்வாளர் எம்.வை. ஏ. அப்துல்காதர் இவ்வழக்கம் தொடர்பான சில தகவல்களைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்: ஒருவர் வீடு கட்டும்போது வெளிவராந்தாவை அடுத்து வரும் சாலையை மிகவும் விசாலமானதாகவே அமைப்பார். பலபேர் ஒரே நேரத்தில்

உட்கார்ந்து உணவருந்தக் கூடியவாறு இருக்க வேண்டுமென்பதே காரணமாகும். சில வேளைகளில் போட்டிக்கும் வீடுகள் அமையும். ஒருவர் முந்நூறு பேருக்கு 50 சஹனுக்கு வசதியாக அமைத்தால் மற்றவர் தனது வீட்டை அறுநூறு பேருக்கு 100 சஹனுக்கு வசதியாக அமைக்கும் மனப்பாங்கு இருந்து வந்தது. இது அவர்களின் விருந்தோம்பும் பண்பைக் காட்டுகிறது.[49]

முன்பின் அறியாதவர்கள் கூட, சஹனில் ஒன்றாகச் சாப்பிடும்போது ஒருவருக்கு ஒருவர் முகத்துக்கு முகம் புன்முறுவலுடன் அறிமுகமாகிக் கொள்வதும், பரிமாறப்படும் உணவினை உடன் சாப்பிடக் கூடியவர்கள் நன்றாகச் சாப்பிட வேண்டுமென்று பகிர்தலும், ஒன்றாக அமர்ந்து ஒரே தட்டில் சாப்பிட்டவர்கள் என்ற அறிமுகம் பின்னர் நட்பாக உறவாகத் தொடர்வதற்கும் இவ்வழக்கம் வழி செய்கிறது.

### சக சமயத்தினருடனான நல்லிணக்க வெளிப்பாடுகள்

இன்று தனி மனிதர்களுக்கு இடையில் ஏற்படும் சாதாரணப் பிரச்சினைகள் கூடச் சமயச்சாயம் பூசப்பட்டுப் பெரும் கலவரங்களுக்குக் காரணமாய் அமைந்து விடுகின்றன. ஒரு பிரச்சினை எழும்போது அதற்குரிய காரணத்தின் அடிப்படையில் அதனை அணுகாமல் உணர்ச்சிக்கு இடம் கொடுக்கப்பட்டு, சமயச்சாயம் பூசப்பட்டுத் துவேச நோக்குடன் அணுகும் துரதிருஷ்ட சூழல் இன்று உருவாகி விட்டது. இதனால் சமயச் சூழலில் வாழ்பவர்களிடையே பகைமையும் விரிசலும் ஏற்பட்டு விடுகிறது. எனவே சக சமயத்தாரைப் பற்றியும் சக சமயங்களைப் பற்றியும் புரிதல் ஏற்படுத்துவது காலத்தின் தேவையாக உள்ளது. எண்பதுகளில் வெளியான இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்கள் சித்திரிக்கும் சகசமயத்தினருடனான நல்லிணக்க வெளிப்பாடுகள் குறைவாக இருந்தாலும் முக்கியப் பதிவுகளாகக் கொள்ளப்பட வேண்டியவை ஆகும்.

இஸ்லாமியச் சமூகப் பின்புல நாவல்களில் சிலவே சகசமயத்தினருடனான நல்லிணக்கச் சித்திரிப்புகளைத் தருகின்றன. பொதுவாகப் பிற சமயப் பாத்திரப் பங்கேற்புகள் மிகக் குறைவாகவே இஸ்லாமியச் சமூக நாவல்களில் உள்ளன. இதற்கு மூன்று காரணங்களைக் கூறலாம்.

அ. முஸ்லிம்களின் குடும்ப - சமூகப் பிரச்சினைகளை மட்டுமே கதைக் கருவாகப் படைப்பாளிகள் கொண்டமை

ஆ. இஸ்லாமியக் குடும்ப - சமூகச் சூழலை மட்டுமே கதைக் களமாகக் கொண்டமை

இ. இந்நாவல்கள் பெரும்பாலும் இஸ்லாமிய இதழ்களில் தொடர்களாக வந்தவை ஆகும். இந்த இதழ்கள் முஸ்லிம்களை மட்டுமே பெரும்பான்மை வாசக வட்டமாகக் கொண்டுள்ளதால், அவர்களின் ஆர்வத்திற்கு ஏற்ப இஸ்லாமிய சமூகச் சித்திரிப்பை மட்டுமே கதையாகக் கொடுத்தமை

என்றாலும் சில படைப்பாளிகள் சக சமயத்தினருடனான நல்லிணக்கச் சூழலை வெளிப்படுத்துவதில் ஆர்வம் காட்டியுள்ளனர். நாவலாசிரியர் ஹிமானா சையத் தனது 'புயலில் ஒரு பூ' நாவல் முன்னுரையில் பின்வருமாறு குறிப்பிடுவது இதனை உறுதி செய்கிறது.

"இன மத வேறுபாடற்ற சமுதாயக் கூட்டு வாழ்வுக்கு முகவை மாவட்டத்தின் கிழக்குக் கரைப்பகுதி ஒரு முன்னுதாரணம் என்றால் மிகையாகாது. இப்பகுதி மக்களின் கள்ளங்கபடமற்ற அன்பையும் பரஸ்பர மனிதாபிமானப் பரிமாற்றல்களையும் கதை முழுவதும் இழையோடச் செய்திருக்கிறேன்" (ப.15).

புயலில் ஒரு பூ நாவலுக்கான அணிந்துரையில், "சாதி இன மத வேறுபாடுகளைக் கடந்த மனித நேயத்தை இராஜசேகரன், முனியம்மா போன்ற பாத்திரப் படைப்புகளின் மூலம் ஆசிரியர் நிறுவியுள்ளார். ஒரு காலத்தில் ஆமினாவின் கணவன் அஹமதால் உருவாக்கப்பட்ட வியாபாரியாகிய இராஜசேகரன், ஆமினா துன்பப்படும் போதெல்லாம் ஓர் உடன்பிறந்த சகோதரனாக வந்து உதவுவது உண்மையான சகோரத்துவத்தை உணர்த்துகிறது" என்று மு. சாயபு மரைக்காயர் மதிப்பீடு செய்வது, சக சமயத்தாருடனான உறவு மேம்பாட்டினை வெளிப்படுத்தும் படைப்பாளியின் நோக்கத்தைப் புலப்படுத்துகிறது.

கிறிஸ்தவரான கவுரியலின் இழப்புக்காக வருந்தும் மீரான் பிள்ளையைத் துறைமுகம் நாவல் சித்திரிக்கும் போது (ப.189) மனிதத் தத்துவத்தின் சாகாத்தன்மை மதங்கடந்து வெளிப்படுகிறது.

ஐதுரோஸ் முதலாளியின் சேவகர் லூக்காஸ் பற்றி துறைமுகம் நாவலில் உள்ள பதிவுகள் சகசமயத்தினருடனான நல்லிணக்கத்தின் பரிமாணத்தை உள்ளங்கவரும் விதத்தில் வெளிப்படுத்துகின்றன. ஐதுரோஸ் முதலாளியின் அனைத்துச் சேவகரும் பிரிந்து சென்று விட்டனர். ஆனால் அவரை நிழல்போல்

தொடர்ந்து மனப்பூர்வமாகப் பணியாற்றிய லூக்காஸ் அவரை விட்டுப் போகவே இல்லை. அவருடைய துயரமான நாட்களில் அவருடைய வீட்டு வளையில் தூசி படிந்த நாற்காலிகளைத் துடைத்துக் கொண்டு தூணில் சாய்ந்து உட்கார்ந்து தூங்கி நாட்களைக் கடத்தினான். முதலாளியின் மரணம் அவனை நடுங்க வைத்தது. அழுது சிவந்த கண்களுடன் லூக்காஸ் ஒரு பக்கம் தளர்ந்து கிடந்தான். என்னவெல்லமோ புலம்பிக் கொண்டிருந்தான் (ப.165) என்ற சித்திரிப்பும்;

ஐதுரோஸ் முதலாளியின் சடலத்தை நல்லடக்கம் செய்யத் தூக்கிச் செல்லும்போது சந்தூக்கின் பின்பகுதிக் கால்களை மீரான் பிள்ளையும் லூக்காஸு"ம் தோளில் ஏந்தினர் (ப.166) என்ற சித்திரிப்பும்; 'எனக்கப் பொன்னான மோலாளி. . நீங்கப் போறீளா' என்றவாறு நெஞ்சில் அறைந்தவாறு லூக்காஸ் கீழே சாய, அவனின் தலையை மீரான் பிள்ளை மடியில் தாங்கிக் கொள்ளும் (ப.166) மகத்தான காட்சியும் சமயங் கடந்த மனித உள்ளங்களின் நேசப் பிணைப்பை வாசிப்பாளர்களிடம் கண்ணீரோடு வரவு வைக்கும் பாங்கில் அமைந்துள்ளன.

இஸ்லாமியச் சமூகச் சூழலில் ஊடாடி நிற்கும் பிற சமயத்தவர்களுடன் உள்ள நல்லிணக்க மாண்புகளை வெளிப்படுத்துவதற்கான களங்களும் கதைச் சூழலும் நிரம்ப இருந்தும் படைப்பாளிகள் அதில் அதிகம் கவனம் செலுத்தவில்லை. ஹிமானா சையத், தோப்பில் முகம்மது மீரான் ஆகியோரே இந்த உறவு நிலைகளை மிக நுட்பமாக வெளிப்படுத்தியுள்ளனர். இது பாராட்டிற்கும், படைப்பாளிகள் பின்பற்றுவதற்கும் உரியதாகும்.

## முடிவுரை

கல்வி - பொருளாதாரம் - சமூக மதிப்பு சார்ந்தும், பெண்ணியம் சார்ந்தும், சமய - சமூக - வட்டார நம்பிக்கைகள் - சடங்குகள் சார்ந்தும், நவீனத்துவங்களின் வருகை சார்ந்தும், சமுதாய அளவிலும் சக சமயத்தார் அளவிலுமான கலத்தல் சூழல் சார்ந்தும் தமிழ் முஸ்லிம்களின் வாழ்வும் பண்பாடும் எத்தகைய நிலையில் அமைந்துள்ளன என்பது இங்கு ஆராயப்பட்டுள்ளது. சமயம் சார்ந்த பல பண்பாட்டுக் கூறுகள் நிறைபேறு உடையதாக இருப்பதையும், சமயச் சார்பு ஏற்றப்பட்ட சமயத்திற்கு முரணான பண்பாட்டுக் கூறுகள் வழக்கிழந்து உள்ளதும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. கால மாற்றத்திற்கு ஏற்ற சமூக வளர்ச்சிக்குப் பயன்படாத பெரும்பான்மையான பண்பாட்டு

அம்சங்கள் வாழ்வியலில் இருந்து விடைபெற்று விட்டதை அறிய முடிகிறது.

கல்வி- பொருளாதாரம் - சமூகப் மதிப்புச் சார்ந்து ஏற்பட்டுள்ள சமூக மாற்றங்கள் வரவேற்புக்குரியன. என்றாலும் அசல் சமய வாழ்க்கையைப் பின்பற்ற வேண்டும் என்ற முனைப்பில், காலம் காலமாக மக்களிடம் இருந்த பல கலாச்சார அம்சங்கள் - குறிப்பாகப் பிறசமயத்தாரின் கலாச்சாரங்கள் விடப்படுவது குறித்து மறு ஆய்வு தேவைப்படுகிறது. பிற சமயத்தாருடனான நல்லிணக்கம் இந்திய - இலங்கைச் சமூக அமைப்புகளில் இன்று சிதைந்து வரும் சூழலில், சமய நம்பிக்கைகளைப் பாதிக்காத பிற சமய - சமூகக் கலாச்சாரப் பண்பாட்டு அம்சங்களைப் பேணுவதில் ஒன்றும் தவறில்லை. அப்படிப்பட்ட பேணுதல் முஸ்லிம்களுக்கும் பிற சமயத்தாருக்கும் இடையே ஏற்பட்டு வரும் அன்னியத்தனங்களைக் குறைக்கும், நெருக்கமான ஒரு பாண்பாட்டுச் சூழலை ஏற்படுத்தும். இந்தப் பண்பாட்டு அம்சங்களை வளர்த்தெடுப்பதற்கான வாய்ப்புகள் குறித்த ஆய்வு இன்று பண்பாட்டுத்தளத்தில் தேவை. இங்குப் புதினங்களில் மேற்கொள்ளப்பட்டுள்ள ஆய்வு போன்று பிற இலக்கியங்களிலும் மேற்கொள்ளப்படும் ஆய்வு அத்தேவையை ஓரளவே பூர்த்தி செய்யும். சமூகக் கள ஆய்வு மூலம் நடத்தப்படும் தேடலே அதனைப் பரிபூரணப்படுத்தும். அதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படுவது காலத்தின் தேவை.

# அடிக்குறிப்புகள்

1. ஜான் சாமுவேல், ஜி., இலக்கியத்தில் சமுதாயப் பார்வை, பக்.3-4.
2. அமீர் அலி, என்.ஏ., வள்ளல் சீதக்காதியின் வாழ்வும் காலமும், பக்.46-47.
3. கமால், எஸ்.எம்., செந்தமிழ் வள்ளல் சீதக்காதி, பக்.16-17.
4. Manickam, S., Studies in Missionary History, p.23.
5. இலங்கை முஸ்லிம் சமயப் பண்பாட்டு அலுவல்கள் திணைக்களம் வெளியிட்ட எட்டு மாவட்ட முஸ்லிம்களின் வரலாறும் பண்பாடும் நூல்களின் அடிப்படையில்.
6. திருக்கல்யாணம்: உலக முடிவு நாளுக்குப் பின்னால் சுவனத்தில் முகம்மது நபி (ஸல்) அவர்களுக்குத் திருமணம் நடைபெறும் என்ற நம்பிக்கை உள்ளது. அக்காட்சியைக் காண மறுமையில் பேறு பெற்றோர் மிக உயர்ந்தவர்கள் என்பது நம்பிக்கை.
7. பாத்திஹா: பாத்திஹா என்பதற்குத் திறப்பு என்று பொருள். திருக்குர் ஆனின் முதல் அத்தியாயத்திற்கு உரிய பெயராக இது திகழ்கிறது. பாத்திஹா ஓதலில் திருக்குர்ஆனின் முதல் அத்தியாயமான அல்பாத்திஹாவுடன், யாசீன், அல் இக்லாஸ், அல் ஃபலக், அந்நாஸ் ஆகிய அத்தியாயங்களையும் ஓதி இறைவனிடம் பிரார்த்திப்பர். ஹத்தம்: ஹத்தம் என்பதற்கு 'நிறைவு செய்தல்' என்று பொருள். ஒரு நல்ல நோக்கத்திற்காக குர்ஆனின் முப்பது தொகுதிகளையும் ஒரு முறை முழுமையாக ஓதி நிறைவு செய்வதை ஹத்தம் என்பர்.
8. சாரதா, கு., சின்னப்ப பாரதியின் நாவல்களில் நடப்பியல் ஆய்வு, ப.61.
9. முகம்மது சமீம், ஒரு சிறுபான்மை சமூகத்தின் பிரச்சனைகள் - பாகம் 1, ப.77.
10. ஷம்சுத்தீன் மவ்லானா, ஜே.எம்., 'வாழ்வியலும் பண்பாடும்', அம்பாரை மாவட்ட முஸ்லிம்கள், ப.190.
11. மௌலூது: மௌலூது என்றால் 'பிறப்பு' அல்லது 'பிறப்பிடம்' என்று பொருள். முகம்மது நபி (ஸல்) அவர்கள் மீது ஷெய்கு சதக்கத்துல்லா அப்பா அரபு மொழியில் பாடிய புகழ்மாலையாக இது திகழ்கிறது.
12. Ali, S.A., 'Family Life in Islam'; Islam at a Glance, p.56.
13. ஜுனைதா ஷெரீப், காட்டில் எரிந்த நிலா - முன்னுரை, ப.4.

14. மேற்படி, ப.5.
15. நாவலாசிரியர் ஜுனைதா ஷெரீபுடன் பேட்டி, கொழும்பு (இலங்கை), 24.10.2002.
16. திருக்குர்ஆன் தமிழாக்கம், இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட், பக்.1020-21.
17. அபூ அஸியா, ஜின்கள் ஓர் ஆய்வு, ப.46.
18. ஹபீப் முஹம்மது, K.V.S. (தொகுப்பாசிரியர்), வேத வரிகளும் தூதர் மொழிகளும், ப.198.
19. ஐவாத் மரைக்காயர், 'வாழ்வியலும் பண்பாடும்', புத்தளம் மாவட்ட முஸ்லிம்கள், ப.132.
20. ஹபீப் முஹம்மது, K.V.S., (தொ.ஆ), வேத வரிகளும் தூதர் மொழிகளும், ப.198.
21. ஐவாத் மரைக்காயர், 'வாழ்வியலும் பண்பாடும்', புத்தளம் மாவட்ட முஸ்லிம்கள், ப.153.
22. ஜெமீல், எஸ்எச்.எம்; முன்னாள் ஆலோசகர், முஸலிம் சமய கலாச்சார அலுவல்கள் திணைக்களம், இலங்கை, பேட்டி: மதுரை, 02.08.2001.
23. ஷம்சுத்தீன் மவ்லானா ஜே.எம்; 'வாழ்வியலும் பண்பாடும்', அம்பாரை மாவட்ட முஸ்லிம்கள், ப.190.
24. மேற்படி; பக்.192-193.
25. திக்குவல்லை ஸப்பான், 'வாழ்வியலும் பண்பாடும்', மாத்தறை மாவட்ட முஸ்லிம்கள், ப.193.
26. ஷம்சுத்தீன் மவ்லானா ஜே.எம்; 'வாழ்வியலும் பண்பாடும்', அம்பாரை மாவட்ட முஸ்லிம்கள், ப.193.
27. முஃப்லிஹா, எம்எச்; வாசகர் கடிதம், சாணைககூறை, ப.6.
28. அப்துல்காதர், எம்.வை.ஏ; 'வாழ்வியலும் பண்பாடும்', கம்பஹ மாவட்ட முஸ்லிம்கள், ப.143.
29. சமீம், ஏ.எம்; இலங்கை முஸ்லிம்களின் திருமண சம்பிரதாயங்கள், ப.18.
30. மேற்படி;ப.8.
31. மேற்படி;பக்.13-14.
32. மேற்படி;ப.44.
33. மேற்படி;பக்.19-20..
34. அனல், எம்.எஸ்.எம்; 'வாழ்வியலும் பண்பாடும்', அநுராதபுர மாவட்ட முஸ்லிம்கள், ப.59.

35. கலிமா: இறைநம்பிக்கையை மொழியும் வாசகம். இரண்டாம் கலிமா: அஷ்ஹது அ (ன்)ல்லா இலாஹ இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக லஹுவஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸுலுஹு (நிச்சயமாக வணக்கத்திற்குரியவ்ன அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையைமில்லை என்று நான் சாட்சி கூறுகிறேன். இன்னும் நிச்சயமாக முஹம்மது (ஸல்) அவர்கள் அவனுடைய அடியாரும் திருத்தூதருமாக இருக்கிறார் என்ற நான் சாட்சி கூறுகிறேன்.

36. வ இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிவூன் : இறைவா... உனக்காகவே வழுகின்றோம். உன்னிடமே மீளக்கூடியவர்களாக இருக்கிறோம்.

37. ஐவாத் மரைக்காயர், 'வாழ்வியலும் பண்பாடும்,' புத்தளம் மாவட்ட முஸலிம்கள், ப.157.

38. மௌனகுரு, சி; மட்டக்களப்பு மரபு வழி நாடகங்கள், ப.98.

39. Report on Public Instruction of the Madras Presidency for 1911-12. quinguenniel report.

40. Panikar, K.M; A. Survey of Indian History, P.285.

41. திவான், இந்திய விடுதலைப் போரில் தமிழக முஸ்லிம்கள், ப.57.

42. Tanuk, B.N; Non-Co-operation Movement in India 1921, A Historical Study, p.106.

43. Ashok Mehta & Achut Patwaradhan, The Communal Triangle In India, p.87.

44. முகம்மது சமீம், ஒரு சிறுபான்மை சமூகத்தின் பிரச்சனைகள், பாகம்-1, பக்.179-180.

45. ஜெமீல், S.H.M;. முன்னாள் ஆலோசகர், இலங்கை அரசின் முஸ்லிம் சமய கலாச்சார அலுவல்கள் திணைக்களம், பேட்டி02.08.2001., மதுரை.

46. ஸஹீஹுல் புஹாரி, பாகம்.6, ப.495.

47. மேற்படி;ப.502.

48. மேற்படி;ப.492.

49. மேற்படி;ப.1, ப.106.

50. மேற்படி;ப.6., ப.432.

51. அப்துல்காதர், எம்.வை.ஒ; 'வாழ்விலும் பண்பாடும்', கம்பஹா மாவட்ட முஸ்லிம்கள், ப.149.

# சொல்லடைவு

ஈ



உ

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| இலக்கிய இதழ்கள் | 110.00 |
| பண்டைத் தமிழக வரைவுகளும் குறியீடுகளும் | 80.00 |
| தமிழெனப்படுவது | 115.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கணம் & மொழியியல் | 105.00 |
| வலங்கை மாலையும் சான்றோர் சமூகச் செப்பேடுகளும் | 70.00 |
| தொல்லியல் நோக்கில் சங்ககாலம் | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (தொன்மை முதல் கி.பி.500 வரை) | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (கி.பி.501 - கி.பி.900) | 70.00 |
| பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் | 35.00 |
| திருமணம் செல்வக்கேசவராய முதலியார் | 30.00 |
| அருந்தமிழ் நூற்காவலர் அடிகளார் | 55.00 |
| சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணியமுதலியார் | 40.00 |
| மூதறிஞர் மு. இராகவையங்கார் | 40.00 |
| ம.பொ.சி. யின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு | 30.00 |
| தணிகைமணி வ.சு. செங்கல்வராயப் பிள்ளை | 50.00 |
| தட்சிணாமூர்த்தி குருமுகம் -100 | 50.00 |
| நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| ஆராய்ச்சிப் பேரறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-1 | 80.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-2 | 85.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-3 | 95.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல்கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ. நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்க பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு | 50.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |

**Pub.No. 520** இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும் **40.00**